# பதிப்புரை

''அயர்வறியாத உழைப்பாளி' என்று காந்தி ய'டிகளாலும், ''நான் அறிந்த தேசத் தொண்டர் களுள் மிக யோக்கியமானவர்சளில் முதல் வரிசை யில் உள்ள ஒருவர் என் நண்பர் அய்யாமுத்து அவர்கள். குணம், சாமர்த்தியம், அறிவு மூன்றிலும் குறைவில்லாதவர்'' என்று ராஜாஜி அவர்களாலும் பாராட்டப்பெற்ற கோவை அய்யாமுத்து அவர் களுக்கு இப்பொழுது வயது எழுபத்தொன்று.

தமிழ்நாட்டில் கதர் இயக்கத்தின் தந்தை எனப் போற்றப்படும் அய்யாமுத்து அவர்கள், 'குடி நூல்' என்ற சிறந்த பத்திரிகையை நடத்தி வந்தார். கதர் உற்பத்தி, பிரசார வேலைகளோடு பல தேசீய மகா நாடுகளிலும் தலைமை வகித்தார். சுதந்திரப் போராட்டத்தில் பலமுறை சிறை சென்றார். அவ்ரைப்போலவே அவர் துணைவியார் கோவிந்தம் மாள் அவர்களும் நாட்டு விடுதலைக்காகப் பலமுறை சிறைசென்ற தேசபக்தர்.

அய்யாமுத்து அவர்களுக்குக் கதர்த்தொண்டின் காரணமாக, காந்தியடிகளுடன் நெருங்கிய தொடர்புகொள்ளும் வாய்ப்புக் கிடைத்தது. கண் கண்ட தெய்வமாக விளங்கிய காந்தியடிகளுடன் தமக்குள்ள தொடர்பினால் தாம் அடைந்த பயனை யும் பெருமிதத்தையும் தமிழ் மக்களுடன் பகிர்ந்து கொள்கிறார் அய்யாமுத்து.

திரு. அய்யாமுத்து அவர்களின் நெருங்கிய நண்பர் திரு. ஏ. கே. செட்டியார் அவர்கள். காந்தியடிகளிடமும் திரு. அய்யாமுத்து அவர்களிடமும் உள்ள ஈடுபாட்டின் காரணமாக திரு. செட்டியார் அவர்கள் இந்த நூல் சிறந்த முறையில் வெளிவர பலவகையிலும் உதவினார்கள். அவர்களின் அன்பிற்கு எங்கள் நன்றி என்றும் உரியது.

காந்தி மகானின் நூறாவது பிறந்ததின ஆண்டு விழாவில், 'காந்தி தரிசனம்' என்ற இச்சிறு மலரை அண்ணல் காந்தியடிகளின் திருவடியில் வைத்து வணங்குகிறோம்.

சென்னை
2-10-'69

க. அ. செல்லப்பன்
பாரி நிலையம்

dear sister muthu,

your letter is
quite satisfactory

Sevagram yours
Wardha Bapu
15/6/40

காந்தி அடிகள் கடிதம்

24 II/39 Madras
22. 2. 39

My dear Bapu

All troubles come together!

Ayyamuthu is going to

jail. I sent for him and

asked him to go. Vinayaka

Shankarlal has shown

me your letter to him.

He has been most loyal

and has worked with

zeal, energy and intelligence,

amidst great difficulties

and struggling with

unscrupulous enemies

I feel he deserves your love & blessings. Keep him with you for some time.

Love

Yrs

Raja

ராஜாஜியின் கடிதம்

# 1

## கோயமுத்தூரிலே

1921-ம் வருஷம்.

மாதம் தேதி ஞாபகத்தில் இல்லை.

மகாத்மா காந்தி கோவைமா நகருக்கு விஜயம் செய்தார்.

ஜனங்கள் திரள் திரளாக அவிஞசிரோடில் கார னேஷன் பார்க்கை (இப்போது சிதம்பரம் பூங்கா) நோக்கிப் போய்க்கொண்டிருக்கிறுர்கள்.

நான் எனது கடைத் திண்ணையில் நின்று கொண் டிருக்கிறேன்.

எனது கடைக்கு எதிர்ப்புறம் கடைவைத்திருந்த போட்டோகிராபர் பிரபு காமராவுடன் என்னிடம் ஓடிவருகிறுர்.

என்ன காந்தியைப் பார்க்க நீங்கள் வரவில்லையா? என்ற கேள்வியோடு என்னை மேலுங்கீழுமாகப் பார்க்கிறுர்.

அவர் கதர் ஜிப்பாவும் வேஷ்டியும் அணிந்திருக் கிறுர். நானே கால் சட்டை, டை, காலரோடு நிற் கிறேன். நான் செய்திருந்த வியாபாரமும் அசல் சீமைச் சரக்குகள். என் கடையில் வெள்ளைக்காரத் துரைகளும் துரைசானிகளும் அணியும் தொப்பிகளும், காலணிகளும் ஏராளமாகக் குவிந்திருந்தன.

## 2

நேரே எனது சைக்களில் ஏறிக் கருப்பக்கவுண்டன் வீதியிலிருந்த காங்கிரஸ் ஆபீசுக்குச் சென்று எட்டு முழ ஆந்திராக் கதர்வேஷ்டியும். ரெடிமேட் ஜிப்பாவும், காந்தி குல்லாவும் வாங்கி, வீட்டிற்குவந்து, வேஷத்தை மாற்றிக் காரனேஷன் பார்க் போய்ச் சேருகிறேன்.

மைதானம் முழுவதும் மாபெரிய கூட்டம்.

கூட்டத்தின் நடுவில் ஒரு மேடை காண்கிறது.

மகாத்மா காந்தியை வரவேற்கக் கையில் பூமாலைகளுடன் பலர் காத்து நிற்கிருர்கள்.

கூடியிருக்கும் ஜனங்கள் நிலைகொள்ளாமல், காந்தி வரும் திசையைப் பார்தத வண்ணமா யிருக்கிருர்கள்.

குறித்த நேரத்தில் ஒரு பழைய டூரர்காரில் காந்தி வருகிருர்.

ஜனங்கள் எல்லோரும் ஒரே கும்பலாகக் காரைச் சூழ்ந்து கொள்ளுகிருர்கள்.

காரின் மிதி பலகைமீதும், முன் மூடியின்மீதும் குரங்குகள் மாதிரிப் பையன்கள் தொத்துகிருர்கள்.

கூட்டத்தை விலக்கப் போலீசாரும் பிறரும் படாதபாடு படுகிருர்கள்.

என்ன செய்தும் மகாத்மா காரைவிட்டிறங்க முடிவதில்லை. இறங்கிஞலும் ஜனங்கள் அவரை மேடைக்குச் செல்ல வழிவிடுவார்கள் என்று தோன்றவில்லை.

காரின் கதவு எப்படியோ திறக்கப்படுகிறது. காந்தியைக் கைலாகு கொடுத்துக் கீழே இறக்குகிருர்கள். ஒருவர் அவரைச் செந்தூக்காய்த் தூக்கிக் கொண்டு மேடை நோக்கி விரைந்து செல்கிருர்! மகாத்மா பத்திரமாக மேடைமீது நின்று தமது வலது கையை உயர்த்தி எல்லோரையும் அமருமாறு ஜாடை செய்கிருர்.

எல்லா கூச்சலும், குழப்பமும், கோஷமும் நிற்கிறது. எல்லோரும் அமர்கிறார்கள். அமைதி நிலவுகிறது.

## கோவை நகரசபை வரவேற்பு

கோவை நகரசபைத் தலைவர் திரு சி. எஸ். இரத்தினசபாபதி முதலியார் அவர்கள் மூலைக்கச்ச வேஷ்டி, லாங்கோட், தலைப்பாகை சமேதராய்க் காதுகளில் கடுக்கனும், நெற்றியில் விபூதியும் அணிந்தவராய், மகாத்மா காந்திக்குப் பூமாலை அணிவித்து, நகரசபையின் சார்பாக வரவேற்புப் பத்திரம் வாசிக்கிறார்.

தென்னாப்பிரிக்காவில் மகாத்மா ஆற்றிய சிறப்பான தொண்டு அப்பத்திரத்திலே பாராட்டப்படுகிறது.

அதனூடே,

''நீங்கள் தொடங்கியிருக்கும் ஒத்துழையாமை இயக்கத்தில் எங்களுக்கு நம்பிக்கையில்லை'' என்று பட்டவர்த்தனமாகக் கூறப்படுகிறது.

வரவேற்பிதழைப் பெற்றுக் கொண்ட காந்தியார் மேடைமீது எழுந்து நிற்கிறார். இடுப்பிலே ஒரு மூலைக் கச்ச வேஷ்டியும், உடலிலே ஒரு குடுத்தாவும், தலையிலே குல்லாயும் அணிந்திருக்கிறார்.

மெல்லிய, மிருதுவான, ஆனால் மிகத் தெளிவும் அழுத்தமும் கொண்ட காந்தியின் குரல் கேட்கிறது.

''கோயமுத்தூர் முனிசபல் சேர்மன், கௌன்சிலர்களே!'' என்று தமது பேச்சைத் தொடங்குகிறார்.

''என்னுடைய ஒத்துழையா இயக்கத்தில் உங்களுக்கு நம்பிக்கையில்லையென்று மிகப் பட்டவர்த்தனமாகத் தெரிவித்தது கேட்டு நான் ஏமாற்றம் அடையவில்லை. ஒத்துழையா இயக்கத்தில் நீங்கள் பங்கு

கொள்ள வேண்டுமென உங்களை நான் கேட்கப் போவதுமில்லை. ஆனால், கோவை முனிசபல் சேர்மேன் அவர்களையும் கௌன்சிலர்களையும் நான் வெகுவாகக் கேட்டுக் கொள்வதொன்றுண்டு. நீங்கள் ஒவ்வொரு வரும் உங்கள் இல்லங்களில் கைராட்டினம் வைத்து நூல் நூற்றுவருமாறு கேட்டுக் கொள்கிறேன். கதிர் முனையினிலேதான் சுயராஜ்யம் இருக்கிறதென்று நான் நிச்சயமாக நம்புகிறேன். அத்துடன் தீண்டாமை ஒழிப்புக்கும். வகுப்பு ஒற்றுமைக்கும் நீங்கள் பாடுபடு வீர்களானால் நான் மிக்க மகிழ்ச்சியடைவேன்'' என்று கணீரென்று மகாத்மா தமது பிரசங்கத்தில் குறிப்பிடு கிறார்.

## என். எஸ். இராமசாமி அய்யங்கார் இல்லத்திலே

காரனேஷன் பார்க் கூட்டம் முடிவுற்றதும் மகாத்மா ஜெயில் ரோடிலுள்ள என் எஸ். இராமசாமி அய்யங்காரின் ''பெசண்ட் ஹவுசுக்கு'' அழைத்துச் செல்லப்பட்டார்.

அந்த பங்களாவில்தான் 1917-ம் வருவும் ஓம்ரூல் கிளர்ச்சி செய்த அனிபெசண்ட் அம்மையாரும் அவரது சகாக்களான அருண்டேல், வாடியா முதலி யோரும் பிரிட்டிஷ் அரசாங்கத்தால் சிறைவைக்கப் பட்டிருந்தனர்.

என். எஸ். இராமசாமி அய்யங்கார் அந்நாளில் கோவைமாநகரில் பிரபல கிரிமினல் வக்கீலாக இருந் தார். பிரபல பிரிட்டிஷ் பாரிஸ்டர்களான நார்ட்டன் கிராண்ட் முதலானோர் அய்யங்காரின் சகாக்களாவர். ஓம் ரூல் இயக்கத்தில் தீவிரப் பங்கு கொண்டு அன்னி

பெசண்ட் அம்மையாரிடம் மிகுந்த பக்தியும் விஸ்வாசமும் கொண்டிருந்தார். கோவைச் சிறையினின்று விடுதலையானபின் கப்பலோட்டிய வ. உ. சிதம்பரம் பிள்ளை கோவையில் அய்யங்காருடனிருந்து தொழிலாளர்களை ஒன்று திரட்டி, அவர்களுக்குக் கூட்டுறவு பண்டகசாலைகள், கூட்டுறவு பாங்க் முதலியன ஏற்படுத்திக் கொடுத்துத் தொழிலாளர் முன்னேற்றத்துக்கும் நலனுக்கும் உருப்படியாகப் பாடுபட்டனர். கோவையில் முதன்முதலாகத் தொழிலாளர் சங்கத்தை அமைத்த பெருமை இவ்விருவரையே சாரும்.

மகாத்மா காந்தி கோவை வந்த தருணத்தில் இராமசாமி அய்யங்கார் காங்கிரஸ் வாதியாக விளங்கினர். கோவை மாவட்டமுழுவதும் அவருக்கு நல்ல செல்வாக்கிருந்தது.

அவரும், எம். என். நாராயணமேனன் என்பவரும் கேரளத்தில் நடைபெற்ற மாப்ளா கலவரத்தின் விபரங்களை நேரிற் காணும்பொருட்டு கள்ளிக்கோட்டை சென்றிருந்தபோது, மாப்ளா கலவரத்தைத் தூண்டச் சென்றதாகக் குற்றஞ்சாட்டப்பட்டு கைது செய்யப்பட்டனர். நாராயணமேனன் ஆயுள் தண்டனை பெற்றுர். இராமசாமி அய்யங்கார் அன்னி பெசண்டின் ஆலோசனைப்படி மன்னிப்புக் கோரி விடுதலை பெற்றுர். அதுமுதல் அய்யங்காரின் அரசியல் வாழ்வும், பொது வாழ்வும் சோர்வுற்றன. அவருடைய வக்கீல் தொழிலும் அக்காலத்திற்குப் பின் அதிகமாகச் சோபிக்கவில்லையென்றே கூறலாம்.

இராமசாமி அய்யங்கார் என்னிடம் அதிக அன்பும் நட்பும் கொண்டிருந்தார். பிற்காலத்தில் என்மீது தொடரப்பட்ட கிரிமினல் வழக்கில் சத்யமங்கலம்

கோர்ட்டில் ஆஜராகி என்மீதிருந்த வழக்கை டிஸ்மிஸ் பெறச் செய்தார்.

அன்று, பெசண்ட் ஹவுசில் மகாத்மா காந்தி தொழிலாளர் கூட்டத்தில் பேசினார். மேடைமீது மகாத்மாவின் அருகில் வீற்றிருந்து, அவரைக் கண் குளிரப் பார்க்கவும், காதார அவர் சொற்களைக் கேட்கவும், இராமசாமி அய்யங்காரின் தயவால் எனக்கு முன் இடம் கிடைத்தது.

## காந்தி சொற் கேட்டேன்

அன்றணிந்த கதர் சட்டையை நான் தொடர்ந் தணிந்து கதர்ப்பக்தனானேன்: தேச சேவைக்கு என்னை அர்ப்பணித்துக் கொண்டேன். அந்நியப் பொருட்கள் வைத்து வியாபாரம் செய்துவந்த Rover & Co. ரோவர். அண் கோ என்ற எனக்குச் சொந்தமான வர்த்தக ஸ்தாபனத்தை மூடினேன். முதலாவது மகாயுத்தத்தில் பிரிட்டிஷாருக்கு நான் சேவை செய்ததற்காக எனக் களிக்கப்பட்டிருந்த இரண்டு தங்கப் பதக்கங்களை வைசிராயுக்குத் திருப்பி அனுப்பினேன். பாரதியாரின் பாடல்களைப் பாடிப்பாடிப் பரவசமுற்றேன்.

பணக்காரர்க்கே செல்வப் படைப்பெல்லாமும் பசியின்றி ஏழைகட்குக் கதிவேறுண்டோ? எனும் வரிகளைக் கொண்ட விருத்தப் பாக்களை இயற்றிப் பொதுக் கூட்டங்களில் பாடினேன். காரல்மார்கஸ், லெனின் ஆகிய முனிவர்களிடம் என் மனதைப் பறி கொடுத்தேன்.

# 2

## நாகபுரிக் கொடிப் போர்

1922ம் ஆண்டின் துவக்கத்திலே நான் பர்மா சென்றவன் 1923 பிப்ரவரியில் இந்தியா திரும்பினேன்.

வந்ததும் வராததுமாக காங்கிரசிலே அங்கத்தினன் ஆகித் தேசப் புனருத்தாரண வேலைகளில் மிகத் தீவிரமாகப் பங்கு கொண்டேன்.

அவ்வாண்டு நாகபுரியில் நடைபெற்ற கொடிப் போராட்டத்தில் கலந்து கொள்ள வெகுவாக விழைந்தேன். ஆனல் உள்ளூரில் ஆரம்பித்த வேலைகளைப் பொறுப்புடன் கவனிக்க யாருமில்லையாதலாலும் கோவைக் காங்கிரஸ் கமிட்டியின் காரியாலயப் பொறுப்பு என்னிடமிருந்ததாலும் என் விருப்பம் நிறைவேறவில்லை.

## வைக்கத்துப் போர்

அடுத்தவாண்டில் அதாவது 1924-ல் வைக்கத்தில் நடைபெற்ற தெருப்பிரவேச சத்யாகிரகத்தை காணச் சென்றிருந்த சமயம் அங்கு கைது செய்யப்பட்டுத் திருவனந்தபுரம் சிறையில் முதன்முதலாக எனது சிறை வாழ்க்கை தொடங்கப்பெற்றது.

மதுரை பாரிஸ்டர் ஜ்யார்ஜ் ஜோசப், K.P. கேசவ மேனன், கேளப்பன் நாயர், T. K. மாதவன், டாக்டர்

எம்பெருமாள் நாயுடு, குரூர் நீலகண்டன் நம்பூதிரி பாடு, பாலக்காடு சபரி ஆசிரம கிருஷ்ணசாமி அய்யர், ஈரோடு ஈ. வெ. இராமசாமி நாய்க்கர், திருவனந்த புரம் வக்கீல் குஞ்சுகிருஷ்ணபிள்ளை, சாத்துக் குட்டி நாயர், சமதர்சனி ஆசிரியர் பாலகிருஷ்ணபிள்ளை, சாமி சத்யவிரதன், சிட்டேடத்தில் சங்குபிள்ளை' சங்கனுசேரி பரமேஸ்வரன் பிள்ளை, மன்னத்து பத்பநாப நாயர் ஆகியோரின் நட்பும் அங்கு வாய்க் கப்பெற்றேன்.

கோவிந்தன் சாணர் என்ற ஈழவ சமுதாயப் பெரியார் வைக்கத்து சத்யாகிரக முகாமில் கண்ணுங் கருத்துமாய் உழைத்தார். பஞ்சாபிலிருந்து ஆரிய சமாஜ ஊழியர்கள் வைக்கத்தில் முகாமிட்டுச் சத்யாக் கிரகிகளுக்கு இலவசமாகப் போஜனம் அளித்தனர்.

வைக்கம் சிறையினின்றுநான் விடுதலையான நாளில் திருவனந்தபுரம் வந்திருந்த இராஜாஜி என்னைக் கண்டு தமிழ்நாட்டில் நிதி திரட்டி வைக்கத்துக்கு அனுப்பிவைக்குமாறு கட்டளையிட்டார். அதன்படியே நான் பல ஊர்களில் நிதி திரட்டி வைக்கத்துக்கு அனுப்பிக்கொண்டிருந்த சமயம், இராசிபுரத்தில் நடைபெற்ற மகாநாட்டிற்குச் சென்றிருந்தேன்.

## புதுப்பாளையம் காந்தி ஆசிரமம்

இராசிபுரம் மகாநாட்டில் எனது சொற்பொழி வைக் கேட்டு இன்புற்ற புதுப்பாளையம் மிட்டாதார் P. K. ரத்தினசபாபதிக் கவுண்டர் அவர்கள் என்னைக் கட்டிச் சுருட்டிப் புதுப்பாளையத்துக்குக் கொண்டு போய்விட்டார்.

அங்கே அவரது தென்னந் தோப்பொன்றில் காந்தி ஆசிரமக் கட்டிட வேலைகள் நடந்து கொண்

டிருந்தன. சென்றவன் அவ்வேலையில் ஈடுபட்டு அங்கே ஆறுமாதங்கள் தங்கலானேன். அங்கு ஆசிரம வேலைகளைக் கவனித்ததோடு ஹரிஜனப் பிள்ளைகளுக்கு ஒரு பாடசாலையும் ஏற்பாடு செய்தேன். ஒரு சிறிய தொண்டர் படை திரட்டித் தினம் ஒரு சேரியாகச் சென்று, சேரியைத் துப்புரவாக்கும் வேலையிலும் ஈடுபட்டேன். கைராட்டைகளில் நூல் நூற்கவும், அந் நூலைப்பெற்று நெசவு செய்யவும் ஏற்பாடுகள் செய்தேன்.

## காந்தி, தாஸ், நேரு ஒப்பந்தம்

அவ்வாண்டு பெல்காமில் நடைபெற்ற 39வது காங்கிரஸ் மகாநாட்டிற்கு டெலிகேட்டாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு அன்பர் திரு. இரத்தினசபாபதிக் கவுண்டரோடு புறப்பட்டேன்.

பெல்காம் காங்கிரசுக்கு மகாத்மா காந்தி தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருந்தார். அவர் தலைமையில் நடைபெற்றது அந்த ஒரே ஒரு காங்கிரஸ்தான்.

மூவகைப் பகிஷ்காரத்தில் ஒன்ருன சட்டசபை பகிஷ்காரத்தைக் கைவிட்டுத் தேர்தலில் நின்று ஜெயித்துச் சட்டசபைகளைக் கைப்பற்ற வேண்டுமென ஒரு கோஷ்டியார் காங்கிரசில் பலமான கிளர்ச்சி செய்து கொண்டிருந்த தருணத்தில் பெல்காம் காங்கிரஸ் கூடிற்று. காங்கிரஸ் பிளவுபட்டு, விடுதலைப் போராட்டம் பலஹீனமடையுமோவென்று பலர் அஞ்சியிருந்தனர்.

சட்டசபைப் பிரவேசத்தில் நம்பிக்கை கொண்டிருந்த கோஷ்டியார் தங்களைக் காங்கிரஸ் சுயராஜ்யக் கட்சியெனக் கூறிக்கொண்டனர்.

சட்டசபைப் பிரவேசத்தில் நம்பிக்கையில்லாதவர்கள் தங்களை மாறுதல் வேண்டாதார் என்று கூறிக் கொண்டனர்.

இந்த இருசாரர்களும் காங்கிரஸ் மகாசபையின் அங்கத்தினர்களாக இருந்து தத்தம் கொள்கைக்கேற்ப செயல்பட்டு வரலாமென்றும், மாறுதல் வேண்டாதார் கதர் தீண்டாமையொழிப்பு வகுப்பு ஒற்றுமை போன்ற நிர்மாண வேலைகளில் முழுக் கவனம் செலுத்திவர வேண்டுமென்றும், சட்டசபைக்கு உள்ளும் புறமும் சுயராஜ்யக் கட்சியினர் நிர்மாண வேலைகட்குப் பக்க பலமாய் இருக்கவேண்டுமென்றும், மாறுதல் வேண்டாத கட்சியின் சார்பில் மகாத்மா காந்தி, சட்டசபை பிரவேசக் கட்சியின் சார்பில் பண்டிதமோதிலால்நேரு தேசபந்து சித்தரஞ்சன் தாஸ், ஆகிய மூவரும் சேர்ந்து ஒரு ஒப்பந்தம் செய்தனர். இதற்கே காந்தி, தாஸ் நேரு ஒப்பந்தமெனப் பெயர். இந்த ஒப்பந்தம் பெல்காம் காங்கிரசிலே ஊர்ஜிதம் செய்தாலொழிய அமலுக்கு வராது. எனவே இதன் காரணமாகக் காங்கிரஸ் முகாமிலே டெலிகேட்டுகளுக்கிடையே மிகுந்த பரபரப்புக் காணப்பட்டது.

## பண்டித மோதிலால்நேரு

இவர் அலகாபாத்தில் பிரசித்தமான வக்கீல் பெரும் வருவாய் உடையவர். அவருடைய திருக்குமாரன் தான் பண்டித ஜவஹர்லால் நேரு. தனது ஒரே மைந்தன்மீது அபரிமிதமான பற்றும் பாசமும் கொண்டிருந்தவர். மோதிலாலைச் சுதந்திரப் போராட்டத்தில் இழுத்த பெருமை ஜவஹரையே சாருமென்பார்கள்.

## தேசபந்து சித்தரஞ்சன்தாஸ்

இவர் வங்கத்தின் சிங்கம். யார் தலைவர் யார் தலைவர் என்று போட்டா போட்டித் தலைவர்களுக்குப் பேர்போன வங்கத்தின் மாதலைவராக விளங்கியவர். அவரும் சிறந்த வக்கீல். பெரும் வருவாய் பெற்றிருந் தவர். தன் தந்தையால் கெ டுபட வேண்டிய கடன் களையெல்லாம், கடன் கொடுத்தவர்களைத் தேடிக் கண்டுபிடித்து முதலும் வட்டியுமாகச் சேர்த்துக் கொடுத்துக் கணக்குத் தீர்த்த உத்தமர்.

அஞ்சா நெஞ்சம்கொண்ட ஆஜானுபாகு. தமது சிறந்த சொற்பொழிவுகளால் பிரிட்டிஷ் சிங்கத்தைக் கிடுகிடுவென நடுங்க வைத்தவர். அகில இந்தியாவி லும் சுற்றுப் பிரயாணம் செய்து காங்கிரஸ் சுயராஜ்யக் கட்சியை ஸ்தாபித்துச் சட்டசபைத் தேர்தல்களில் நின்று வெற்றியும் பெற்றுப் பிரிட்டிஷ் சிங்கத்தின் குகையினுட் புகுந்து போராடியவர்.

## இராஜாஜி—ஈ. வெ. ரா.

தமிழ் நாட்டிலிருந்து பெல்காம் காங்கிரசுக்குச் சென்றிருந்த பிரதிநிதிகளில் No changer என்று சொல் லப்பட்ட மாறுதல் வேண்டாதார்கள் எல்லோரும் அங்கு ஒன்ருய்க் கூடினேம்.

காந்தி தாஸ் நேரு ஒப்பந்தம் மகாசபையிலே வரும் போது அதை எதிர்ப்பதென்று தீர்மானித்தோம்.

எங்களின் ஒப்பற்ற தலைவராகவும், எங்கள் மதிப் புக் குரியவராகவும், வழிகாட்டியாகவும் இராஜாஜி தான் விளங்கினர். எங்களுள் சட்டாம் பிள்ளை ஸ்தா னத்தை ஈ. வே. இராமசாமிக்குக் கொடுக்கலாம். சக்ர வர்த்தித் திருமகனுகிய இராமபிரானிடம் அநுமான்

எவ்வளவு பக்தியும் விசுவாசமும் கொண்டிருந்தாரோ, அதனிலும் மேலாகச் சக்ரவர்த்தி இராஜகோபாலாச் சாரியாரிடம் ஈ. வே. இராமசாமி நாயகர் பக்தி பூண்டு அவர் கிழித்த கோட்டைத் தாண்டாதவராக அக் காலத்தில் இருந்தார்.

நாங்கள் எல்லோரும் கூட்டாகச் சென்று காந்தி யைக் கண்டு அவர் என்ன சமாதானம் சொல்லப் போகிறார் என்பதைக் கண்டறிய விரும்பினோம்:

ஒருநாள் காலை எட்டு மணிக்குக் காந்தியைக் காண் பதாய் ஏற்பாடாகியிருந்தது.

குறித்த நேரத்தில் செல்லவேண்டும் என்ற ஆர்வத் துடன் இராஜாஜி முன்செல்ல நாங்கள் ஈ. வே. இராம சாமி நாயக்கர், டாக்டர் பி. வரதராஜலு நாயுடு, திரு வி. கலியாணசுந்தர முதலியார். பி. கே. இரத்தின சபாபதிக் கவுண்டர், வி சக்கரை செட்டியார், சுரேந் திரநாத் ஆரியா, தர்மபுரி நடேசன் செட்டியார், டாக்டர் தர்மலிங்கம், பவானிசிங், கூடுதுரை வெங்கடா சல ரெட்டியார், சிதம்பரம் தண்டபாணி பிள்ளை, மதுரை பெகு சாகிப், என். எஸ். வரதாச்சாரி, எஸ். இராமநாதன், க. சந்தானம், டாக்டர் T. S. S. ராஜன் திருச்சி சுவாநமிாத சாஸ்திரி,...முதலானோர் அவரைப் பின்தொடர்ந்து காந்தி தங்கியிருந்த குடிசைக்குள் நுழைந்தோம்.

காந்தியார் அப்போது முகக்ஷவரம் செய்துகொண் டிருந்தார்.

எங்களைக் கண்டதும், எட்டு மணிக்கு ஐந்து நிமி ஷங்கள் முன்னதாகவே வந்துவிட்டீர்கள். பரவாயில்லை உட்கார்ந்து எனது க்ஷவரக் கலையைக் கண்டு ரசியுங்கள் என்றார்.

அவர்முன் முகம் பார்க்கும் கண்ணுடி இருக்க வில்லே. சாதாரண க்ஷவரக் கத்தியால் கைநிதானத் தில் தாமே க்ஷவரம் செய்துகொண்டிருந்தார்.

சரியாய் எட்டு மணிக்கு முகத்தைத் துடைத்துக் கொண்டு எங்களோடு பேச அமர்ந்தார்.

## மகாத்மாவுடன் எங்கள் வாக்குவாதம்

''நானும் நோ சேஞ்சர், இராஜாஜி தலேமையில் வந்துள்ள நீங்களும் நோ சேஞ்சர்கள். எனவே நமக் குள் எவ்வித கருத்து வேற்றுமையும் இருக்க நியாய மில்லே'' என்று கூறி மகாத்மா பேச்சைத் தொடங் கினுர்.

## இராஜாஜியின் கேள்வி

''சட்டசபைப் பிரவேசத்துக்கு அநுமதியளித்து விட்டால் மக்கள் கவனமெல்லாம் அதனுல் கவரப்படும், நிர்மாண வேலேகள் பின் தங்கிவிடும். நமது பகிஷ் கரிப்பின் மூலம் மதிப்பிழந்து கிடக்கும் சட்டசபை களுக்கு நாமே ஒரு மதிப்பைத் தேடிக் கொடுத்தவர் களாவோம். நிர்மாண வேலேகளே நிறைவேற்றுவதன் மூலமே சத்தியாக்கிரகப்போராட்டத்துக்கு தேசத்தை தயார் செய்ய முடியும். சட்டசபைகளின் மூலமாக அல்ல என்று அழுத்தந் திருத்தமாகச் சொல்லி வந்த தாங்கள் இன்று ஆக்கப் பணிகளேப் புறக்கணிக்கச் செய்யவல்ல. சட்டசபை பிரவேசத்துக்கு அங்கீகாரப் தந்தது சரியாகுமா?'' என்று இராஜாஜி கேட்டார்.

## மகாத்மாவின் பதில்

நிர்மாணத்திட்டங்களின்மீது போதுமான கவனம் இப்போதே செலுத்தப்படவில்லே. அவற்றை நிறை

வேற்றிஞலே நமக்குச் சுயசாஜ்யம் கிடைத்துவிடும் என்ற நம்பிக்கை என்னே விட்டு நீங்கவில்லே. ஆனல் எல்லாருக்கும் அந்த நம்பிக்கை இருக்க வேண்டுமே! கோர்ட்டுகளேப் பகிஷ்கரித்த வக்கீல்கள் பலபேர் கோட்டுகளே மாட்டிக்கொண்டு கோர்ட்டுகளுக்குச் செல்ல ஆரம்பித்துவிட்டதைக் காண்கிறேன். அரசாங்கத்தால் நடத்தப்படும் கல்லூரிகளேப் பகிஷ்கரித்த மாணவர்கள் பலபேர் மீண்டும் அங்கு நுழையக் கியூ வரிசையில் நிற்பதைக் காண்கிறேன். சட்டசபைகளுக்குள் பிரவேசித்து அங்கும் முட்டுக் கட்டைகள் போட வேண்டும் என்று நம்மில் அநேகர் தீவிரமாக எண்ணுகிருர்கள். அவர்களுடைய தேச பக்தியில் நாம் சந்தேகம் கொள்ள முடியாது. எனவே ஒத்துழையாமை நெறியில் நம்பிக்கை இல்லாதவர்களே நாம் காங்கிரசினின்று வெளியேறச் சொல்லவும் முடியாது.

"நேரு தாஸ் காந்தி ஒப்பந்தத்தை நீங்கள் படித்திருப்பீர்கள். அதன்படி சட்டசபைப் பிரவேசத்தில் நம்பிக்கை உள்ளவர்கள் அங்கு செல்ல நாம் அனுமதிக்க வேண்டும். சட்டசபைப் பிரவேசத்தில் நம்பிக்கை யில்லாதவர்கள் தொடர்ந்து நிர்மாண வேலேகள் செய்யட்டும். சட்டசபைப் பிரவேசக் கட்சியினரும் நிர்மாண வேலேகளில் தீவிரமாக ஒத்துழைப்பார்கள்.

## எனது கேள்வி

"கதர், வகுப்பு ஒற்றுமை, தீண்டாமை விலக்கு ஆகிய மூன்றையுந்தானே உங்கள் நிர்மாணப் பணிகளென்று உங்கள் ஒப்பந்தத்திலே குறித்துள்ளீர்கள். மதுவிலக்கை நீங்கள் ஏன் மறந்துவிட்டீர்கள்? தமிழ் நாட்டில் உள்ளவர்கள் மதுவிலக்கிற்கு அதிக முக்கியத்துவம் அளிக்கிருர்கள்" என்று நான் மகாத்மாவைக் கேட்டேன்.

"எங்கள் ஒப்பந்தத்தில் குறிப்பிடப்படாதவைகள் எல்லாம் முக்கியத்துவம் அல்லாதவையென்று எப்படிக் கூறமுடியும்? மதுவிலக்கு, தேசியக் கல்வி, ஆதாரக் கல்வி, கிராமக் கைத்தொழில்கள், ஹிந்தி கற்பித்தல், முதியோர் கல்வி, கிராம சுகாதாரம், விபசார ஒழிப்பு போன்ற எத்தனையோ நிர்மாணப் பணிகள் இருக்கின்றன. அவையெல்லாம் முக்கியமானவை அல்லவென்று சொல்ல முடியுமா?" என்று மகாத்மா என்னிடம் பதில் கேள்வி போட்டார்.

கதரைவிட, மற்றெல்லாவற்றையும் விடத் தென்னாட்டு மக்கள் மதுவிலக்கு ஒன்றிற்குத்தான் அதிக முக்கியத்துவம் அளிக்கின்றார்கள் என்றேன் நான்.

"அப்படியானால் அதைப் பேஷாகச் செய்யுங்களேன்" என்றார் மகாத்மா.

கூட்டம் முடிந்து நாங்கள் வெளியே வருகையில் நல்ல போடு போட்டீர்கள் என்றார் நாயக்கர். அவர் 1921ம் ஆண்டில் கள்ளுக்கடைமுன் மறியல் செய்து சிறை சென்றவராயிற்றே!

மீண்டும் பகல் இரண்டு மணிக்குச் சந்திப்பதாகக் காந்தியிடம் விடைபெற்று வந்த நாங்கள் பத்து நிமிஷம் முன்னதாகவே அவர் ஜாகைக்குள் நுழைந்தோம்.

"ஓ! இரண்டடிக்க இன்னும் பத்து நிமிஷங்கள் இருக்கின்றன. அதற்குள் நான் ஒரு சிறிய தூக்கம்போட்டு விட்டு வருகிறேன்" என்று சொல்லிக்கொண்டே அடுத்த அறையுனுள் நுழைந்த காந்தியார், கடிகாரத்தில் சரியாய் இரண்டு மணி ஆனதும் அவசரம் அவசரமாக முகத்தைக் கழுவித் துடைத்துக்கொண்டே எங்கள் முன் வந்து அமர்ந்தார்!

## மகாத்மாவின் பிரசங்கம்

1924ம் வருடம் டிசம்பர் மாதம் 26ம் தேதி துவங்கிய 39வது இந்திய தேசிய காங்கிரசின் தலைமைப் பிரசங்கத்தின் அச்சிட்ட பிரதிகள் டெலிகேட்டுகளின் ஜாகையில் 25ந் தேதி இரவே விநியோகிக்கப்பட்டன.

அடுத்த நாள் மகாநாடு துவங்கியதும் வரவேற்புரை தலைவர் தேர்தல் முதலிய சடங்குகள் முடிந்தவுடன் மகாத்மா தமது தலைமை உரையை வாசிக்கவில்லை.

"எனது அச்சிட்ட பிரசங்கம் நேற்று மாலையே டெலிகேட்டுகளின் கைகளில் கிடைத்திருக்கும், அவர்கள் அதனைப் படித்தும் இருப்பார்கள் என்று நம்புகிறேன். எனவே அதை நான் இங்கு வாசித்து உங்கள் நேரத்தை வீணுக்க விரும்பவில்லை. விஷயாலோசனைக் கமிட்டியில் உத்தேசிக்கப்பட்ட தீர்மானங்களை ஒன்றன் பின் ஒன்ருக விவாததத்துக்கு எடுத்துக்கொள்வோம்" என்று கூறி மகாத்மா காரியத்தில் இறங்கினுர்.

டெம்மி $1 \times 8$ அளவில் 37 பக்கங்கள் அச்சிடப்பட்ட அவரது ஆங்கிலப் பிரசங்கத்தில் அந்நியத் துணி பகிஷ்காரம் கதர் அபிவிருத்தி, தீண்டாமை ஒழிப்பு, இந்து முஸ்லிம் ஒற்றுமை, தேசீயக் கல்வி, மதுவிலக்கு, வங்கத்தில் நிகழ்ந்த அடக்கு முறை சாத்வீக எதிர்ப்பின் மாண்பு, பலாத்காரத்தின் தீமைகள், சுயராஜ்யக் கட்சியுடன் ஒப்பந்தம் ஆகிய விஷயங்கள் விவரிக்கப்பட்டிருந்தன,

மற்றும் சுயராஜ்யத்துக்கு விளக்கம் தருமாறு பாபு பகவன்தாஸ் (பிற்காலத்தில் சென்னை கவர்னராக விருந்த ஸ்ரீ பிரகாசாவின் தந்தை) கோரியிருந்ததை மகாத்மா குறிப்பிட்டு தாம் விழையுட் சுயராஜ்யத்தில்

என்னென்ன இருக்கும், என்னென்ன இராதெனத் தமது தலைமை உரையில் கூறியிருந்தார்.

## தீர்மானங்கள்

காந்தி தாஸ் நேரு ஒப்பந்தத்தை ஊர்ஜிதம் செய்தென்ற தீர்மானம் விவாதத்துக்கு எடுத்துக்கொள்ளப் பட்டபோது, அதை எதிர்க்கும் வாதத்தை இராஜாஜி நிகழ்த்தினர். அவரைப் பின்தொடர்ந்து ஈ. வெ. இராமசாமி நாயக்கரும் தீர்மானத்தை எதிர்த்துக் கன்னடத்தில் விளாசினர். ஆனல் அவர் பேசிய ஈரோட்டுக் கன்னடம், பெல்காம் கன்னடியர்களுக்கு விளங்கியிருக்குமா என்பது சந்தேகம்.

பெல்காம் காங்கிரசிலே முக்கிய தீர்மானமாகிய காந்தி தாஸ் நேரு ஒப்பந்தம் பெருவாரியான வாக்குகளால் நிறைவேற்றப்பட்டு காங்கிரசின் ஒற்றுமை நிலைநாட்டப்பட்டது.

பெல்காம், மற்ருெரு சூரத் காங்கிரசைப்போல் குழப்பத்திலும், அடிதடியிலும் முடிவுறுமென்று எண்ணியிருந்த சிலர் ஏமாற்றமடைந்தனர்.

எனினும் தமிழ்நாட்டிலிருந்து சென்றிருந்த மாறுதல் வேண்டாத—தீவிர ஒத்துழையாமையில் பற்றுக் கொண்டிருந்த நாங்கள் மனச் சோர்வுடன் ஊர் திரும்பினேம்.

திரும்பும் மார்க்கத்தில் நாயக்கரும் நானும் "ஹம்பி" எனும் விஜய நகர் "நாயக்கர்" சமஸ்தானத்தின் பாழடைந்த நகரையும், அங்கிருந்த கோவிலையும் பார்த்து வந்தோம்.

## நிர்மாணத் திட்டத்தில் தீவிரம்

காங்கிரஸ் சுயராஜ்யக் கட்சியினர் சட்டசபைப் பிரவேசத்தில் தீவிர முயற்சி மேற்கொண்டனர்,

ஒத்துழையாதாராகிய நாங்கள் கதர், தீண்டாமை விலக்கு, மதுவிலக்கு, இந்தி பிரசாரம், தேசியக் கல்வி, முதியோர் கல்வி ஆகிய துறைகளில் தீவிரமாக முனைந் தோம்.

## திருச்செங்கோடு காந்தி ஆசிரமம்

சேலம் ஜில்லா, திருச்செங்கோட்டையடுத்த புதுப் பாளையம் என்ற கிராமத்திலே நிறுவப்பட்ட காந்தி ஆசிரமம் 1925ம் ஆண்டில் திறக்கப்பட்டு, அதிலே இராஜாஜி, அவரது குமாரன் நரசிம்மன், மகள் இலட்சுமி, க. சந்தானம், மதுரை என். நாராயணன் ஆகியோர் தங்கள் குடும்ப சகிதம் குடி புகுந்தனர். இவ்வரிய விழாவிற்கு ஈ. வெ. இராமசாமி நாயக்கர், டாக்டர் P. வரதராஜீலு நாயுடு, திரு. வி. கல்யாண சுந்தர முதலியார், டாக்டர் P. சுப்பராயன் முதலா னோர் வந்திருந்தனர். வந்திருந்த விருந்தாளிகளைக் கவனிக்கும் பொறுப்பு என்னிடம் ஒப்புவிக்கப்பட் டிருந்தது.

## இரத்தினசபாபதிக் கவுண்டர்

ஆசிரமத்துக்குத் தமது தென்னந்தோப்பையும் கட்டிடங்களையும், கிணற்றையும் தானமாகக் கொடுத்த இரத்தின சபாபதிக் கவுண்டர், தர்ம சாஸனத்தை வாசித்துக் கொடுத்தார். நான் புதுப் பாளையம் ஆசிரமத்தில் தொண்டாற்றிய ஆறுமாத காலம் எனது மனைவியுடன் இவரது இல்லத்தில் விருந் தாளிகளாக மிக்க அன்புடன் உபசரிக்கப்பட்டோம். இவர் இராஜாஜியிடத்தில் தீவிரப்பற்றும் பக்தியும் கொண்டு அவரைத் தமது தந்தையாகப் பாவித்துப் போற்றிவந்தவர். கள்ளங்கபடமற்ற நேர்மையாளர்.

டாக்டர். P. சுப்பராயன் இவரது பங்காளியாவார். தற்போது சென்னை உயர்நீதிமன்ற ஜட்ஜாகவிருக்கும் கைலாசத்தின் மனைவி சௌந்திரம், இவரது பேத்தியாவாள். இவர் உயிரோடிருந்த காலத்தில் ஓயாது சேலம், கோவை ஆகிய இரண்டு ஜில்லாக்களிலும் தொடர்ந்து காங்கிரஸ் பிரசாரம் செய்து வந்தார். இரண்டு ஜில்லாக்களிலுமிருக்கும் கொங்கு வேளாள சமூகத்தாரிடையே இவருக்கு அபரிமிதமான செல்வாக்கு இருந்தது. இவர் 1929 ஆண்டில் திடீரென மாரடைப்பால் காலமாகி இராஜாஜியையும் எண்ணற்ற உற்றார் உறவினர் சகாக்களையும் ஆருத்துயரில் ஆழ்த்தினர்.

புதுப்பாளையம் காந்தி ஆசிரமத் திறப்பு விழாவை முன்னின்று நடத்திக் கொடுத்துவிட்டு நான் அகில பாரத சங்கத்தின் தமிழகக் கிளையில் முழுநேர ஊழியனாகத் தொண்டாற்றச் சென்றேன்.

# 3

# 1925—1929

பெல்காம் காங்கிரசுக்குப் பின் 1925ல் கான்பூரில் கவியரசி சரோஜினி தலைமையிலும், 19௨6ல் கௌஹதி தியில் சென்னை அட்வகேட் எஸ். சீனிவாச அய்யங்கார் தலைமையிலும் 1926ல் சென்னையில் டாக்டர் அன்சாரி யின் தலைமையிலும் 1927ல் கல்கத்தாவில் மோதிலால் நேருவின் தலைமையிலும் 19.9ல் லாகூரில் அவர் மைந்தர் ஜவஹர்லால் தலைமையிலும் நடைபெற்ற காங்கிரசுகளுக்குச் செல்ல நான் சிரத்தை கொள்ளாது, கதர்த் தொழிலிலும், இராமசாமிப் பெரியார் ஆரம் பித்த சாதி சமயச் சடங்குகள் ஒழிப்பு இயக்கமாகிய சுயமரியாதைப் பிரசாரத்திலும் கவனம் செலுத்தி வந்தேன்.

இவ்வாண்டுகளில் இராஜாஜி எண்ணியபடியே சபை நிகழ்ச்சிகளில் மக்கள் கவனம் ஈர்க்கப்பட்டதே யன்றி ஒத்துழையாமை இயக்கம் சோர்வடைந்து கிடந்ததென்பது தப்பாகாது.

சென்னையில் நீலன் சிலை அகற்றும் போராட்டம், பர்டோலியில் சர்தார் படேல் நடத்திய வரிகொடாப் போராட்டம், சைமன் கமிஷன் பகிஷ்காரம் 26-1-29ல் லாகூர் காங்கிரசில் நிறைவேற்றப்பட்ட பரிபூரண சுதந்திரம் தீர்மானம் ஆகியவை நாடெங்கும் சிறிது

சலசலப்பை உண்டாக்கியதெனினும் சுதந்திரப் போராட்டத்துக்கு உறுதுணையான ஆக்கவேலைகள் ஒரு தேக்க நிலைமையை அடைந்திருந்ததெனலாம்,

## 1930

1930ல் ஜனவரி 26ந்தேதி தேசமெங்கும் சுதந்திர தினம் கொண்டாடும் எண்ணம் உதயமாயிற்று. அன்று நாடெங்கும் கூட்டங்கள் கூடி அக்கூட்டங்களில் மக்கள் லாகூர் காங்கிரசில் நிறைவேற்றப்பட்ட பரிபூரண சுதந்திரமே நமது லட்சியம் என்ற தீர் மானத்தைப் படித்தார்கள். காஷ்மீர் முதல் கன்னியா குமரி வரை நாடெங்கும் அத்தினத்தில் தேசியக் கொடிகள் ஏற்றப்பட்டன. மக்கள் கூட்டம் கூட்ட மாகச் சுதந்திர விரதம் எடுக்கலாயினர்.

தேசமெங்கும் மக்களிடையே ஒரு புதிய உத்வேக மும் உணர்ச்சியும் ஏற்பட்டது.

இந்நிலை கண்ட மகாத்மா சபர்மதி ஆசிரமத்தி லிருந்து போர்க் கோலம் கொண்டு கிளம்பினார்.

அதுதான் உப்புப் போராட்டம்.

எண்பது தொண்டர்கள் பின்தொடர அவர் சபர்மதி ஆசிரமத்திலிருந்து தண்டி எனும் கடற் கரைக்கு கால்நடையாகவே ராம்தூன் பாடிக்கொண்டு கிளம்பினார்.

எண்பதே பேர்கள் பின்தொடர மகாத்மா தோளிலே ஒரு பையும், கையிலே ஒரு கம்பும் எடுத் துக்கொண்டு சுயராஜ்யம் பெறும்வரை சபர்மதி ஆசிரமத்துக்குள் காலடி எடுத்து வைப்பதில்லை என்ற சபதத்துடன் கிளம்பினார்.

இச் சிற்றெறும்புக் கூட்டம் நடந்து செல்வதால் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியக் கல் குழியவா போகிறதென ஏகாதிபத்திய வாதிகள் எள்ளி நகையாடினர்.

ஆனால் எறும்புக்கற் குழிந்தது. சபர்மதியிலிருந்து தண்டிக் கடற்கரை 200 மைல் தூரம். கால்நடையாக.

நாடெங்கும், பட்டி தொட்டிகள்தோறும் மக்கள் கிளர்ந்தெழுந்தனர். உப்புத் தண்ணீரைக் கொணர்ந்து மக்கள் வீடுகள் தோறும் உப்புக் காய்ச்சி யெடுத்து அவ்வுப்பை வருவோர். போவோர்க்கெல்லாம் சுதந்திரப் பிரசாதமாக ஆர்வத்தோடு வழங்கினர்.

தென்னாடு சும்மாவா இருக்கும்?

அண்ணல் இராஜாஜியின் தளர்ந்த நரம்புகளிலே முறுக்கேறியது.

புதுப்பாளையம் காந்தி ஆசிரமம் என்ற குகையிலிருந்து அச்சிங்கம், எலும்புந் தோலோடாயினும் அஞ்சா நெஞ்சமும், திட வைராக்யமும், தன்னம்பிக்கையும், உலகமே திரண்டெழுந்து எதிர்ப்பினும் தன்னந்தனியனாக நிற்கும் மனோதிடமும் கொண்ட அத்தமிழக ஞானத் தங்கம் கிளம்பியது.

திருச்சியிலிருந்து ஒரு அகிம்சாப் படை திரட்டிக் கொண்டு வேதாரணியம் கடற்கரையை நோக்கிக் கால் நடையாகப் புறப்பட்டார்.

கத்தியின்றி இரத்தமின்றி யுத்தமானது வருகுது என்ற நாமக்கல் இராமலிங்கம் பிள்ளையின் சமயத்துக்கேற்ற பாடல் இப்படையினரின் வழிநடைச் சிந்தாக அமைந்தது.

இப்படையினர் செல்லும் மார்க்கத்திலிருந்து ஜனங்கள் கும்பமேளத்துடன் வரவேற்று உபசரித்தனர். வழியெங்கும் தோரணங்கள் அலங்கரித்தன. நெஞ்சை அள்ளும் தேசிய கீதங்கள் ஒலித்தன. இப்

படையினரை உபசரிக்கக் கூடாதென்றும், மீறி உப சரிப்போர் தண்டனைக்குள்ளாவாரென்றும், அன்று தஞ்சைக் கலெக்டராயிருந்த வெள்ளையன் போட்ட தண்டோராவைக் கண்டு மக்கள் மனதில் உற்சாக மேலிட்டதேயன்றி குன்றவில்லை.

வேதாரணியம் கடற்கரை சேர்ந்த தொண்டர் களைப் போலீசார் புளியம் விளாறினல் இரத்தம் பீற அடித்தார்கள். அவ்வடிகள் ஒவ்வொன்றும் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் சவப்பெட்டியின் மீது அறையப்பட்ட ஆணிகளாக மாறின.

சுதந்திர அன்னையின் மார்புகள் விம்மின. கண் களில் ஆனந்தக் கண்ணீர் வழிந்தது.

தேசமெங்கும் மக்கள் கொதித்தெழுந்தனர். பம்பாயில் சௌபாதி கடற்கரை அஹிம்சைப் போர்க் களமாயிற்று.

இந்திய நாடே குருக்ஷேத்திரமாயிற்று.

தலைவர்களும் தொண்டர்களும் சிறை செல்லச் செல்ல உப்புப் போர் உக்கிர நிலைமை பெற்றது.

மற்றும் அந்நிய ஜவுளிக்கடை, கள்ளுக்கடை மறியல் செய்யப்பட்டன.

வாக்காலும், மௌனமாக கண்கள் கைகள் ஜாடை காட்டினலும் மறியல் தொண்டர்கள் சிறை களில் அடைக்கப்பட்டனர்,

சிறைச் சாலைகள் அனைத்தும் நிறைந்த பின்னர் தொண்டர்கள் தடிகளால் அடிக்கப்பட்டனர்.

மலை கலங்கினும் தங்கள் மனங்கலங்காத வீரத் தியாகிகள், ஆண்களும், பெண்களும், சான்றோரும், மற்றோரும், செல்வரும், பிறரும், மாணவரும், மாணவி களும், எல்லோரும் திரண்டெழுந்த காட்சியைக் கண்டு

உலகினர் வியந்தனர். பிரிட்டிஷ் சாம்ராஜ்யம் இருள் சூழப் பெற்றது

இப் புதுமை வாய்ந்த போராட்டத்தை அடக்க வழிவகை தெரியாமல் இந்தியாவை ஆண்டிருந்த வைசிராயும் I. C. S. வர்க்கத்தினரும், போலீசும், இராணுவமும், கத்தியும், துப்பாக்கியும், குறுந்தடியும், கோர்ட்டுகளும் தடுமாறின.

என்ன நேர்ந்தாலும் கைராட்டையும் கதர்த் தொண்டையும் விட்டகலக் கூடாதென்ற என் சங்கற்பமும் கட்டவிழ்ந்து நானும் கோவைச் சிறையினுள் தள்ளப்பட்டேன். என் பிரிய மனைவி கோவிந்தம் மாளும் சிறை சென்றாள்.

## காந்தி—இர்வின் உடன்பாடு

எரவாடா சிறையில் அடைப்பட்டிருந்த மகாத்மா காந்தி விடுதலை செய்யப்பட்டார். அவருக்காக ஒரு தனி ரயில் அமைத்து, டெல்விக்கழைத்து, வைசிராய் லார்டு இர்வின் கலந்துறவாடி உபசரித்து ஒரு உடன் பாடு கண்டார்.

அதன்படி உப்புவரி நீக்கம் ஒப்புக்கொள்ளப் பட்டது.

தலைச் சுமையாக மக்கள் கடற்கரையினின்று உப்பு எடுத்துச் செல்லும் உரிமை பெற்றனர்.

கள்ளுக் கடைகளையும், அந்நிய ஆடைக் கடைகளை களையும் மக்கள் தங்கு தடையின்றிச் சாத்வீக முறை யில் மறியல் செய்யலாம்.

சிறையிலிருப்பவர்கள் விடுதலை பெறுவர்.

பறிமுதல் செய்யப்பட்ட சொத்துக்களும், வசூலிக் கப்பட்ட அபராதத் தொகைகளும் திருப்பித் தரப் படும்.

லண்டனில் கூட்டப்பட்டிருந்த பிரிட்டிஷ் இந்திய வட்டமேசை மகாநாட்டில் கலந்துகொள்வதில்லை யென்று காங்கிரஸ் செய்திருந்த முடிவை மாற்றிக் கொள்ள வேண்டும்.

இவையே அந்த உடன்பாட்டின் சாரம்!

## கராச்சி காங்கிரஸ்

காந்தி இர்வின் உடன்பாடு காங்கிரஸ் மகா சபையால் ஊர்ஜிதம் செய்யப்பட வேண்டாமா?

காங்கிரசின்மீது விதிககப்பட்டிருந்த தடைகளெல்லாம் நீக்கப்பட்டு அவசர அவசரமாக 1931 மார்ச்சு 29, 30, 31 தேதிகளில் கராச்சியில் 45வது காங்கிரஸ் மகாநாடு சர்தார் வல்லபாய் படேலின் தலைமையில் கூடிற்று.

தமிழ்நாடு, ஆந்திரா, கேரளா, கர்னுடகம் ஆகிய மாநிலங்களிலிருந்து சென்ற பிரதிநிதிகளில் பெரும்பாலோர் பம்பாயிலிறங்கி, அங்கிருந்து கராச்சிக்கு விடப்பட்ட கப்பலில் பிரயாணமானேம். பம்பாய்க்கும் கராச்சிக்கும் போகவரக் கப்பல் கட்டணம் பத்தே ரூபாய்!

மகாநாடு நடைபெற்ற மூன்று தினங்களிலும் சரியாய் மாலை ஆறுமணிக்குத் துவங்கி திறந்த வெளியில் இரவு பனிரண்டு மணிவரை நடைபெற்றது.

காந்தி—இர்வின் ஒப்பந்தத்தின் மூலம் பாரத மக்களின் மனதில் உதித்திருந்த வெற்றிப் பெருமிதத்தை தணிக்கும் எண்ணத்தாலோ, அன்றிப் பிரிட்டிஷ் ஆட்சியின் திறத்தை இந்திய மக்கள் உணரச் செய்யவேண்டும் என்ற கருத்தினுலோ, மகாநாடு நடைபெறுவதற்கு முன் பக்வத் சிங் குழுவினரைக் கழுவேற்றி விட்டார்கள். இதனுல் கராச்சியில் மக்கள்

மனம் கொதிப்புற்றிருந்த சூழ்நிலையில் மகாநாடு நடைபெற்றது.

இம்மகாநாடு நடைபெறுவதற்குப் பதினைந்தே தினங்கட்கு முன்னர்தான் சிறைச்சாலைகளினின்று உப்புப் போர் வீரர்கள் விடுதலை செய்யப்பட்டிருந்தனர்.

எனினும் இக்குறுகிய காலமாகிய இரண்டே வாரங்களில் முப்பத்தோரு லட்சம் ரூபாய் வசூலிக்கப்பட்டு, மின்வேகத்தில் மகாநாட்டின் ஏற்பாடுகள் துவங்கி முடிக்கப்பட்டன.

கராச்சி முனிசிபாலிட்டியும், அதன் அங்கத்தினர்களும், கராச்சியிலிருந்த வர்த்தக சமூகத்தினரும் இம்மகா நாட்டின் வெற்றிக்கு இரவு பகல் பாராமல் உழைத்தனர்.

சுமார் ஐநூறுக்கும் மேற்பட்ட பெண் தொண்டர்களும், இரண்டாயிரத்து நூறு ஆண் தொண்டர்களும் வெள்ளை வெளேரென்று கதருடுத்தி மகாநாட்டு வேலைகளில் ஈடுபட்டிருந்தது கண்கொள்ளாக் காட்சியாக இருந்தது.

பகவத் சிங் பெற்றோரும், உற்றாரும் உருவிய வாட்களைக் கையில் தாங்கிய வண்ணம் மௌனமாக ஊர்வலம் வந்து மகாநாட்டுப் பந்தலுள் நுழைந்த காட்சி என்றும் மறக்க முடியாததாக இருந்தது.

ஐம்பதினாயிரம் மக்கள் வீற்றிருக்கக்கூடிய திறந்த வெளி அரங்கும், விஷயாலோசனைக் கமிட்டி கூடும் பந்தல், கதர்ப் பொருட் காட்சி, சுதேசி பஜார், பிரதிநிதிகள் தங்குவதற்கும் குளிப்பதற்கும், உண்பதற்கும் ஜாகைகள், ஆகியவை மிக அற்புதத்தோடு காங்கிரஸ் நடைபெற்ற ''ஹரிச்சந்திரா'' நகரில் காட்சியளித்தன.

## நிறைவேறிய தீர்மானங்கள்

காந்தி—இர்வின் ஒப்பந்தம் ஊர்ஜிதம் செய்யப் பட்டு லண்டன் வட்டமேசை மகாநாட்டிற்குமகாத்மா காந்தி காங்கிரஸின் ஏகப்பிரதிநிதியாய் செல்ல வேண்டும் எனவும்,

லாகூர் காங்கிரசில் நிறைவேற்றப்பட்ட இந்தியா வின் லட்சியம் பிரிட்டிஷ் ஆட்சிக்குப் புறம்பான பூரண சுயராஜ்யம் என்ற தீர்மானத்தை மீண்டும் ஊர்ஜிதம் செய்தும்,

சுயராஜ்ய அமைப்பில் மக்களின் ஜீவாதார உரிமைகள் யாவை என்பதை விளக்கியும்,

சர்தார் பகவத்சிங் குழுவினரின் தேசபக்தியைப் பாராட்டியும்,

பல தீர்மானங்கள் கராச்சி காங்கிரசில் நிறைவேற் றப்பட்டன.

## தீர்மானங்களின் மீது பேசியவர்கள்

டாக்டர் சோயித்ராம் கித்வானி வரவேற்க சர்தார் வல்லபாய் படேல் தலைமை தாங்க, மகாத்மா காந்தி இர்வின் ஒப்பந்தம், வட்டமேசை மகாநாடு, இருபது அம்சங்கள் கொண்ட அடிப்படை உரிமைகள் ஆகிய தீர்மானங்களை முன்மொழிந்து ஹிந்தியிலும் ஆங்கிலத்திலும் உரையாற்றினர்.

சர்தார் பகவத் சிங், சுகதேவ், ராஜ்குரு ஆகிய மூன்று வீரர்களின் தீரவீர பராக்கிரமத்தைப் புகழ்ந்து அவர்கள் கழுவேற்றப்பட்டதை கண்டிக்கும் தீர் மானத்தை பண்டித ஜவஹர்லால் முன்மொழிந்து கர்ஜித்தார்.

ஆந்திர நாட்டு V. சாஸ்திரி, டாக்டர் தாராசந், டாக்டர் அன்சாரி, ஜம்னுதாஸ் மேத்தா, சுவாமி கோவிந்தானந்தர், பம்பாய் மேஹரலி, தயாப்ஷேக், டாக்டர் ஆலம், பூனுவைச் சேர்ந்த சர்தேஸி, வங்கத்தின் சென்குப்தா, நமது சத்யமூர்த்தி. எல்லைக்காந்தி கான் அப்துல் கபார்கான், பர்மியப் பிரதிநிதி யூ. ஆ. லாகா, ஆந்திர கேஸரி டி. பிரகாசம், தூத்துக்குடி அ. மாசிலாமணிப் பிள்ளை ஆகியோரர் கராச்சி காங்கிரசில் நிறைவேற்றப்பட்ட பதினைந்து தீர்மானங்கள் மீது பேசியபின், *31-3-1931* நள்ளிரவு பன்னிரண்டு மணிக்கு வல்லபாய் படேல் முடிவுரையும், டாக்டர் சோத்திராம் வந்தனோபசாரமும் வழங்க கராச்சி காங்கிரஸ் மகாத்மா காந்திக்கு ஜே! பாரத் மாதாக்கி ஜே என்ற ஜெயகோஷங்களுடன் சுமுகமாக முடிவுற்றது.

மற்றுமொரு முறை காந்தி தரிசனம் பெற்ற மகிழ்வோடு, உடுமலை ஜி. வேலப்பநாயுடு துணைசேர ரயில் மார்க்கமாகப் புறப்பட்டு, வழியில் பல ஊர்களில் இறங்கிப் பார்த்துவிட்டு நான் கதர்த்தொண்டாற்றியிருந்த புஞ்சைப்புளியம்பட்டி யெனும் கிராமத்தை அடைந்தேன்.

4

# வட்டமேஜை மகாநாடு

லண்டனில் நடைபெறும் இரண்டாவது வட்ட மேஜை மகாநாட்டில் காங்கிரஸ் மகாசபையின் ஏகப் பிரதிநிதியாகக் கலந்து கொள்வதன் பொருட்டு மகாத்மா காந்தி 1931ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 29 தேதி எஸ். எஸ். இராஜ்புத்ஞ என்னும் கப்பலில் பம்பாய்த் துறைமுகத்தில் ஏறிச் சென்றூர். அவருக்கு அருந்துணையாக அவரது புதல்வர் தேவ தாசும், வெள்ளைக்கார சிஷ்யை மீரா பென்னும், கவி யரசி சரோஜினி தேவியும், கன்னியாகுமரி முதல் காஷ்மீர் வரை வந்திருந்த மக்களின் நல்லாசியுடன் செனறனர். வட்டமேஜை மகாநாட்டிலே அவர் கண்ட காட்சியும், பிரிட்டிஷ் ஏகாதிபதிய தாசர்களின் அணி வகுப்பும் அவருக்குப் பெரிய ஏமாற்றத்தையும் அரு வருப்பையும் அளித்தன,

மகாத்மா காந்தி ஒருவரைத் தவிர பாரத மக்க ளால் தேர்த்தெடுக்கப்பட்ட ஒரு பிரதிநிதியும் அம் மகா நாட்டிலே காணப்படவில்லை. தேசீய முஸ்லீம் களுக்கு பிரதிநிதித்துவம் அளிக்கப்படவில்லை. வகுப்பு வாதிகளும், தேசநல விரோதிகளும், தான்தோன்றித் தறுதலைகள் பலர் அங்கு குழுமியிருந்தனர். இவர்கள்

யாவரும் பிரிட்டிஷ் அரசாங்கத்தால் பொறுக்கி யெடுக்கப்பட்டவர்கள்.

மகாநாட்டின் குறிக்கோள் யாதெனமனதிற் கருதிப் பேசாமல், அம் மகாநாடு ஒரு வாதப்பிரதி வாத சபையாகக் காட்சியளித்தது.

இதனை மிகத் தெளிவாக மகாத்மா தாம் கலந்து கொண்ட முதற்கூட்டத்திலேயே அம் மகாநாட்டின் தலைவரான சாங்கே பிரபுவிடம் தெரிவித்தார்.

அவ்வாண்டின் இறுதிவரை லண்டனிலே தங்கி யிருந்து பல கூட்டங்களில் பேசிவிட்டு மகாத்மா 'வெறுங்கையுடன்' எஸ். எஸ். பில்ஸ்னு எனும் நீராவிக் கப்பலில் டிசம்பர் 28ந் தேதி பம்பாய்த் துறைமுகத்தில் வந்திறங்கினார்.

காங்கிரஸ் காரியக்கமிட்டி டிசம்பர் 31ந் தேதி பம்பாயில் கூடுவதாக அறிவிக்கப்பட்டிருந்தது.

பம்பாய் வந்திறங்கும் மகாத்மாவைக் காணும் பொருட்டு அலகாபாத்திலிருந்து புறப்பட்ட பண்டித ஜவஹர்லால் நேருவும் மிஸ்டர் ஷேர்வாணி என்ற காங்கிரஸ் பிரமுகரும் ரயில் நிலையத்தில் கைதான செய்தி, கப்பலை விட்டிறங்கு முன்பே மகாத்மாவின் செவிகளில் எட்டியது.

## அடக்குமுறைத் தாண்டவம்

தேசமெங்கும் தடையுத்திரவுகள் பிறந்தன. முக்கியஸ்தர்களெல்லாம் கைது செய்யப்பட்டனர். அடக்குமுறை கட்டவிழ்த்து விடப்பட்டது.

*1932*—ஜனவரி 4ந் தேதி நள்ளிரவில் மகாத்மா காந்தி கைது செய்யப்பட்டு யாதொரு விசாரணையுமின்றி எரவாடா சிறையில் அடைக்கப்பட்டார். அவருடன் கைதான சர்தார் வல்லபாய் ஒருவர்தான்

சிறைச்சாலையில் மகாத்மாவுடனிருக்க அநுமதிக்கப் பட்டார். பிற தலைவர்கள் எல்லோரும் தனியாக வேறிடத்தில் வைக்கப்பட்டனர்.

எங்கோ ஒரு மூலையில் புஞ்சைப்புளியம்பட்டி என்ற குக்கிராமத்தில் கதர்த் தொண்டில் ஈடுபட்டிருந்த நானும் என் மனைவி கோவிந்தம்மாளும் சிறையினுள் தள்ளப்பட்டோம்.

## பிரிட்டிஷ் பிரதமரின் வகுப்புத் தீர்ப்பு

ஹரிஜனங்களுக்கு தனித் தொகுதியும் தனிப் பிரதிநிதித்துவம் கொடுத்து அவர்களை ஹிந்து சமூகத்தினின்று நிரந்தரமாகப் பிரித்துவிடுவதென்ற பிரிட்டிஷ் அரசாங்கத்தின் உத்தேசத்தை மகாத்மா காந்தி லண்டனிலேயே மிக வன்மையாகக் கண்டித்தார்.

இது விஷயமாக மகாத்மா காந்தி மார்ச்சு மாதம் 11ந் தேதி ஒரு முடிவுக்கு வந்தார்.

ஹரிஜனங்களை இந்து சமுதாயத்தினின்று பிரிக்கும் அரசாங்கத் திட்டம் பிரகடனம் செய்யப்படுமாயின், தாம் அதை எதிர்த்துச் சாகும்வரை உண்ணாவிரதம் இருப்பதென்பதே அம் முடிவாகும். அம் முடிவை லண்டனிலிருந்த இந்தியாவின் காரியதரிசி சர் சாமுவேல் ஹோருக்குக் கடித மூலம் தெரியப்படுத்தினார்.

ஆகஸ்டு மாதம் 17ந் தேதி பிரிட்டிஷ் பிரதமரின் வகுப்புத் தீர்ப்பு பிறந்தது. அதன்படி ஹரிஜனங்கள் இந்து சமுதாயத்தினினின்றும் வேறாகக் கருதப்பட்டனர்.

மகாத்மா தமது முடிவை மீண்டும் பிரிட்டிஷ் பிரதமர் ராம்சே மெக்டொனல்டுக்குத் தெரியப்படுத்தி

விட்டு, செப்டம்பர் மாதம் 20ந் தேதி தமது உண்ணு விரதத்தை துவக்குவதென திட்டமிட்டிருந்தார்.

## மகாத்மாவின் உண்ணுவிரதம்

மகாத்மாவின் முடிவையறிந்த பாரதமக்கள் அனலிலிட்ட மெழுகுபோல் உருகலாயினர்.

பாரதத் தாய் எரவாடா சிறைவாயிலில் நின்று அழுதாள்.

மகாத்மாவின் உயிரைக் காப்பாற்றியே தீர வேண்டுமென்ற துணிவும் உறுதியும் தேசமக்களின் உள்ளத்தில் புகுந்தது.

ஆலயங்களெல்லாம் ஹரிஜனங்களுக்குத் திறந்து விடப்பட வேண்டுமென்றும், ஹிந்துக்களின் மனம் விரிந்து அம்மனத்தினுள் ஹரிஜனங்களின் நலன் நிரந்தரமாகக் குடிபுக வேண்டுமென்றும், பிரிட்டிஷ் பிரதமர் தமது வகுப்புத்தீர்ப்பை மாற்றவேண்டுமென்றும் நாடெங்கும் கூட்டங்கள் கூடி மக்கள் தீர்மானங்கள் செய்தனர்.

ஹரிஜனங்களுக்குத் தனிப் பிரதிநிதித்துவம் அளிப்பதன் மூலம் அவர்களை அரசியலிலும் தீண்டத்தகாதவர்களாகச் செய்திடும் கொள்கையை சென்னை ஹரிஜனத் தலைவர் எம். சி. ராஜா மிக வன்மையாகக் கண்டித்து ஒரு அறிக்கை வெளியிட்டார்.

மகாத்மா உபவாசம் தொடங்கும் நாளாகிய செப்டம்பர் '0ந் தேதி பொதுமக்கள் நாடெங்கும் உபவாசம் இருந்து ஆண்டவனைப் பிரார்த்தனை செய்ய வேண்டு மென்றும், அன்று மாலை பொதுக்கூட்டங்கள் நடத்திப் பிரிட்டிஷ் பிரதமரின் அறிக்கையைக் கண்டனம செய்யவேண்டுமென்றும் இராஜாஜியின் வேண்டுகோள்படி ஏற்பாடாயிற்று

செப்டம்பர் 19ந் தேதி பம்பாயில் நடைபெற்ற ஹிந்து தலைவர்கள் மகாநாட்டில், அலகாபாத்திலுள்ள சர்வ ஹிந்து ஆலயங்களும் ஹரிஜனங்களுக்குத் திறந்து விடப் பட்டதாகப் பண்டித மதன்மோகன் மாளவியா அறிவித்தார். மகாத்மாவின் உயிர் எப்படியும் காப்பாற்றப் படவேண்டுமென்றும், தீண்டாமை யெனும் சாபத்தீடு வேரோடுங் கிளையோடுங் களைந்தெறியப்பட வேண்டுமென்றும் அக் கூட்டத்தில் தீர்மானித்தனர்.

செப்டம்பர் மாதம் 20ந் தேதி பொழுது புலர்ந்தது. எரவாடா சிறையில், திறந்த வெளியில், ஒரு தாழ்வான மாமர நிழலில் அண்ணல் காந்தி தமது உண்ணுநோன்பை ஆரம்பித்தார். சர்தார் வல்லபாய் படேலும், மகாதேவ் தேசாயும் உடனிருந்தனர்.

பெண்கள் சிறைப் பகுதியில் இருந்த கவியரசி சரோஜினி தேவியும் மகாத்மா அருகில் சென்றிருக்க அநுமதிக்கப்பட்டார்.

22ந் தேதி சபர்மதி சிறையிலிருந்த அன்னை கஸ்தூரிபா காந்தி எரவாடா சிறைச்சாலைக்கு மாற்றப் பட்டுத் தமது கணவரின் அருகிருக்க அநுமதிக்கப் பட்டார்.

தலைவர்கள் தொடர்ந்து பிர்லா மாளிகையில் கூடி இப்பிரச்னைக்கு ஒரு முடிவு காண விழைந்தனர்.

## ஹரிஜன ஸ்தானங்கள்

டாக்டர் டேஜ்பகதூர் சப்ரு, எம். ஆர். ஜெயகர், பண்டித மதன்மோகன் மாளவியா, எம். சி. ராஜா, இராஜாஜி, டாக்டர் அம்பேத்கார், டாக்டர் சோலன்கி, அம்ரிட்லால் தாக்கர் பாபா, ஜி. டி. பிர்லா, சர் சுனிலால் மேத்தா, சர் சிமன்லால் செதல்

வாட் ஆகியோரும் பிறரும் பம்பாயிலும் பூனவிலும் மாறி மாறி இடைவிடாது கூடிக் கூடி விவாதித்தும், மகாத்மாவுடன் எரவாடா சிறையில் கலந்தும் ஒரு முடிவு தேடினர்.

ஹிந்துக்களின் பொதுத் தொகுதியில் ஹரிஜனங்களுக்கு 147 ஸ்தானங்கள் ஒதுக்குவதென்று முடிவைக் கண்டனர்.

பிரிட்டிஷ் பிரதமரின் தீர்ப்பின்படி ஹரிஜனங்களுக்கு 71 ஸ்தானங்களே கிடைத்திருக்கும்.

ஆனல் டாக்டர் அம்பேத்கார் கடைசிவரை 197 ஸ்தானங்கள் வேண்டுமென்று விடாப்பிடியாய்ப் போராடினர்.

தில்லி மத்திய சட்டசபையில் ஹரிஜனங்களுக்கு தீர்ப்பில் கூறப்படவில்லை. எனினும் தலைவர்கள் மகாநாட்டில் மொத்தப் பொது ஸ்தானங்களில் 18 சதம் ஹரிஜனங்களுக்கு ஒதுக்குவதென்று ஒப்புக்கொள்ளப் பட்டது.

பிரிட்டிஷ் பிரதமரின் தீர்ப்பில், ஹரிஜனங்களுக்கு எத்தனை ஸ்தானங்களென்று பிரிட்டிஷ் மந்திரியின் வழங்கப்படும் தனித்தொகுதியும், அவர்களுக்கு ஒதுக்கப்படும் ஸ்தானங்களும். இருபது வருடங்கள் அமலில் இருக்குமென்றும், அதன் பிறகு காலாவதியாகுமென்றும் கூறப்பட்டிருந்தது.

ஆனல் 20 வருடங்களுக்கப்புறம் ஹரிஜனங்களிடையே வாக்கெடுத்து, அதனைக் கைவிடுவதா அல்லது நீடிப்பதா என்று முடிவு செய்ய வேண்டுமென்று அம்பேத்கார் விடாப்பிடியாக வாதாடினர்.

20 வருடங்கள் வரை எதற்காகக் காத்திருக்க வேண்டும்? அடுத்த ஆண்டில், அல்லது அதிகபட்சம்

அடுத்த ஐந்தாண்டில் இந்த வாக்கெடுப்பை வைத்துக் கொள்ளலாமே என்று மகாத்மா கூறினர்.

அம்பேத்கார் படிப்படியாக இருபதிலிருந்து பத்தாண்டுகளுக்கு இறங்கிவந்தார் மகாத்மா பத்தாண்டு கெடுவுக்கு இணங்கவில்லை.

5 வருடம் அல்லது என்னுயிர் இரண்டில் எது வேண்டும் என்ருர் மகாத்மா கேட்டார் முடிவாக.

ஆம் மிகத் தாழ்ந்த குரலில் மகாத்மா கூறிய அம் முடிவு எல்லோர் காதிலும் விழும் பொருட்டு வாயு பகவான் அவ்வேளை அமைதியாக இருந்தார். அவர் சாய்ந்திருந்த மாமரத்தின் இலைகள் அசைவற்று நின்றன. மிக்க உன்னிப்புடன் அங்கு கூடியிருந்தவர்கள் மகாத்மாவின் சொற்களைக் கேட்டனர். அம்பேத்காரின் செவிகளிலும் அச் சொற்கள் கேட்டிருக்கும். ஆனல் அவரது உள்ளம் கேட்கவில்லை.

பத்தாண்டுகள், பத்தாண்டுகள் என்று அம்பேத்கார் பதட்டமின்றித் தெரிவித்தார்.

அந்நிலையில் எல்லோரும் பிரிந்தனர்.

## இராஜாஜி நிகழ்த்திய அற்புதம்

வாக்கெடுப்பு நடத்தவேண்டிய காலத்தைப் பின்னர் நிர்ணயிப்போம். இப்போது ஒப்பந்தத்தின் இதர ஷரத்துக்களை ஒப்புக்கொண்டு கையெழுத்திட்டு இப் பிரச்னையை ஒரு முடிவுக்குக் கொண்டு வருவோம் என்ற யோசனையை அம்பேத்காரிடம் கூறி அவரை இணங்க வைத்தபின், எரவாடா சிறைக்கு ஓடோடிச் சென்ருர் இராஜாஜி,

அண்ணலிடம் அதைச் சொன்னர்.

மீண்டும் ஒருமுறை சொல்லும் கேட்போம் என்ருர் காந்தி.

இராஜாஜி மீண்டும் அதையே சொல்லி முடித் தார்.

நீங்கள் மறுக்க மாட்டீர்கள் என்ற தைரியத்தில் நான் இந்த ஏற்பாட்டிற்கு டாக்டர் அம்பேத்காரை இணங்கச் செய்தேன் என்ருர் இராஜாஜி.

"எக்ஸலண்ட்" என்ருர் காந்தி.

இப்படியாக மகாத்மா காந்தி 1932ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 20ந் தேதி தொடங்கிய வீரகாவிய உண்ணுவிரதம் (Epic Fast) ஐந்தே நாட்களில் ஒரு சுமுகமான முடிவைப் பெற்றது.

இந்த எரவாடா ஒப்பந்தத்தில் மகாத்மா காந்தியைத் தவிர அங்கு கூடியிருந்த மற்றெல்லோரும் கைச் சாத்திட்டனர்.

செப்டம்பர் மாதம் 26ந் தேதி காலையில் எர்வாடா ஒப்பந்த ஷரத்துக்களை அங்கீகரித்துப் பிரிட்டிஷ் பிரதம மந்திரி மெக்டொனுன்டின் விடுத்த அறிக்கை ஏக காலத்தில் லண்டனிலும், டெல்லியிலும் பிரகடனம் செய்யப்பட்டது.

அன்று மாலை 5-15 மணிக்கு எர்வாடா சிறைச் சாலையில் அன்னை கஸ்தூர்பா அளித்த பழரசத்தைப் பெற்று, ருசித்து ருசித்து மகாத்மா உண்ணுவிரதம் என்ற தபஸை முடித்துத் தேச மக்களின் நெஞ்சில் பாலை வார்த்தார்.

## ஹரிஜன யாத்திரை

செப்டம்பர் மாதம் 27ந் தேதியிலிருந்து அக்டோபர் இரண்டாந்தேதி முடிய நாடெங்கும் தீண்டாமை ஒழிப்பு வாரம் கொண்டாடப்பட்டது.

இராஜாஜியும் பாபு ராஜேந்திரப் பிரசாதும் இக் கொண்டாட்டத்தை நடத்தும் விதம் பற்றித் திட்டங்கள் வகுத்துக் கொடுத்தனர்.

மகாத்மா காந்தி சிறையிலிருந்தபடியே தீண்டாமை ஒழிப்புத் திட்டத்தில் கவனம் செலுத்த இந்திய அரசாங்கத்தால் அநுமதிக்கப்பட்டார்.

தீண்டாமை ஒழிப்பிற்கும், தீண்டாதாரின் மேம்பாட்டிற்கும் உழைக்கவல்ல. ஹரிஜன சேவா சங்கம் அகில இந்திய ரீதியில் ஸ்தாபிக்கப்பட்டு, மாகாணங்கள் தோறும் கிளைகள் நிறுவப்பட்டன. அதன் செலவிற்காக ஹரிஜன நிதி திரட்டப்பட்டது.

நாடெங்கும் வகுப்பு ஒற்றுமைக்கான அரிய சூழ்நிலை உதயமாயிற்று.

முப்பத்தேழு கிறிஸ்தவப் பிரமுகர்கள் கூடிக் கைசாத்திட்டு, கிறிஸ்தவர்களுக்கும் பொதுத் தொகுதியே வேண்டுமென அறிக்கை வெளியிட்டனர்.

காலப் போக்கில் மகாத்மா காந்தி சிறையினின்றும் விடுவிக்கப்பட்ட பின்னர் நாடெங்கும் ஹரிஜன யாத்திரை தொடங்கினார்.

ஊர் ஊராகச் சென்று தீண்டாமை ஒழிப்புக்கு ஆதரவும் நிதியும் வேண்டினார்.

அவர் ரயிலிலே பிரயாணஞ் செய்யும்போது ஒவ்வொரு ரயில் நிலையத்திலும் கையேந்தித் துண்டை விரித்து ஹரிஜன நிதிக்காக யாசகம் வாங்கினார்.

அவரைக் காணவந்த பெண்டிரும் சிறுமிகளும் தாங்கள் அணிந்திருந்த பொன்னாபரணங்களை முக மலர்ச்சியுடன் கழட்டிக் கொடுத்தனர்.

சில சீமாட்டிகள் விலையுயர்ந்த நகைகளையெல்லாம் கழட்டித் தங்கள் மாளிகைகளில் பத்திரப் படுத்தி விட்டு, காந்தியிடம் கழட்டிக் கொடுப்பதற்கென்றே சின்னஞ் சிறியதாகச் சங்கிலிகளையும் மிகச் சன்னமான வளையல்களையும் அணிந்து சென்றனர்.

தன்னிடம் நகைகளைக் கழட்டிக் கொடுத்துவிட்டு, வீட்டுக்குச் சென்றதும் வேறு நகைகள் போட்டுக் கொள்ளக் கூடாதென காந்தியடிகள் வேடிக்கையாக அப் பெண்களிடம் சொல்லுவார்.

ஒவ்வொரு நாளும் ஹரிஜனங்களுக்கு எங்கெங்கே கோவில்களும், குளங்களும் திறந்து விடப்பட்டன வென்ற செய்திகள் பத்திரிகைகளை நிரப்பிக் கொண் டிருந்தன.

## தென்னாட்டு விஜயம்

1934-ம் ஆண்டின் துவக்கத்தில் அண்ணலார் தமிழ்நாட்டில் யாத்திரை செய்தார்.

பிப்ரவரிமாதத்தில் அவர் திருப்பூர் வந்திருந்த போது நான் திருப்பூர் காதிவஸ்திராலாய நிர்வாகியா கப் பணியாற்றிக்கொண்டிருந்தேன். அச்சமயம் அவரை வரவேற்று உபசரிக்கும் அரிய வாய்ப்பினை நாங்கள் பெற்றோம்.

அன்று மாலை கோவை சாமி தியேட்டரில் நடை பெற்ற நந்தனார் நாடகத்தைக் காணக் காந்தியடிகளை சம்மதிக்கச் செய்தோம். திரு. T. S. அவனாசிலிங்கம் இவ்விஷயத்தில் மிகுந்த அக்கரை காட்டினார்.

காந்தியார் நாடகக்கொட்டகையுள் நுழைந்ததும் நாடக மேடையின்மீது ஒரு நாற்காலியில் அமர்ந்தார். நவாப் T. S. இராஜமாணிக்கமும் அவரது நடிகர்களும் காந்தியைச் சூழ்ந்து நின்றுகொண்டு ரகுபதிராகவ ராஜாராம் பாடத் தொடங்கிவிட்டனர். அவ்வளவு தான் காந்தி பார்த்த நாடகம்!

அவருக்கு ஒரு வரவேற்புப் பத்திரத்தை இராஜ மாணிக்கம் வாசித்துக் கொடுத்தார். அதனைக் காந்தி ஏலத்தில் விட்டார். பனிரெண்டு ரூபாய்க்கு நான் எடுத்து இராஜமாணிக்கத்துக்கே திருப்பிக் கொடுத்து விட்டேன்.

அன்றைய நாடக வசூல் ஆயிரமோ, ஆயிரத் தைந்நூறோ ஹரிஜன நிதிக்கு இராஜமாணிக்கம் கொடுத்தார்.

அப்போது, மதுரை பாலவிநோத சங்கீத நாட்க சபா என்னும் அந்த நாடகசபை இராஜமாணிக்கம் உள்பட பனிரெண்டு பேர்களுக்குச் சொந்தமாயிருந் தது. அவர்களில் காமிடியன் சாரங்க பாணியும் ஒருவர். அவர் காந்திஜியிடம் பக்திப்பரவசம் கொண் டிருந்தார். அந்நாடகக் குழுவிலிருந்த இராஜாராம் பாகவதர் காந்தி கதாகாலட்சேபங்கள் செய்து காந்தி பாகவதரென மக்களால் போற்றப்பட்டார்.

## இந்துமதப் புனருத்தாரணம்

இந்து மதத்தைப் புனருத்தாரணம் செய்யும் பொருட்டேதாம் தீண்டாமையகற்றும் பணியில் ஈடு பட்டுள்ளதாகவும், தீண்டாமை இந்து மதத்தின் சாபத் தீ என்றும் மகாத்மா தமது ஹரிஜன யாத்தி ரையின்போது தெரிவித்த கருத்துக்கள் எனக்கு உடன்

பாடானதாய் இருக்கவில்லை. மனிதருள் பிளவையும் பிணக்கையும் உண்டு பண்ணும் சகல மதங்களும் அழிக்கப்பட்டு, மனிதனுக்கு மனிதன் வேற்றுமை பாராட்டாததும், மனிதகுல மனைத்தும் ஒன்றே என்று கருதும்படியான சமரச சன்மார்க்கக் கனவு காண்பவர் களில் நானும் ஒருவன்.

ஹரிஜன யாத்திரையின்போது பூரியில்தான் மகாத்மாவுக்குப் பலமான எதிர்ப்பை சனாதனிகள் காட்டினார்கள். அவர்மீது கல்லெறிந்தார்கள். இச் சம்பவம் நடந்து முப்பத்தைந்து ஆண்டுகள் கடந்த பின்னும் அதே பூரி சங்கராச்சாரிய சுவாமிகள் தான் தீண்டாமை இந்து மத தர்மத்தில் தவிர்க்கமுடியாத ஒரு ஏற்பாடு என்று வாதாடுகிறார்.

ஏகமான ஒரே கடவுளுக்கு இத்தனை மதப்பிரிவுகள் எதற்காகவோ? என் தெய்வம் என் தெய்வம் என்று ஏக தெய்வத்தைப் பிரித்துப் பிரித்துப் பங்கிட்டு வாதாடும் சமயங்களும், சமயங்களும் ஒழியும்வரை மனித குலத்திற்கு விமோசனமில்லை.



கோவை திரு அய்யாமுத்து



திரு அய்யாமுத்து அவர்களும் அவர் துணைவியாரும்

# 5

## சபர்மதி முனிவர் வர்தாவில் வசிக்கலானர்

*1930*-ல் தண்டிக்குச் செல்லுமுன் சுயராஜ்யம் பெற்ருலொழிய சபர்மதி ஆசிரமத்துக்கு வருவதில்லை யென்று மகாத்மா சபதம் செய்து கொண்டாரல்லவா?

ஆதலால் அவர் வர்தாவையடுத்த சேவா கிராமத்தில் தமது பரிவாரங்களோடு தங்கலானர்.

சேத் ஜம்னலால் பஜாஜ் என்னும் குபேரன் மகாத்மாவுக்கு சேவாகிராமத்தில் ஆசிரமமும், வர்தாவில் அவர் நடத்திய பல்வேறு காரியங்களுக்கும் இடமும், கட்டிடங்களும். பொருள் வசதியும் செய்து கொடுத்தார்.

இவற்றையெல்லாம் கண்ட அவதூறுப் பிரியர்கள் என்ன சொன்னர்கள் தெரியுமா?

"சோழியன் குடுமி சும்மாவா ஆடும்? சேத் ஜம்னலால் காரியம் இல்லாமலா காந்தியை அங்கு குடியேற்றினர். சல்லிக்காசும் பொருத அவருடைய பொட்டைக் காடுகள் காந்தி குடியேறிய பின்பு ஏராளமான விலை மதிப்புடையதாகிவிட்டன" என்று வாய் கூசாமல் கூறினர்.

*1931*-ல் கராச்சியில் நடைபெற்ற காங்கிரசுக்குப் பின்னர் *1934*-ல் பம்பாயில் பாபு ராஜேந்திரபிரசாத் தலைமையில் கூடியது,

வழக்கமாகக கையால் நூற்றுக் கையால் நெசவு செய்யப்பட்ட கதராடை வழக்கமாக அணிபவர்களே காங்கிரஸ் நிர்வாகக் குழுக்களில் அங்கம் வகிக்கத் தகுதியுடையவர்களென காங்கிரஸ் விதி இவ்வாண்டு திருத்தப்பட்டது.

மகாத்மா இவ்வாண்டிலிருந்து காங்கிரசின் சாதாரண அங்கத்தினராகவும் இருப்பதில்லை யென்று தீர்மானித்து வர்தாவையடுத்த மகன்வாடியிலே கிராமக் கைத் தொழில் சங்கத்தை ஜே. சி. குமரப்பாவின் மேற்பார்வையில் நிறுவினர்.

மற்றும் வர்தா கல்வித்திட்டம், அதாவது கல்வி கற்கும்போதே யாதாமொரு கைத்தொழிலைக் கற்பித்தல், ஹரிஜன சேவாசங்கம், ஹிந்திப்ரசார சபை, காந்தி சேவாசங்கம், குஷ்ட நிவாரண சங்கம், எல்லாவற்றிற்கும் சிகரமாக அகிலபாரத சர்க்கா சங்கம் ஆகிய நிறுவனங்களுக்குத் தலைவராகவும், ஆலோசகராகவும், வழிகாட்டியாகவும் பணிபுரிந்து வந்தார்.

அத்துடன் 'ஹரிஜன்' என்ற ஆங்கில வாரப் பத்திரிகைக்கும் 'நவஜீவன்' எனும் குஜராத்தி வாரப் பத்திரிகைக்கும் ஆசிரியராயிருந்து கட்டுரைகள் எழுதி வந்தார்.

உலகின் பல பாகத்திலிருந்தும், பாரதத்தின் எத்திசையிலிருந்தும் பிரதிதினமும் பலபேர் காந்தியைக் காணவும், பல காரியங்கள்பற்றி அவரது கருத்தை அறியவும் சேவாகிராமம் சென்றுகொண்டே இருந்தனர்.

## சேத் ஜம்னுலால் பஜாஜ்

ஸ்ரீ இராமனுக்கு குகன் ஐந்தாவது சகோதரனுக வாய்த்தது போன்று சேத்ஜம்னுலால் பஜாஜ் மகாத்மா காந்திக்கு ஐந்தாவது புதல்வனுக வாய்த்தார்.

அவர் உயிருள்ள வரைக்கும் அகில இந்திய காங்கிரசின் பொக்கிஷதாரராய் இருந்ததுடன், காங்கிரசின் ஆக்கப்பணிகளில் பெரும் பங்கெடுத்துக் கொண்டார்.

ஒரு சமயம் தமிழ்நாட்டில் நடைபெறும் கதர் வேலையை நேரிற் கண்டறியும் பொருட்டு அவர் வந்தார். அப்போதும் அவரும் நானும் ஈரோட்டுப் பெரியாரும் திருப்பூர், அவனுசி வட்டாரத்திலிருந்தே பல உற்பத்திக் கேந்திரங்களைச் சென்று பார்த்தோம்,

வர்தாவிலும் அதைச் சுற்றிலும் நூற்றுக்கணக்கான ஏக்கர் நிலத்தைத் தானமாகக் கொடுத்து, எண்ணற்ற கட்டிடங்களையும் கட்டிக் கொடுத்து. அவற்றில் பல ஸ்தாபனங்களுக்கும் கல்வி கைத்தொழில் நிலையங்களும் சிறப்புடன் நடைபெறுவதற்கு உதவிய வள்ளல் சேத் ஜம்னுலால் பஜாஜ் ஆவார்.

1923-ல் நாகபுரியில் வெள்ளையர்வாழும் பகுதியில் தேசியக் கொடி ஏந்திய ஊர்வலம் செல்லக்கூடாதென தடை விதிக்கப்பட்டது. அத்தடைய மீறி தேசியக் கொடி ஊர்வலத்தை தலைமை தாங்கி நடத்திச் சிறைக் கோட்டம் எய்தியவர் பஜாஜ். பாரதத்தின் பல பாகத்திலிருந்தும் அக் கொடிப் போரில் கலந்து கொள்ளச் சாரை சாரையாகத் தொண்டர்கள் சென்றனர். அவர்கள் யாவரும் தங்க இடமும், உணவும் உடையும் போக வரச் செலவுக்கு நிதியும் தந்து உதவி வெற்றிக் கண்டவர் பஜாஜ்

பஜாஜ் சிறையிலிருக்கும்போது அவரது காலிலே இரும்புக் காப்பு அணியப்பட்டதைக் கேள்விப்பட்ட வுடனே, அவரது சின்னஞ் சிறு பெண் குழந்தை தனது காலை அலங்கரித்து நிற்கிற தங்கச் சிலம்புகளைக் கழட்டி யெறிந்துவிட்டு, இரும்புக் காப்புகளை மாட்டிக் கொண்டாள்!

மகாத்மா தங்கியிருந்த சேவாகிராமத்தில் அவருக்கும் அவருடனிருந்த மற்ற சகாக்களுக்கும் வேண்டிய யாவற்றையும் பயபக்தி விஸ்வாசத்தோடு வழங்கியும், கவனித்தும், சேவித்தும் வந்தவர் பஜாஜ்.

அகில இந்திய உத்யோக (கைத்தொழில்) சங்கம்.

வித்யாமந்திர (வர்தா கல்விதிட்ட பள்ளி) பள்ளிக்கூடம்)

ஹிந்தி பிரசார சபையின் தலைமைக் கார்யாலயம்.

பஜாஜ் கோவில் (கிருஷ்ணன் கோயில்)

ஹரிஜனசாலை

நவபாரத வித்தியாலயா

விருந்தாளிகள் தங்குமிடம்

மகிலாச்ரமம் (பெண்கள் பாடசாலை)

இத்தியாதி ஸ்தாபனங்கள் ஒவ்வொன்றுக்கும் லட்சக்கணக்கில் செலவு செய்து கம்பீரமான கட்டிடங்களை பஜாஜ் கட்டிக் கொடுத்துள்ளார்.

மகாத்மாவைக் காணச் செல்லும் அனைவரும் தங்குவதற்கு வசதியாக கட்டப்பட்டிருக்கும் விருந்தினர் மாளிகையில் வருவோர் போவோர் அனைவரையும் உபசரிக்க வேலையாட்களையும், போஜன சாலைகளையும், இதர சௌகரியங்களையும் ஏற்படுத்தி நடத்தி வந்தார்.

ஜம்னுலால் பஜாஜ் அவர்கள் சிவந்த மேனியும் ஆஜானுபாவான உடலும், புன்முறுவல் பூத்த முகமும், குழந்தையின் உள்ளமும் கொண்டிருந்த கனவான் ஆவார். எல்லோரிடமும் அவர் இனிமையாகப் பழகினர். வர்தா சென்றபோதெல்லாம் அவரைக் காணவும், அவருடன் உரையாடவும், உண்ணவும் அரிய வாய்ப்பினைப் பெற்றேன்.

## அகிலபாரத சர்க்கா சங்கம்—திருப்பூர்

1933-ம் ஆண்டு பிப்ரவரியில் நான் கோவைச் சிறையினின்று விடுதலை பெற்றதும், திருப்பூர் அகில பாரத சர்க்கா சங்கத்தின் தலைமை வஸ்திராலயத்தின் நிருவாகப்பொறுப்பை ஏற்றுப் பணியாற்றத் தொடங்கினேன்.

அச்சங்கம் அச்சமயத்தில் தாங்க முடியாத நஷ்டத்தில் வேலை செய்து கொண்டிருந்தது. நஷ்டமேற்படுவதற்குக் காரணமாயிருந்த ஓட்டைகளையெல்லாம் தேடிப் பிடித்து ஒவ்வொன்ருக அடைக்க முனைந்தேன். இதனல் பாதிக்கப்பட்டவர்களுடைய மனக் கசப்புக்கும், தூற்றுதலுக்கும், தாக்குதல்களுக்கும் நான் ஆளாக நேர்ந்தது.

நான் வஸ்திராலயம் பொறுப்பேற்ற சிந்நாட்களில் அ. பா. ச. சங்கத்தின் தமிழ் நாட்டுக் கிளைக் காரியதரிசியாயிருந்த என். எஸ். வரதாச்சாரியார் விலகிக் கொண்டார்.

அவருக்குப் பதிலாகத் திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தில் பணியாற்றி வந்த என். நாராயணன் அய்யர் காரியதரிசியாக நியமிக்கப்பட்டார். எனினும் அவர் உடல்நலமின்மையால் தென் கோடியில் நாகர்

கோவிலில் உள்ள அவரது குடும்பத்தோடு வசிப்பதும் எப்போதாவது திருப்பூருக்கு வருவதுமாக இருந்த தால் முழுப் பொறுப்பும் கவனமும் என்னுடைய தாயிற்று.

தமிழ் நாடெங்கும் அக்காலத்தில் வீசிக்கொண் டிருந்த பிராமணர் — பிராமணரல்லாதார் என்ற வகுப்புவாத விஷக் காற்று தியாகிகளும் தேசத்தொண் டர்களும் நிறைந்திருந்த புனித ஸ்தாபனமாகிய சர்க்கா சங்கத்திலும் பரவியிருந்தது.

அகில பாரத சர்க்கா சங்கம் ஒரு பிராமண கோட்டையென்றும், காங்கிரஸ் தொண்டர்களின் புகலிடமென்றும், எனவே கதர் கட்டக்கூடாதென்றும் ஈ. வெ. இராமசாமிப் பெரியார் பலமான பிரசாரம் செய்து வந்தார்! இவரே ஒரு காலத்தில் தமது "குடியரசு"ப் பத்திரிகையில் "ஜஸ்டிஸ் கட்சிக் கனவான் களே! உங்களுக்கு ஏழைகளிடத்திலும் கிராம முன்னேற் றத்திலும் அக்கரையிருந்தால் கதர் கட்டுங்கள்" என்று பிரதிவாரம் கோடுகள் கட்டி விளம்பரம் செய்திருந் தார். இவரே கதர் போர்டின் தலைவராகப் பணியாற் றிக் கதரைப் பரப்பியுமிருக்கிறார். இவரது கூற்றுக் களைப் பொய்ப்பிக்கும் பணியில் நான் ஈடுபட்டு 'இராம சாமியும்—கதரும்' என்றொரு பிரசுரம் ஏராளமாக அச்சிட்டு வழங்கினேன்.

சர்க்கா சங்கத்தின் பல கிளைகளில், அண்ணன் தம்பி, மாமன், மச்சான் என்று ஒரே குடும்பத்தைச் சார்ந்தவர்கள் ஒரே இடத்தில் பணியாற்றி வந்ததால் அவர்களைப் பிரித்துப் பல்வேறு கிளைகளுக்கு மாற் றினேன்.

நூலையும் துணியையும் எடைபோட்டு வாங்கி வந்த தால் பல பித்தலாட்டங்களுக்கு ஹேதுவாக இருந்த

தால், நூலை 840 செஜங்கள் கொண்ட சிட்டங்களாக வும், துணியைப் புஞ்சத்திற்கு இவ்வளவு சிட்டமென்று கணக்கிட்டும் வாங்கும்படியாகப் பிரமப் பிரயத்தனம் செய்து வெற்றி பெற்றேன்.

நூற்போரிடமிருந்தும் நெசவு செய்வோரிட மிருந்தும் நூலுந் துணியும் வசூலித்துக்கொடுப்பதற்கு நியமிக்கப்பட்டிருந்த இடைத் தரகர்களையெல்லாம் நிறுத்திவிட்டுக் கிராமங்கள்தோறும் தொண்டர்களை நியமித்து நேரடியான தொடர்பு கொள்ளச் செய்தேன்.

அச்சு சாயமிடும் வேலையை வெளியார்களிடம் ஒப்படைத்திருந்ததை அறவே நிறுத்தி, சங்கத்திலேயே தொழிலாளர்களைக் கொண்டு அவ்வேலைகளைச் செய்த தால் நல்ல பலனும் கதருடுத்துவோரின் பாராட்டு தலும் பெற்றேன்.

அன்றாடம் இருப்புகள் பதிவு செய்யவும், அவற்றை தணிக்கை செய்யவும் பல பரிசோதகர்களை நியமித்துக் கண்காணிக்கச் செய்தேன்.

மூட்டை தூக்கிகளாகவும், வண்டி ஓட்டுபவர்களாக வும் பணியாற்றிய தொண்டர்களில் தகுதியானவர் களைத் தேர்ந்தெடுத்து அவர்களுக்கு சிறப்பான பயிற் சியும் அளித்து அவர்களை நூற்பு, நெசவுக் கிளைகளில் நிர்வாகப் பொறுப்பேற்கும்படி செய்த பெருமை எனக் குண்டு.

நூற்பவர் நெசவு செய்பவர்களும் அவர்களைச் சார்ந்தவர்களும் கதரே உடுத்துவதற்கு வேண்டிய வழி வகைகளைச் செய்தேன்.

நூற்பவர்களிடம் பிரதி வாரமும் இரண்டு சிட் டங்கள் பிடித்து, அதற்கு இணையாகச் சர்க்கா சங்கத்தி

லிருந்தும் இரண்டு சிட்டங்கள் உதவி, அவற்றைச் சேமித்துத் தனியாகக் கணக்குகள் வைத்து, அவற்றைக் கொண்டு நூல் நூற்பவர்களுக்கு அழகான புடவைகள் தயாரித்து ஆண்டுதோறும் 50 ஆயிரம் புடவைகள் விநியோகித்து வந்தேன்.

கைராட்டைகளின் நூற்பு வேகத்தை அதிகரிக்கவும், நூலில் சமமும் முறுக்கும் வலிவும் ஏற்படுத்தவும் புராதன ராட்டைகளில் புதியதொரு இடைச் சக்கரத்தைப் புகுத்தியும், இதர அபிவிருத்தி செய்தும் நூற்பவரின் வருவாயும், கதரின் உழைப்புத் திறனும் பெருகச் செய்தேன்.

விற்பனைக் கிளைகளிலும், மத்திய கோடவுனிலும் பல காரணங்களால் தேக்க முற்று, தூசும் தும்பும் பிடித்து அழுக்கடைந்திருந்த துணிகளையும், துண்டு துணுக்குகளையும் பக்குவமாக அச்சிட்டுக், சாயமிட்டும் தொப்பிகள், சட்டைகள், பெல்டுகள். மணிபர்சுகள், கைப்பைகள், கொடிகள் தோரணங்களாக மாற்றி, அவற்றைக் கவர்ச்சியுடன் விற்கவைத்தேன்.

புதிய புதிய பேட்டு ரகங்கள், நவநாகரிக அச்சு ரகங்கள், கலியாண விசேஷங்கட்கு வேண்டிய பட்டு ஜரிகை ரகங்கள் முதலியவைகளும், அழகுணர்ச்சி உள்ளோரின் கருத்தையும் கவனத்தையும் கவரத்தக்க விதத்தில் புகுத்தினேன்.

சேவா உணர்ச்சியும், கடினமான உழைப்பும், தியாக சிந்தனையும், தேச பக்தியும், ஒழுக்கம் குன்றாத சிலமும், நிறையப் பெற்ற எனது சகாக்களின் உதவியாலும் ஒத்துழைப்பாலும் இவற்றைச் சாதிக்க முடிந்தது என்று தயக்கமின்றிக் கூறுகிறேன்.

ஆண்டுதோறும் சகஜமாக ஏற்பட்டுக்கொண்டிருந்த நஷ்டத்தை அறவே தவிர்த்து, நூற்போர்

நெய்வோர் நலனுக்குச் சேம நிதிகள் ஒதுக்கி, அந்நிதியிலிருந்து அவர்கட்கு நிரந்தரமான விலையில் பருத்தியும் குறைந்த விலைக்கு கருவிகளும், இலவச வைத்தியம், முதியோர் கல்வி முதலிய சேவைகளும் செய்தோம்.

குறிப்பிட்ட மணிக்கணக்கில்தான் என்பதன்றி அல்லும் பகலும் இருபத்துநான்கு மணி நேரமும் கண்ணுங் கருத்துமாக உழைத்து ஒவ்வொரு சல்லிக் காசையும் எண்ணிப் பார்த்துச் செலவு செய்ததால்தான் இவ்வெற்றியைக் காண எங்களால் முடிந்தது.

கதர் கிடைக்காத ஊர்களிலெல்லாம் விற்பனைத் தொண்டர்கள் மூலம் கதர் கிடைக்கச் செய்தும், கதர் வஸ்திராலயங்களை எடுப்பான தோற்றமுறச் செய்தும், கண்காட்சிகள் நடத்தியும். கதர் உண்டியல் வெளியிட்டும் பிரசங்கமாரிகள் பொழிந்தும், அறிவுச் சுடர் கொளுத்தும் ஏராளமான பிரசுரங்கள் அச்சடித்து வழங்கியும், பல அரசியல் மகாநாடுகளுக்குச் சென்றும் தலைமை வகித்தும், "குடிநூல்" மாதாந்திரப் பத்திரிகை நடத்தியும், கதரியக்கம் நாட்டவர் கண்களையும் கருத்தையும் கவரச் செய்ததோடு கதருக்கு எதிர்ப் பிரசாரம் செய்திருந்தவர்களின் வாய்களும் மூடச் செய்தோம்.

நான் ஆற்றிய சிறப்பான தொண்டு தமிழ் நாட்டவர் உள்ளத்தைக் கவர்ந்தது. பொதுவாக நாட்டிலும் சிறப்பாகக் காங்கிரஸ் கமிட்டிகளிலும் எனக்குப் பேராதரவு கிடைத்தது. தொடர்ச்சியாகப் பலவாண்டுகள் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியில் அங்கத்தினராகவும் இருந்தேன்.

கதரியக்கத்துக்கே முழுநேரம் அளிக்கும் உத்தேசத்துடன் நான் பொதுவாக அரசியல் கூட்டங்களுக்குச் செல்வதை எவ்வளவோ தட்டிக் கழித்தேன். அப்படி

யிருந்தும் அக்காலத்தில் சற்றேறக்குறைய இருபது மகாநாடுகளில் நான் தலைவனாகவோ திறப்பாளனாகவோ தேர்ந்தெடுக்கப் பெற்றேன். இது தமிழ் நாட்டு அரசியலில் எனக்கிருந்த ஈடுபாட்டையும் செல்வாக்கையும் எடுத்துக் காட்டுகிறது. எனினும் இச் செல்வாக்கனைத்தையும், கதரியக்கத்துக்குப் பயன் படுத்தினேன்.

## சில ஒழுங்கீனங்கள்

தமிழ் நாட்டிலுள்ள எழுபது கதர் உற்பத்தி விற்பனைக் கிளைகளிலிருந்து பிரதி தினமும் அக்கிளைகளின் அன்றுட வரவு செலவுக் குறிப்பின் நகல்கள் திருப்பூர் தலைமைக் காரியாலயத்துக்கு வந்து சேரும். அந் நகலைப் பார்வையிட்டு ஒவ்வொரு கிளைக்கும் ஒரு தனித் தனி பேரேடு பதிவு செய்து வந்தோம்.

உற்பத்திக் கிளைகளுக்குப் பணம் தேவையாகும் போது திருப்பூர் தலைமைக் காரியாலயத்திலிருந்து அனுப்பப்பட்டு வந்தது.

விற்பனைக் கிளைகள் அன்றுட விற்பனைத் தொகையை பாங்குகளில் செலுத்தி வரவேண்டுமென்றும் திட்டமிடப்பட்டிருந்தது. ஜவுளி வாங்குகிறவர்களுக்கு சில்லரை மாற்றிக் கொடுப்பதற்கு ஒவ்வொரு கிளையும் கையில் இவ்வளவு தொகை வைத்துக் கொள்ளலாமென்று திட்டம் கொடுத்திருந்தோம். சென்னை மதுரை போன்ற பெரிய கிளைகளில் நூறு ரூபாய் வைத்துக்கொள்ள அநுமதிக்கப்பட்டிருந்தது.

ஒருநாள் சென்னை, மதுரை வஸ்திராலயக் குறிப்பின் நகல்களை நான் பார்வையிடும்போது ரொக்கக்

கையிருப்பு மிக அதிகமாக இருந்ததைக் கவனித்தேன்.

பாங்கு லீவு நாட்களில் பணம் செலுத்த முடியாததால் கையில் விற்பனைத் தொகைகள் தேங்கி வருதல் உண்டு. ஆனால் தொடர்ச்சியாகப் பல நாட்கள் குறிப்பின் நகலை எடுத்துப் பார்த்தபோது சென்னையிலும் மதுரையிலும் கைவசம் ஆயிரம் ரூபாய் வரையில் இருந்தது தெரியவந்ததால், அக்கிளைகளுக்கு காரணம் கேட்டுக் கடிதம் எழுதினேன்.

அவர்கள் பதில் வந்தது, அவர்கள் சரக்கை சங்க மாஜி ஊழியர்கள் இரண்டு பேருக்கு அனுமத்தாக 500 ரூபாய் கடன் கொடுத்திருப்பது தெரியவந்தது. தாட்சணியத்திற்காக அவர்கள் ஒழுங்கீனமான முறையில் இத்தகைய கொடுக்கல் வாங்கல்களைச் செய்து வந்திருக்கிறார்கள். அவ்வாறு கைமாற்றுக்கடன் கொடுப்பதற்கு அவர்களுக்கு அனுமதி கிடையாது. ஆதலால் அத்தொகைகளை அவர்கள் கணக்கேடுகளில் பதிவு செய்யாமல் திட்டச்சிட்டையில் மாத்திரம் குறித்து வைத்திருந்தார்கள்.

இச்சம்பவம் நிகழ்ந்தபோது திரு என். நாராயண அய்யர்தான் காரியதரிசியாக இருந்தார். அவர் திருப்பூரில் இல்லாத காரணத்தால் இது குறித்து நான் இராஜாஜிக்கும், சங்கர்லால் பாங்கருக்கும் கடிதங்கள் எழுதினேன்.

இவ்விரு தொண்டர்களும் சர்க்கா சங்க சேவையில் நீடித்து இருப்பதாக இராஜாஜி எண்ணிக்கொண்டு, ஏதோ அவசரத்துக்குப் பணம் எடுத்துள்ளார்கள். சம்பளம் பெற்றதும் கொடுத்துவிடுவார்கள். இது வழக்கமாகச் செய்யப்படும் சாதாரண காரியம் என்பு

தாக அவர் எனக்கு கடிதமெழுதித் தொண்டர்களுக்கு முப்பது நாட்கள் வேலை செய்தபின் சம்பளம் கொடுப்பதற்குப் பதிலாக பிரதிமாதமும் ஒருமாத சம்பளம் அடவான்சாகக் கொடுத்து வரலாமென எனக்கு ஆலோசனை கூறினார். இந்த கருத்தை அவர் பாங்கருக்கும் மகாத்மா காந்திக்கும் எழுதியிருந்தார்.

மகாத்மாவின் கடிதம்

வர்தா.
27 நவம்பர் 1935

எனதன்புள்ள அய்யாமுத்து!

ஸ்ரீபாங்கருக்கு நீங்கள் எழுதிய கடிதத்தை நான் படித்தேன்...

நீங்கள் குறிப்பிட்டிருந்த விஷயத்தை விசாரித்தேன்.

அவர்கள் பணம் எடுத்தது முறையானதல்லவென்று நான் நம்புகிறேன். அவர்கள் கெட்ட எண்ணத்தோடு பணத்தை எடுக்கவில்லை...

ஆனால் வஸ்திராயப் பணத்தை அவர்கள் அவ்விதம் பயன்படுத்தியது சரியல்லவென்று அவர்கள் உணரவில்லை. இந்த எச்சரிக்கைக்குப் புறம்பாக நான் அவர்கள்மீது யாதொரு நடவடிக்கையும் எடுக்கப்போவதில்லை. அவர்கள் இருவரும் கண்ணியத்தோடு கதர்ச் சேவை செய்துள்ளார்கள். இந்த லேவாதேவியால் அவர்கள் ஒழுக்கம் பாதிக்கப்படவில்லை.

இம்மாதிரி பணம் எடுப்பது சகஜமாக நடந்து வந்துள்ளதென்பதைக் குறிப்பிட நான் வருந்துகிறேன். இவற்றில் பெரும் பாலும் துஷ்பிரயோகமோ ஒளிமறைவோ இருக்கவில்லை.

இவ்வாறு ஒழுங்கீனமாகப் பணம் எக்காரணங்கொண்டும் எந்தக் கிளையிலும் எடுக்கக் கூடாதென்றும் அவ்வாறு எடுக்கப்பட்டால் முன் அறிவிப்பின்றி வேலையினின்று நீக்கப்படுவார்களென்றும் ஸ்ரீ பாங்கர் சுற்றறிக்கை அனுப்பிக் கொண்டிருக்கிறார். இத்தகைய ஒழுங்கீனங்காணப்பட்டால், அதனை யுடனே தலைமைக் காரியாலயத்துக்குத் தெரிவிக்குமாறு பரிசோதகர்களும் கேட்டுக் கொள்ளப்பட்டிருக்கிறார்கள்.

இது உங்களுக்குப் பூரண திருப்தி அளிக்க வேண்டும்.

உங்கள் அன்புள்ள
எம். கே. காந்தி

## முழுப்பொறுப்பும் ஏற்றுக்கொண்டேன்

இச்சம்பவம் நடந்த சில வாரங்களுள் டி. என். நாராயணன் இராஜிநுமா செய்து விலகிக் கொண்டபடியால், 1936 பிப்ரவரி மாதத்தில் அகில பாரத சர்க்கா சங்கத்தின் காரியதரிசிப் பதவியை, மகாத்மா காந்தி விரும்பியவாறும், இராஜாஜீயின் வற்புறுத்தலின் பேரிலும் நானே ஏற்றுக்கொள்ள வேண்டியதாயிற்று.

# 6

## லக்நௌ காங்கிரஸ்

காங்கிரஸ் மகாசபையின் 49வது கூட்டம் லக்நௌ எனப்படும் இலட்சுமணபுரியில் 1939, ஏப்ரல் மாத மத்தியில் பண்டித ஜவஹர்லால் தலைமையில் நடைபெற்றது.

அம் மகாநாட்டிற்கு நான் பிரதிநிதியாகவும், அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தேன்.

அம் மகாநாட்டை யொட்டி நடைபெற்ற கதர்ப் பொருட்காட்சிக்கும், கதர் ஸ்டாலுக்கும் திருப்பூரிலிருந்து கதர் சிப்பங்களையும் இரண்டு ஊழியர்களையும் முன்னதாகவே அனுப்பிவிட்டு நான் ஏப்ரல் 5ந் தேதி புளூமௌண்டன் எக்ஸ்பிரசில் திருப்பூரில் ரயில் ஏறிச் சென்னை, ஜான்ஸி வழியாக 8ந் தேதி முற்பகல் 10-45 மணிக்கு லக்நௌ போய்ச் சேர்ந்தேன்.

மறுநாள் காலை 8-15 முதல் 10-30 வரை கதர் ஊழியர்களின் கூட்டம் மகாத்மா காந்தியின் தலைமையில் நடந்ததில் கலந்துகொண்டு உரையாற்றினேன்.

அன்று மாலையும், அதற்கடுத்த இரண்டு நாட்களிலும் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் கூட்டத்தில் கலந்து கொண்டேன்.

*12, 13* தேதிகளில் மாலை நேரங்களில் காங்கிரஸ் மகாநாடு நடைபெற்றது.

மகாநாடு முடிந்த பிறகு விற்றதுபோக எஞ்சியிருந்த கதரை இதர மாகாணக் கிளைகளுக்கு மொத்தமாகக் கொடுத்துவிட்டு, அதற்கு மாற்றாக பிற மாகாணங்களில் உற்பத்தியாகும் நூதன ரகங்களை வாங்கிச் சிப்பங்கள் கட்டித் திருப்பூருக்கு ரயிலேற்றிவிட்டு, ஹரித்துவார் சென்று காங்கேரி குருகுலத்தையும், ரிஷிகேஷில் சுவர்க்க ஆசிரமத்தையும். சுவாமி சிவாநந்தரையும், காசியில் விஸ்வநாத் க்ஷேத்திரத்தையும், சாந்திநிகேதனில் கவியரசர் ரவீந்திரநாத் தாகூர் அவர்களையும் அவரது குருகுல மாணவர் ஆசிரியர்களையும் தரிசித்துவிடடு கல்கத்தா வழியாக 25ந் தேதி காலை திருப்பூர் வந்து சேர்ந்தேன்.

# 7

## மகாத்மாவின் இரண்டாவது கடிதம்

### பெய்ஸ்பூர் காங்கிரஸ்

1937ம் ஆண்டு பம்பாய் மாகாணத்தில் பெய்ஸ்பூர் என்னும் சிற்றூரிலே காங்கிரஸ் மகாசபைக் கூட்டம் நடைபெற்றது.

வழக்கம்போல் அம் மகாநாட்டிற்கும் கதர்த்துணிகள் விற்பனைக்கும் கண்காட்சிக்கும் தேர்ந்தெடுத்து அனுப்பியிருந்தேன்.

அம்மகா நாட்டிற்கு டெலிகேட்டாகவும் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினராகவும் தேர்ந்தெடுக்கப் பட்டிருந்தேன்.

திருப்பூரில் காந்திநகர் நிர்மாணிக்கும் பணியில் நான் ஈடுபட்டிருந்ததால் நான் பெய்ஸ்பூர் போகவில்லை.

வேறு ஒரு ஊழியரை அனுப்பியிருந்தேன்.

அவ்வூழியர் 20-1-37ல் பெய்ஸ்பூரிலிருந்து திரும்பி வந்தார்.

நான் கடுமையான ஆஸ்துமாவினுல் சங்கடப்பட்டுக் கொண்டிருந்தேன்,

"மகாத்மா உங்களைப் பற்றி மிகக் கேவலமான அபிப்பியாயம் கொண்டிருக்கிறார்" என்ற வாசகத்தோடு அவ்வூழியர் என்னைச் சந்தித்தார்.

அதைக் கேட்டதும் எனக்குச் சிரிப்பு வந்தது.

"நமது ஸ்டாலுக்கு காந்திஜி வந்தார். வந்ததும் அய்யா முத்து எங்கே என்று கேட்டார். நான் வரவில்லையென்றேன். "Oh he is a loafer" என்று சொல்விவிட்டு போய்விட்டார்" என்பதே அவ்வூழியர் கூறிய வார்த்தைகள்.

"அதைக் கேட்ட எனக்கு மிகவும் வருத்தமாயிருந்தது" என்றார் அத்தொண்டர் சிகாமணி.

அவர் என்னிடம் சொன்னதோடல்லாமல் எனது காரியாலயத்திலும் வஸ்திராலயத்திலும் இருந்த அனைவரிடமும் இச்செய்தியை விதைத்துவிட்டார். பலர் என்னிடம் வந்து .........சொன்னதைக் கேட்டீர்களாவென்று தூபம் போட்டார்கள்.

## ஸ்ரீ சங்கர்லால் பாங்கருக்கு என் கடிதம்

1937 ஜனவரி மாதம் இருபத்தொன்றாந் தேதி காலை கண் விழித்ததும் திரு. சங்கர்லால் பாங்கருக்கு ஒரு கடிதம் எழுதினேன்.

இவர் மகாத்மா காந்தியால் நன்கு மதிக்கப்படும் நண்பர். 1921ம் வருஷத்தில் மகாத்மா காந்தியோடு இராஜ விஸ்வாசத் துரோகக் குற்றத்திற்காகத் தண்டிக்கப்பட்டு ஏர்வாடா சிறையில் இருந்தவர். மகாத்மா காந்தியைத் தெய்வமாகப் பாவித்து வணங்கும் இயல்புடையவர். ஆமதாபாத் மில் தொழிலாளர் சங்கத்துக்குத் தலைவராகவும் வழிகாட்டியாகவும் பணி புரிந்து வந்த பணியாளர்.

இவர்தான் எங்கள் அகில பாரத சர்க்கா சங்கத்தின் அகில இந்தியக் காரியதரிசியுமாவர்.

திருப்பூர், 21-1-37.

ஸ்ரீ சங்கர்லால் பாங்கர்
கௌரவ காரியதரிசி
அ. ப. ச. சங்கம், ஆமதாபாத்.

அய்யா,

மகாத்மா காந்தி என்னை ஒரு loafer என்று சொன்னதாக பெய்ஸ்பூருக்கு நான் அனுப்பியிருந்த தொண்டர் தெரிவிக்கிறார்.

இது உண்மையாய் இருக்கும்பட்சத்தில் நான் தமிழ் நாட்டுக் கிளையின் காரியதரிசியாகப் பணிபுரிந்து வருதல் தகுமா என்று சிந்திக்க வேண்டியவனாயிருக்கிறேன்.

தாங்கள் மிக்க அன்புடன் என்னை இம் மனவேதனையினின்று மீள உதவும்படி கோருகிறேன்.

தங்களன்புள்ள,
அய்யாமுத்து

## மகாத்மா எனக்கு அளித்த புகழ்மாலை

சரியாய் ஏழு நாட்களுக்கப்புறம் சேவாகிராமத்துச் செம்மலிடமிருந்து கீழ்க்கண்ட கடிதம் வரப் பெற்றேன்.

சேவாகிராமம், வார்தா.
28-1-37.

அன்புள்ள அய்யாமுத்து,

ஸ்ரீசங்கர்லால் உங்கள் கடிதத்தின் நகல் ஒன்றை எனக்கு அனுப்பியிருக்கிறார். அக்

கடிதம் உணர்ச்சிவசப்பட்ட உங்கள் மனப் போக்கை காட்டுகிறது—Hysterical

உங்களிடம் ஹாஸ்ய உணர்ச்சி இருப்பதாக நான் எண்ணி மதித்திருந்தேன். ஆனால் நான் அவ்வாறு மதித்தது பிசகென இப்போது உணர்ந்து கொண்டேன்.

நான் அய்யாமுத்து என்று கூப்பிட்டதும் அத்தொண்டர் தான் அய்யாமுத்து அல்லவென்று தெரிவித்தான். நான் உங்களுக்கு எனது பாராட்டுதலை மிக நாசூக்காகத் தெரிவித்தேன்.

அப்புகழ்மாலை இதுதான்.

திருப்பூரில் உங்களுக்குள்ள கடமையைப் புறக்கணித்துவிடடு நீங்கள் பெய்ஸ்பூருக்குச் செல்வது அவசியமென்று கருதவில்லை.

நான் அவனோடு சிரித்துக்கொண்டு வேடிக்கையாகப் பேசினேன்.

எனது ஞாபகப்படி நான் கூறியது இதுதான்:

"அய்யாமுத்து எதற்காக இங்கு வரவேண்டும்? உன்னை இங்கு அனுப்பிவிட்டு அவர் திருப்பூரில் அலைந்துகொண்டு திரிகிறார்"

அத் தொண்டனுடைய முட்டாள்தனத்தை என்னால் மன்னிக்க முடியும். ஆனால் உங்களை நான் மன்னிக்க முடியாது.

அவனிடம் நீங்கள்: "பாபு சொன்னதை உன்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. நான் பெய்ஸ்பூருக்குப்போகாததை அவர் பாராட்டி

யிருக்கிருர்" என்று சொல்லியிருக்க வேண்டும்.

இக்கடிதம் இப்போது உங்களுக்குப் புரிகிறதா? உங்கள் மனவேதனையைப் போக்க உதவுகிறதா என்று நீங்கள் சொல்லவேண்டும்.

உலகத்திலுள்ள கவிகளெல்லாம் என்ன சொல்லியிருக்கிருர்கள் என்று உங்களால் தெரிந்த கொள்ள முடிகிறதா?

அதாவது:—

மனிதன் தனது இன்ப துன்பங்களைத் தானே சிருஷ்டித்துக் கொள்கிருன்.

உங்கள்,

**பாபு.**

## மகாத்மாவுக்கு நான் எழுதிய கடிதம்

பேரன்புள்ள பெரியீர்,

மதிப்புக்குரிய தங்கள் கடிதத்தை மிக்க நன்றியுடன் பெறறுக் கொண்டேன்.

அத்தொண்டன் தாங்கள் சொன்னதை அப்படியே சொல்லாமல், அவன் மனதுக்குத் தோன்றியவாறு தங்கள் சொற்களையும், அவற்றைச் சொல்ல நேர்ந்த சந்தர்ப்பத்தையும் காரணத்தையும் திரித்தும் மாற்றியும் என் மனதில் எண்ணம் ஏற்படும் விதத்தில் சொல்லி என் மனதின் வேதனையை உண்டாக்கி விட்டான்.

அகில பாரத சரக்கா சங்கத்தின் கண்ணியத்தைக் காப்பாற்றும் எண்ணத்தோடுதான்

நான் ஸ்ரீ சங்கர்லால் பாங்கருக்கு அக்கடிதம் எழுதினேனே அன்றி மிகச் சாமான்யமான எனது கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்ளும் பொருட்டல்ல.

நான் ஒரு தூசு என்பதை அறிவேன்.

தங்களைப் போன்ற பெரியார்களுடைய நாவிலும் நினைவிலும் நான் குடிகொண்டிருப்பதை நான் பெறற்கரிய பேருகக் கருதுகிறேன்.

நான் இப்போது மகிழ்ச்சி அடைகிறேன்.

என்னுடைய மதியீனத்தைத் தாங்கள் மன்னித்துவிடுமாறு கோருகிறேன்.

இப்படிக்கு
எப்போதும் தங்கள் அன்புள்ள
**அய்யாமுத்து**

# 8

## காந்தி சேவா சங்க மகாநாடு

1938ம் வருஷம் பிப்ரவரி மாதம் இரண்டாவது வாரம் ஹரிபுராவில் சுபாஷ் சந்திரபோஸ் தலைமையில் நடைபெற்ற காங்கிரசுக்குப் போயிருந்தபோது, மகாத்மாவைச் சந்தித்துத் தமிழ்நாடு சர்க்கா சங்கத்தின் நடைமுறைச் செலவுகட்கு தற்போதுள்ள மூலதனம் போதாதென்று தெரிவித்தேன்.

அடுத்த மாதம் ஒரிசாவில் நடைபெறவிருக்கும் காந்தி சேவா சங்கக் கூட்டத்திற்கு வருமாறு தெரிவித்தார்.

அதன்படியே மார்ச்சு மாதம் 21ந் தேதி திருப்பூரினின்று புறப்பட்டு 24ந் தேதி காலை தெலாங் என்னுமிடத்திற்குப் போய்ச் சேர்ந்தேன். என்னோடு கேரள மாநில சரக்கா சங்கக் காரியதரிசி கேசவன் கரத்தாவும் வந்திருந்தார்.

தெலாங்கிற்கு அருகாமையிலிருந்த பீர்போய் என்ற கிராமத்தில் கீற்றுக் கொட்டகைகள் அமைத்த ஓர் இடத்தில் காந்திசேவா சங்கக் கூட்டத்திற்கு ஏற்பாடாகி யிருந்தது.

பெட்டி படுக்கைகளை அங்கு வைத்துவிட்டு நானும் கரத்தாவும் பூரிக்குச் சென்று ஜெகனாதன் ஆலயத்தை

யும் அங்குள்ள பண்டாக்களேயும் பார்த்துவிட்டு மாலே ஏழு மணிக்கு பீர்போய் திரும்பினேம்.

மறுநாள் காலேயில் மகாத்மா பொருட்காட்சியைத் திறந்து வைத்துச் சொற்பொழிவாற்றினர். அன்று அதிகாலேயில் பிரார்த்தனைக் கூட்டமும் வழக்கற்போல் நடைபெற்றது.

அன்று பகல் ஒரு மணிக்குக் காந்தி சேவா சங்கக் கூட்டம் நடைபெற்றது. முப்பதாந் தேதிவரை காந்தி சேவாசங்கக் கூட்டமும், அகில பாரத சர்க்கா சங்கக் கூட்டமும், நிர்மாண ஊழியர்கள் கூட்டமும் மாறி மாறி நடைபெற்றன. இந்தியாவின் பல மாகாணங்களிலிருந்தும் சுமார் 500 பேர்கள் அங்கே குழுமியிருந்தனர். மேனுடுகளிலிருந்தும் சில பார்வையாளர்கள் காணப்பட்டனர்.

பொருட்காட்சியில் பெரும்பாலும் ஒரிசா மாகாணத்தின் கைத்தொழிற் பொருட்களே இடம் பெற்றிருந்தன. வெல்லமும் சர்க்கரையும் காய்ச்சுதல், தேனீ வளர்த்தல், தச்சு வேலே, எருமைக் கொம்பினுல் பல பொருட்கள் தயாரித்தல், மூங்கில் இலேகளாலும் தென்னே ஓலேயினுலும் பல அற்புத வேலேப்பாடுகள், சங்குகளே அறுத்துப் பல உபயோகமுள்ள பொருட்கள் செய்தல், மட்பாண்டங்கள் வனேதல், தோல் பதனிடுதல், தோலினுல் பல பொருட்கள் செய்தல், நெட்டி வேலே போன்று ஒரிசாவுக்கே தனிச் சிறப்புத் தரும் பல வண்ணக் கைத்தொழில்கள் அங்கு செய்து காட்டப்பட்டன.

கதரைத் தவிர வேறு ஆடைகள் அணிவதில்லேயென்று சங்கற்பம் செய்திருந்த எண்ணற்ற குடும்பங்கள் தங்களால் உற்பத்தி செய்யப்பட்ட துணிகளேக்

கொணர்ந்து ஒரு தனியிடத்தில் காட்சிக்காக வைத்திருந்தார்கள்.

பிரதி தினமும் பல்லாயிரக் கணக்கான மக்கள் பிரவேசக் கட்டணம் இரண்டு அணு செலுத்தி இப் பொருட்காட்சியைக் கண்டு சென்றனர்.

## மகாத்மாவின் சொற்பொழிவு
## "எனது அன்பைக் கவர்ந்த பிரதேசம்"

பொருட்காட்சியைத் திறந்து வைத்து மகாத்மா கூறியது:—

இந்தியாவில் எனது அன்பைக் கவர்ந்த பிரதேசம் ஒரிஸாவாகும். நான் தென்னுப்பிரிக்காவினின்று திரும்பி, இந்தியாவில் காலடி வைத்தது முதல் ஒரிசாவின் வறுமை நிலைமையையும், அடிக்கடி நிகழும் பஞ்சத்தையுங் கேள்வியுற்று மனம் வாடினேன்.

தகர்பாபா என் உதவிக்கு வந்தார். பஞ்ச நிவாரண ஏற்பாடுகளைச் செய்தார். ஒரிசாவுக்கு நான் ஏதாமொருவகையில் ஊழியம் செய்யக் கூடுமானல் அதை நான் இந்தியா முழுமைக்குமாற்றிய சேவையாகுமெனக் கருதினேன்.

பின்னர் ஒரிசா எனது தெய்வ யாத்திரை ஸ்தலமாயிற்று. ஜெகந்நாதனுடைய கோவில் இருப்பதால் அந்த யாத்திரை புனிதமடையவில்லை. அந்த ஆலயம் எனக்கும் என்போன்ற ஹிரிஜனங்கட்கும் திறக்கப்படவில்லை. தீண்டாமை யகற்றும் திருப்பணியை நான் ஒரு நூதன முறையில் செய்ய இந்த யாத்திரையை மேற்கொண்டேன்.

சனாதனிகள் என்போர் பலாத்காரத்தின் மூலம் எனது தீண்டாமையொழிப்புப் பணிக்குக் குந்தகம் விளைவிக்க முனைந்துள்ளதாகக் கேள்விப்பட்டேன். அது உண்மையானால் அவர்கள் வேலை எளிதாகும் பொருட்டு நான் ஒரிசாவில் கால் நடையாகவே யாத்திரை செய்வதென்று தீர்மானித்தேன்.

தீர்த்த யாத்ரிகன் கார்களிலும் ரயில்களிலும் பிரயாணம் செய்வதில்லை. அவர்கள் ஆண்டவன் திருநாமத்தை உச்சரித்தபடியே பாதசாரிகளாகவே செல்வார்கள்.

சனாதனிகளின் கோபத்துக்கஞ்சி ஓடிவிடுவதென்பது இல்லை. சனாதனிகளின் கோபத்தை நாம் தரிசித்தே ஆகவேண்டும். ரயிலிலும் காரிலும் பிரயாணம் செய்தால் இதைத் தரிசிக்க முடியாதாகையால் நான் கால் நடையாகவே செல்வதெனும் முடிவுக்கு வந்திருக்கிறேன்.

## ஜெகந்நாதன் கோவில்

ஒரிசாவிலுள்ள ஜெகன்னாதன் கோவில்—உலகத்துக்கே நாதனுடைய கோவில் என்றும், அக்கோவிலுள் நுழைந்தவர் மத்தியில் யாதொரு பேதாபேத உணர்ச்சியும் இராதென்றும் இந்தியாவெங்கும் புகழ் பரவிக் கிடக்கிறது.

பிராமணனும் பறையனும் தோளோடு தோள்சேர ஜெகந்நாதனைத் தரிசிக்க முந்துவர் என்றும், ஒருவர் கொடுக்கும் பிரசாதத்தை மற்றவர் உவப்புடன் வாங்கி உண்ணுவர் என்றும் சொல்லப்படுகிறது.

ஆனால் இன்று இவை யாவும் கட்டுக்கதைகளாகி விட்டன.

இன்று ஹரிஜனங்கள் அம்மாபெரும் க்ஷேத்திரத்துள் நுழைய முடியாது. அந்த ஆண்டவன் சந்நதியில் இந்தப் பேதாபேதம் நீடிக்கும் வரை, அவர் எனது ஆண்டவனுயிருக்க முடியாது.

ஹரிஜனங்களைப் புறக்கணித்து அவரைக் கொள்ளையடிப்பவர்களுக்குத்தான் அவர் ஆண்டவனுயிருக்க முடியும்.

அவர் ஜகத்துக்கு ஆண்டவனுய்த் திகழ முடியாது.

இக்கோவிலின் பழம்பெருமையை மீண்டும் நிலை நாட்ட வேண்டுமென்ற என் ஆசை இன்னும் ஈடேறவில்லை. அவ்வாசை நிறைவேறச் செய்ய உங்களனைவரது ஒத்துழைப்பை வேண்டுகிறேன்.

## அஹிம்சா உணர்ச்சி

காந்தி சேவா சங்கக் கூட்டத்திலே மகாத்மா பேசியதாவது:—

கிஷோரிலால் பாய்—என்னைக் காட்டிலும் உடல் நலம் குன்றியவர்—நீண்ட சிந்தனைக்குரிய சொற்பொழிவாற்றினுர்.

ஒருவர்மீதொருவர் நாம் பூண்டுள்ள தப்பெண்ணங்கள், குற்றச் சாட்டுகள், ஒருவரையொருவர் அறிந்துகொண்டு செயலாற்றவல்ல சகிப்புத் தன்மையின்மை, ஆகியவற்றைப் பார்க்குமிடத்து, நமது அன்ருட வாழ்க்கையில் பயன்படாத நமது கொள்கைகளால் யாது பயன் என்று அவர் கேட்கின்ருர்.

ஒவ்வொரு நாளும் நாம் நமது லட்சியத்தை நெருங்கிக்கொண்டிருக்கிருேமா, சென்றவாண்டில் நாம் கூடியபோது இருந்ததைக் காட்டிலும், நமது

அஹிம்சா உணர்ச்சி இவ்வாண்டில் முன்னேற்றம் கண்டுள்ளதா? நமது கோபதாபங்கட்கு நாம் ஆளான சந்தர்ப்பங்கள் குறைபட்டனவா என்றவர் கேட்கின்ருர்.

இக்கேள்விகளை நாம் அடிக்கடி நம்முள் கேட்டுக் கொண்டே இருக்க வேண்டும்.

நாம் அன்ருடம் உட்கொள்ளும் உணவைக் காட்டிலும் அஹிம்சா உணர்ச்சி மேன்மையானதாகும். சீராக உண்ணும் உணவு சரீரத்தைப் போஷிக்கிறது. சீராக அனுசரிக்கும் அஹிம்சை ஆன்மாவை வலுவுறச் செய்கிறது.

உடலுக்கு உணவு குறித்த வேளைகளில், குறித்த அளவே உட்கொள்ளுகிருேம். ஆனல் ஆன்ம உணவான அஹிம்சையை நாம் ஓயாது தொடர்ந்து உட்கொண்டிருக்க வேண்டும். இதில் அதிகம், அதீதம் என்பதே கிடையாது.

லட்சியத்தை முன் நிறுத்தி, அதை நெருங்கிக் கொண்டே இருக்கின்றேன என்பதைக் கவனத்தில் வைத்துப் பரிசீலனை செய்துகொண்டே இருக்க வேண்டும்.

## அஹிம்சா நெறியின் முதற்படி

நமது அன்ருட வாழ்க்கையில் நம்முள் பரஸ்பரம் வாய்மையும், தன்னடக்கமும், சகிப்புத் தன்மையும், அன்பும், கருணையும் பயில்வதுதான் அஹிம்சையின் முதற்படியாகும்.

வாய்மை சிறந்த கொள்கையென Honesty is best policy என்று ஆங்கிலத்தில் சொல்வார்கள். அஹிம்

சையை ஒரு "பாலிசி"யாகப் பாவிக்கக்கூடாது. கொள்கைகள் மாறலாம், மாறுவது சகஜம். ஆனால் அஹிம்சை மாற்ற முடியாத அறநெறியாகும்.

நம்மைச் சுற்றிலும் ஹிம்சை சூழ்ந்தபோதிலும் நாம் அஹிம்சா நெறியினின்றும் பிறழாதிருக்க வேண்டும். நம்மை ஹிம்சிக்காதவனிடம் நாம் அஹிம்சா நெறியைக் கடைப்பிடிப்பதில் சிலாக்யமில்லை. அது அஹிம்சைதானா என்று சொல்வது கடினம்.

ஹிம்சைக்கு எதிராக அஹிம்சையைப் பயிலும் போதுதான் அவ்விரண்டுக்குமுள்ள வேற்றுமை புலனாகும். நாம் கண்விழிப்புடன், அதிஜாக்கிரதையாக இருக்காவிடில் இதைச் சாதிக்க முடியாது.

## ஹரிபுரா அளித்த நம்பிக்கை

உத்திரப் பிரதேசத்தில் நடைபெற்ற கலவரங்கள் என்னை மிகவும் பாதித்தன. மௌலானாவோடும், போஸ் சகோதரர்களோடும் நான் அதைப்பற்றி விவாதித்தேன். நமது லட்சியத்தை நாம் நெருங்காமல் அதனின்று வெகுதூரம் விலகிப் போய்க்கொண்டிருக்கிறோம் என்பதை நான் உணர்ந்தேன்.

நம்மிடம் பல குறைபாடுகள் இருப்பினும், நாம் வலுவடைந்து வருங் காரணத்தால், எனது ஜீவிய காலத்தில் நாம் சுயராஜ்யம் பெறமுடியும் என்ற நம்பிக்கையை ஹரிபுரா எனக் களித்தது. ஓராண்டு காலத்தில் நாம் அச்சக்தியைப் பெறுவோம் என எண்ணினேன்.

ஆனால் அலகபாத்திலும், இதர இடங்களிலும் நடைபெற்ற கலவரங்கள் பெரும் அதிர்ச்சியைத் தந்தன. நாம் மான வெட்கமற்று இராணுவத்தை

யும் போலீசையும் உதவுமாறு கோரும் நிலைமை ஏற்பட்டது.

வைசிராய் நாளைய தினம் காங்கிரஸ் தலைவரைக் கூப்பிட்டுக் காங்கிரசின் கோரிக்கை என்னவென்று கேட்கும் பட்சத்தில் "நிருவாகத்தை ஏற்று நடத்தும் சக்தி காங்கிரசுக்கு இருக்கிறது. பிரிட்டிஷார் வெளியேறலாம்" என்று சொல்லும்படியான சக்தி காங்கிரசின் தலைவருக்கு இருக்குமா?

போலீசும் இராணுவமும் இல்லாமல் நம்மால் நிர்வாகத்தை நடத்த முடியுமென்றும், மன்னர்கள், ஜமீன்தார்கள், முஸல்மான்கள் ஆகியோருடன் நாம் சமரசம் காண்போமென்றும், நம்மால் வைசிராயிடம் சொல்ல முடியுமென்று நீங்கள் எண்ணுகிறீர்களா? இவர்களோடு நாம் எளிதாகச் சமரசத்துக்கு வந்துவிட முடியுமென்று நாம் உண்மையாகச் சொல்லமுடியுமென்று எனக்குத் தோன்றவில்லை.

நாம் அஹிம்சா நெறியில் மெய்யாகத் தோய்ந்திருப்போமேயானால், நாம் அவ்வாறு சொல்வதுடன் காரியத்திலும் நடத்திக் காட்டமுடியும்.

## அஹிம்சை பலவான்களுடையது

எனவே நமது அஹிம்சை பலவான்களுடையதா, அல்லது பலஹீனர்களுடையதாவென நான் உங்களையும் என்னையும் கேட்கிறேன். அது பலவான்களுடையதாகத்தான் இருக்கவேண்டும்.

பலஹீனர்களாலும் ஓரளவுக்கு அதைக் கையாள முடியுமென்பது உண்மைதான். நம்மிடம் அப்படித்தான் அது நிகழ்கிறது.

அஹிம்சை நமது பலஹீனத்தை மறைக்கும் போர்வையாகுமானால், அது நமது ஆண்மையை அழித்துவிடும். அவ்வாறு ஆண்மை அழிவதைக் காட்டிலும், பலாத்காரத்தைப் பிரயோகிப்போர்களுடைய வீரம் மேலானதாக இருக்கும்.

சண்டைசெய்து உயிரிழப்பது கோழைத்தனத்தைக் காட்டிலும் உயர்வானது.

## மானிட ஜன்மம் ஏன் எடுத்தோம்?

பூர்வத்தில் நாம் எல்லோரும் விலங்குகளாகத்தானிருந்தோம். அந்நிலையிலிருந்து நாம் மெதுவாக வியாபித்து மனிதர்களானோம் என்று நம்புவதற்குச் சித்தமாயிருக்கிறேன். இவ்வாறாக நாம் மிருக பலத்துடன் பிறந்தோம். எனினும் நம்முள் உறையும் ஆண்டவனை உணரும்பொருட்டே நாம் மானிட ஜன்மம் எடுத்தோம். இது மனிதனுடைய பிரத்தியேக உரிமை. இதுதான் மனிதனை மிருகத்தினின்றும் வேறுபடுத்திக் காட்டுவதாகும்.

அனைத்துயிரிலும் ஆண்டவனைக் காண்பதே அவனை உணரும் வழியாகும். அதாவது அனைத்துயிரும் நாமும் ஒன்றென உணர்வதாகும். மிருகபலத்தை நாம் மனமுவந்து தவிர்த்து, நமது மனச்சாட்சியில் பொதிந்துள்ள அஹிம்சாநெறியை நாம் கைகொள்ளாவிட்டால், இத்தெய்வீக உணர்வு சாத்யமற்றதாகிவிடும்.

பலவானுடைய அஹிம்சை நம்மில் இருக்கிறதா? அது சாத்யமற்றதெனத் தோன்றினால், நாம் அதை உதறித் தள்ளிவிட்டுப் பலாத்காரவழியை மேற்கொள்ளும் பாதை நம்மெதிரே திறந்து கிடக்கிறது.

எது வேண்டுமெனத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

## கலவரங்களை அடக்கும் பொறுப்பு

...கலவரங்களை அடக்குவது காங்கிரஸ் கமிட்டிகளின் பொறுப்பாயிருக்க வேண்டும். இத்தகைய நெருக்கடியான நேரத்தில் சேவை புரிவதற்கு நம் மிடம் பல்லாயிரக்கணக்கான வாலண்டியர்கள் வைத்திருக்க வேண்டும்.

மனோவாக்கு காயங்களிலும் முற்றிலும் அஹிம்சா நெறியைக் கடைப்பிடிப்பதாக உறுதிமொழிப் பத்திர மொன்றை வாலண்டியர்களுக்கு நாம் 192.ல் வரைந்தோம். அச்சமயம் பிரசிடெண்டாயிருந்த ஹஜ்மல் கான் அவ்வுறுதி மொழியை கிலாபத் வாலண்டியர் களும் ஒப்புக்கொள்ளச் செய்தார்.

எவ்விதப் பிரயாசையுமின்றிக் கிலாபத் வாலண் டியர்கள் அவ்வுறுதி மொழிப் பத்திரத்தில் கைச்சாத் திடவில்லை. கிலாபத் கான்பரன்சிலும் அவ்வுறுதி மொழி எளிதில் ஏற்றுக் கொள்ளப்படவில்லை. வாக்கினும், செயலிலும் ஒரு தொண்டன் அகிம்சையைக் கடைப்பிடிப்பதாக வாக்களிப்பது சரிதான். ஆனால் மனதிலும் அவன் அகிம்சையே எண்ணவேண்டுமென்று சொல்வது ரொம்ப ரொம்ப அதிகமென்று சில மௌலானுக்கள் வாதாடினார்கள். வாலண்டியர்களுடைய மனதையும் நான் அடக்கியாள விரும்புவதாக அவர்கள் என்மீது பழி சுமத்தினார்கள்.

"இல்லை. எந்தத் தனி மனிதனும் மக்களின் மனத்தின் மீது ஆதிக்கம் கொள்வதென்ற பேச்சுக்கே இடமில்லை. அஹிம்ச நெறி ஒன்றே மக்களின் மனதை அடக்கியாள வேண்டும்" என்று நான் சொன்னேன்.

இறுதியாக அவர்கள் அந்த அஹிம்சா உறுதி மொழியை ஒப்புக்கொண்டார்கள்,

நாம் இவ்வாறு ஒப்புக்கொண்டு ஆண்டுகள் பதினேழு ஆகிய பின்பும் அஹிம்சையின் சக்தியை உணராதிருக்கிறோம்.

## மரணத்தை வலிந்து தழுவும் அஹிம்சைப் படை

நாம் அத்தகைய அகிம்சைப் படையை அமைக்க எத்தகைய முயற்சியும் ஊக்கமும் கொள்ளவில்லை என்பதுதான் உண்மை. அவ்வாறு நம்மால் செய்ய முடியாதென்றால், உறுதி மொழிப்படி நம்மால் செயல்பட முடியாதென்றால், நாம் நமது நிலைமை குறித்தும் புனராலோசனை செய்தாக வேண்டும்.

அந்த உறுதிமொழி இன்னும் காகிதத்தில் அப்படியே இருக்கிறது என்பதுதான் ஒரு சோக நாடகம்.

இத்தகைய ஒருபெரும் படையை நாம் ஆயத்தமாக வைத்திருந்தோமேயானால் கலவரங்கள் நடைபெற்றிருக்கமாட்டா. கலவரங்கள் தோன்றிய மாத்திரத்தில் அவற்றை ஒரு முடிவுக்குக் கொண்டுவந்திருப்போம், அல்லது நமது உயிர்களையே பலியாகக் கொடுத்திருப்போம்.

ஒரே ஒருவர்தான் இத்தகைய மரணத்தை தழுவியதாகக் கேள்வியுற்றோம். அவருடைய அழிவை நான் வியந்து போற்றுகிறேன். ஆனால் இன்னும் பல குப்தாக்கள் அவ்வித மரணத்தை வலிந்து தழுவியிருப்பார்களானால் என் மனம் புளகாங்கிதம் அடைந்திருக்கும்.

இது ஒரு வீண் கனவென்று நீங்கள் எண்ணுகிறீர்கள்? அஹிம்சைப் படையிருந்தாலும் நாம்

கலவரங்களை நிறுத்தவோ ஒடுக்கவோ முடியாதென்று எண்ணுகிறீர்கள்?

நீங்கள் அவ்வாறு எண்ணுவீர்களானால், ஆழ்ந்து அமைதியுடன் யோசித்த பின்னரும் நீங்கள் அம் முடிவுக்கு வருவீர்களானால், அஹிம்சா நெறியின் மூலம் சுயராஜ்யம் சித்திக்காதென்ற முடிவுக்கும் நீங்கள் வந்தாகவேண்டும்.

## மகாத்மா காந்திக்கு இரத்தக் கொதிப்பும் கோபமும், சோகமும் வந்ததேன்?

30-ந் தேதி காலை பிரார்த்தனைக் கூட்டத்திற்கு காந்தி வரவில்லை.

காந்தியாருக்கு இரத்தக்கொதிப்பென்று அவரது அந்தரங்க காரியதரிசிகளில் ஒருவரான மகாதேவ் தேசாய் கூறக்கேட்டு கூடியிருந்தவர்களெல்லாம் மனக் கலக்கம் அடைந்தார்கள்.

அடுத்த நாள் சம்மேளனத்தில் மகாத்மா காந்தியே தமக்கேற்பட்ட கோபாவேசத்தையும், மனக் கலக்கத்தையும், சோகத்தையும், அவை காரணமாகத் தமக்குண்டான அபாயகரமான இரத்தக் கொதிப்புப் பற்றியும் பிரஸ்தாபிக்கலானார்.

அவர் சொன்னார்:—

"நடந்த ஓர் சம்பவத்தைக் குறித்து மகாதேவ் தேசாய் உங்களுக்குத் தெரிவித்ததைக் குறித்து நான் சந்தோஷப்படுகிறேன். அவர் கொஞ்சம் தெரிவித்தபடியால் என் மனதிலுள்ள முழுவதையும் தெரிவிக்க வேண்டுமென்று தோன்றுகிறது.

நீங்கள் ஆற்றிவரும் பன்முகப்பட்ட நிர்மாண வேலைகளில், ஒவ்வொன்றும் அஹிம்சை சத்தியம்

ஆகிய இரண்டையும், திருஷ்டாந்தமாகக் காட்டக் கூடிய சின்னங்களாகும்.

தீண்டாமை அழியப்படாத பட்சத்தில் ஹிந்து மதம் அழிந்துவிடுவதே மேல் என்பது நானும் நீங் களும் நாடோறும் பிரார்த்தனை செய்வதாகும். எனது ஹரிஜன யாத்திரையின் போதெல்லாம் நான் இக் கருத்தைத் தெரிவித்திருக்கிறேன்.

ஹரிஜனங்களை ஆலயங்களில் அநுமதிக்கவேண்டும் என்பதை ஒப்புக்கொள்பவர்கள் எல்லோரும், ஹரி ஜனங்களை அநுமதிக்காத ஆலயங்களுக்குள் செல்லக் கூடாதென்றும் நான் தவருமல் சொல்லி வந்திருக் கிறேன்.

அப்படியிருக்க என் மனைவியும், என் மகளைப் போல் நான் பாவிக்கும் பெண்களும் அப்படிப்பட்ட கோவிலுக்குள் சென்ருர்கள் என்பதைக் கேட்டு நான் எப்படிச் சகிக்க முடியும்?

என் மனைவியும், என் புதல்விகளுக்குச் சமான மான இரு ஆசிரமவாசிகளும் பூரி ஆலயத்திற்குள் சென்ருர்கள் என்னும் செய்தியைக் கேட்டதும் வெட் கப்பட்டேன்.

இதனுல் எனக்கேற்பட்ட மனக் கொதிப்பானது என் உயிருக்கே ஆபத்து ஏற்படக்கூடியதாக இருந்தது. இரத்தக் கொதிப்பை அளக்கும் கருவியை வைத்துப் பார்த்ததில், இரத்தம் அதிகமாகக் கொதிக்கும் அள வைத்தான் அதனுல் காட்ட முடிந்தது. ஆனுல் எனது உளக்கொதிப்பை அக்கருவியால் அளந்து காட்ட முடியவில்லை. நான் எவ்வளவு அபாயகரமான நிலையில் இருந்தேன் என்பதை என்னுளம் காட்டிற்று.

சமதிருஷ்டி ஞானம் வேண்டுமென்று கீதை உப தேசிக்கிறது. ஆனுல் இவ்விதமான அதிர்ச்சி தரும்

சம்பவங்கள் ஏற்படும்போது சமதிருஷ்டி வேண்டு மென்பது பொருள் அல்ல.

கோவிலுக்குச் சென்ற அம்மூவர்மீது குற்றமில்லை. அவர்கள் அறியாமையினால் சென்றனர். குற்றம் செய்தது யான். என்னைவிட அதிகமான குற்றம் செய்தவர் மகாதேவ தேசாய். ஏனெனில் அவர் கோயிலுக்குச் சென்றவர்களுக்கு தர்மத்தை எடுத்துப் போதித்திருக்க வேண்டும். தருமத்தினின்று வழுவினால் என் மனம் என்னபாடுபடும் என்பதை அவர் எடுத்து சொல்லிருக்க வேண்டும்'' என்பதாகக் கூறினார்.

## நான் சென்ற காரியம் வெற்றி

அடுத்தநாள் நடைபெற்ற அகில பாரத சர்க்கா சங்க கவுன்சில் கூட்டத்திற்கு மகாத்மா தலைமை வகித்தார்.

தமிழ்நாடு சர்க்கா சங்கத்தின் நடைமுறைச் செலவுகளுக்கு ஏதாவது ஷெட்யூல் பாங்கில் ரூபாய் ஐம்பதினாயிரம் கடன் பெறலாம் என்று அநுமதி எனக்கு வழங்கப்பட்டது.

மற்றும் காந்தி சேவாசங்க நிதியினின்று தமிழ் நாடு சர்க்கா சங்கத்துக்கு ஒருலட்ச ரூபாய் வட்டியில்லாக் கடன் கொடுப்பதாகவும் சம்மதித்தனர்.

நான் சென்ற காரியம் இவ்வாறு திருப்திகரமாக முடிந்தபின், நானும் கேசவன் கர்த்தாவும் அன்றிரவே ரயிலேறி பிப்ரவரி மாதம் முதல்தேதி காலை ரயிலில் திருப்பூர் வந்து சேர்ந்தோம்.

இப்பிரயாணத்தில் போகவும் வரவும் நான் சமர்ப்பித்த பிரயாணச் செலவு பில்லின் தொகை எவ்வளவென்று சொல்லட்டுமா? 59—12—3

# 9

## மகாத்மா காந்தி அனுப்பிய அஹிம்சா போதகர்

அன்னை கஸ்தூரிபாயும், மகாதேவ் தேசாயின் தர்ம பத்தினியும், சேவாகிராம ஆசிரமப் பெண்ணொருத்தியும் பூர்ஜகன்னாதனைக் கண்டு தரிசித்துத் தொழுதுவந்ததை அறிந்த மகாத்மா காந்திக்கு தெலாங்கில் ஓர் நாள் வெட்கமும், கோபமும், சோகமும் ஒன்றாகக் குடி கொண்டு, அதனால் இரத்தக் கொதிப்பும் மனக் கொதிப்பும் அதிகரித்து அவருடைய உயிரையே குடித்து விடும் அபாயம் ஏற்பட்டதென மேலே பார்த்தோம்.

பேரதிர்ச்சி ஏற்படும்போது சகிப்புத் தன்மை என்பது பொருளற்றதாகிவிடுகிறதென்று அண்ணலே கூறியபின் என் போன்ற சாமானியர்களின் நிலை எம்மாத்திரம்?

எனது நிர்வாகச் சூழ்நிலை நாளுக்குநாள் மோசமாகி எனக்குப் பேரதிர்ச்சியைக் கொடுத்தவண்ணமாயிருந்தது. அந்நிலையில் எனது கோபதாபத்தை அடக்கிக்கொள்ள என்னால் முடியவில்லை.

சில சம்பவங்களை இங்கு கூறுகிறேன்'

1. சென்னைக் கதர்ப் பொருட்காட்சியின் கணக்கு களை நான் கவனித்தபோது நூற்றிருபது ரூபாய் சில்லரைச் செலவுக் கணக்கில் பற்றெழுதப்பட்டிருந் ததைக் கவனித்தேன். ஆனால் அத் தொகைக்கு யாதொரு விபரமும் எழுதப்படவில்லை. அப்பொருட் காட்சி நிர்வாகியைக் கேட்டபோது, "சில்லரைச் செலவுகளுக்கு விபரம் எப்படி எழுத முடியும்" என்று என்னையே திருப்பிக் கேட்டார்.

அவரைச் சொல்லிக் குற்றமில்லை, சர்க்கா சங்கத் தின் நிர்வாகம் மெத்த நாட்களாய் அந்த ரீதியில் நடந்து வந்திருக்கிறது.

செலவுகளின் விவரமும், ஆதாரமும் காட்ட முடிய வில்லையானால் அத்தொகைக்கு அவர்தான் பொறுப் பாளியாக வேண்டுமென நான் தெரிவித்தேன்.

டிராம் சார்ஜுக்கும் பஸ் சார்ஜுக்கும் ரிக்ஷா வாடகைக்கும் எப்படி ஆதாரம் காட்ட முடியுமென அவர் வாதித்தார்.

இன்ன செலவு என்று குறிப்பிட்டிருந்தால் போதுமே, அதைக்கூட ஏன் செய்யவில்லையென்று கேட்டேன்.

ஓகோ! அப்படியானால், என் மீது அவ்வளவு நம்பிக் கைக் குறைவாக இருந்தால் இந்த உத்தியோகம் எனக் குத் தேவையில்லையென அவர் தோள்மீது துண்டைப் போட்டுக்கொண்டு போய்விட்டார்.

வேறெங்கும் போகவில்லை.

நேரே ஆமதாபாத்திலிருந்த சர்க்கா சங்கத்தின் தலைமைக் காரியாலயத்துக்கே சென்று, அங்குக் கணக் குப் பரிசோதகராக நியமனம் பெற்று, திருப்பூரி லிருந்த என்து காரியாலயத்துக்கே எனது கணக்கு

களைப் பரிசோதிக்க வந்துவிட்டார்! எப்படியிருக்கும் எனக்கு?

2. ஒரு நாள் நான் திருப்பூர் வஸ்திராலயத்தில் நின்று கொண்டிருக்கையில், என் முதுகில் சற்று பலமாக ஒரு அறை விழுந்தது.

திரும்பிப் பார்த்தேன்.

அறைந்தவன் "என்ன அய்யர்முத்து சௌக்யமா" என்று விசாரித்தான்.

அவன் காங்கிரசில் புதிதாக நுழைந்தவன். ஜமீன்தார் வீட்டுப் பிள்ளை. என்னைக்காட்டிலும் பத்துப் பனிரண்டு ஆண்டுகள் வயதில் குறைந்தவன்.

எனது அதிருப்தியை மிக நாசூக்காக அவனிடம் காட்டிக்கொண்டேன்.

அவன் என்மீது கச்சை வரிந்து கட்டிக்கொண்டு மகாத்மா காந்திக்கும், சங்கர்லால் பாங்கருக்கும் காவடிகள் எடுத்துச் சென்று என்மீது அவதூறான பிரசாரம் செய்யும் காரியத்தில் மும்முரமாக ஈடுபட்டான் என்பது எனக்கு ஆதார பூர்வமாகத் தெரிய வந்தது. சர்க்கா சங்கத்திலிருந்து வேலையை விட்டு நீங்கிய ஊழியர் இரண்டொருவரை அவன் தேடிப் பிடித்து எனது ஒழுக்கத்தைப் பற்றித் தூஷணையாக மகாத்மாவுக்கும் பாங்கருக்கும் கடிதங்கள் எழுதச் செய்தான்! நேரிலும் கண்டு சொல்லச் செய்தான்!

3. பர்மா அரசாங்கத்திலே ஓய்வு பெற்ற ஒரு என்ஜினியர். அவர் மேற் சட்டையைக் களைந்தெறிந்து ஒரு துப்பட்டியைப் போர்த்துக்கொண்டு வார்தாவில் மகாத்மாவைப் பார்த்து அவரிடம் ஒரு நீளமான தீக் குச்சியைக் கொடுத்தார். அது கந்தகத்தால் செய்யப்பட்டது, தரையில் உரைத்தால் எரியும்.

வாயால் ஊதினால் அணைந்துவிடும், பின்னும் அதையே உரைத்தால் எரியும்!

தாம் தமிழ்நாட்டில் கதர் தொண்டு செய்ய விரும்புவதாகவும். கைராட்டினத்தை அபிவிருத்தி செய்து தருவதாகவும் மகாத்மாவிடம் தெரிவிக்கவே, அவர் என்னையும் ராஜாஜியையும் நேரிற் காணுமாறு சொல்லி அனுப்பினார்.

ஒருநாள் இவர் இச்சேதியை சுமந்துகொண்டு, தனது மனைவி மக்களுடன் திருப்பூரிலிருந்த எனது ஜாகைக்கு வந்து ஓரிரவு தங்கினார்.

மறுநாள் காலையில் அவர் திருச்செங்கோடு சென்று ராஜாஜியைக் காண்பதாகச் சொல்லிவிட்டுப் போனார்.

அவரும், அவருடன் கூட வந்தவர்களும் சும்மா போகவில்லை. அதிகாலையில் எழுந்த அவர்கள் எனது வீட்டின் சுவர் அருகே மலஜலங் கழித்துவிட்டுச் சென்றிருந்தார்கள்!

தென்னாற்காடு ஜில்லா கல்லக்குறிச்சியில் ஒரு அருமையான இடத்தில் சர்க்கா சங்கத்துக்குச் சொந்தமான ஒரு "காதி ஆசிரமம்" இருந்தது. இளையாழ்வார் என்ற ஒரு தொண்டர் அதைப் பத்தாயிரம் ரூபாய் செலவில் நிர்மாணித்து அங்கு தங்கியிருந்து கதர் சேவை செய்திருந்தார். ஆற்றங்கரையருகே மரஞ் செடிகளும் பெரிய கிணறும், விஸ்தாரமான இடமும், அழகிய கட்டிடமும் கொண்ட அந்த ஆசிரமம் தபசிகளும் கண்டு காமுறத் தக்க விதத்தில் அமைந்திருந்தது.

இந்த இடத்தை அந்தப் பர்மா என்ஜினியர் கண்டு மோகித்து, இராஜாஜியை எப்படியோ மயக்கி 1500 ரூபாயுக்குக் கிரயம் செய்து கொண்டார்.

ஆனால் ஒரு நிபந்தனை. சர்க்கா சங்கம் தேவைப் படும்போது அவ்விடத்தை 1500 ரூபாய் பெற்றுக் கொண்டு திரும்பப் கொடுத்துவிட வேண்டுமென்பது தான் அந்த நிபந்தனை.

ஆனால் அச்சமயம் காரியதரிசியாயிருந்த என். நாராயணஅய்யர் யாதொரு நிபந்தனையும் இல்லாமல் சுத்தமான கிரயம் செய்து கொடுத்துவிட்டார்.

அதில் சேவை புரிந்திருந்த இளையாழ்வார் பாவம் இரத்தக் கண்ணீர் சிந்திக்கொண்டு வெளியேறினர்.

அதில் குடியேறிய பர்மா என்ஜினியர் அவசர அவசரமாக மேற்கோப்பைப் பிரித்து, மரக்கைகளையும் ஓடுகளையும் விற்றுவிட்டு மூங்கில் கைகள் போட்டுத் தென்னங் கீற்றுல் வேய்ந்துவிட்டார்.

அதற்கொரு எளிய தோற்றம் ஏற்படுத்த அப் படிச் செய்தாராம்.

கல்லக்குறிச்சியிலும் சின்ன சேலத்திலும் அதன் வட்டாரத்திலுமிருந்த பொது மக்கள் ஆத்திர மடைந்து பொது ஸ்தாபனத்துக்குச் சொந்தமான விலைமதிப்புள்ள கட்டிடத்தை அவ்வளவு எளிய விலைக்கு எப்படி ஒரு தனி மனிதனுக்குக் கொடுத்தீர்கள் என்று மகாத்மா காந்திக்கும், இராஜாஜிக்கும் எனக் கும் நீண்ட மகஜர்கள் அனுப்பினர்கள்.

அதன் விளைவாக கட்டிடத்தைத் திருப்பித் தருமாறு கோரியபோது பர்மா என்ஜினியர் 25000 ரூபாய் தருவதானல் திருப்பிக் கொடுப்பதாகக் கடிதம் எழுதினர்.

அப்படி யேதேனும் மூலதனம் செலவழித்திருப் பாரா என்று நான் நேரிற் சென்று பார்த்தபோது

மரக்கைகளும். கள்ளிக்கோட்டை ஓடுகளும் மாற்றப் பட்டிருந்ததுதான் என் கண்களிற் பட்டன.

நான் திரும்பி வந்த பிறகு அம்மகானுபாவர் நான் அவரை நீண்ட கத்தியால் குத்த எத்தனித்ததாக காங்கிரஸ் தலைவர்கள் எல்லோருக்கும் கடிதங்கள் எழுதினர்.

பாபு இராஜேந்திரபிரசாத், சர்தார் வல்லபாய் படேல் தமிழ்நாடு விஜயம் செய்த சமயங்களில் எனக்கெதிராகப் பல பழிபாவங்கள் சுமத்திக் கடிதங்கள் கொடுத்தார்.

பொதுவாகக் கல்லக்குறிச்சி காந்தி ஆசிரமம் எனக்கெதிர் பிரசாரம் செய்யும் கோட்டையாகச் செயல்படலாயிற்று.

3. காந்தி நகரில் திறந்த வெளியில் துணிகள் சாயம்போடுவது வழக்கம். ஒருநாள் சில துணிகள் திருட்டுப்போயின.

மறுநாள் ஒரு குடுகுடுப்பைக்காரன் அவ்வழியே செல்லும்போது காணமற்போன துணிகளில் ஒன்று அவன் தோள்மீது காணப்பட்டது.

உடனே போலீசுக்குத் தகவல் கொடுக்கப்பட்டது. பக்கத்து கிராமத்து மணியக்காரன் அத்துணியைக் கொடுத்ததாகத் தெரியவந்தது. அவன் வீடு சோதனையிடப்பட்டு களவு போன துணிகள் யாவும் கைப்பற்றப் பட்டன. அவனுக்குச் சிறை தண்டனையும் கிடைத்தது.

அவன் சிறையினின்று வெளிவந்த பிறகு என்மீது அபாண்டமான செய்திகள் ஜோடித்துத் துண்டுப் பிரசுரங்கள் அச்சடித்து வழங்கிவந்தான்.

4. புஞ்சைப் புளியம்பட்டி என்ற கிளையில் நிர்வாகியாகவிருந்த ஒருவன் பொய்க் கையெழுத்

துகள் போட்டு பணம் மோசடி செய்திருந்தது கண்டு பிடிக்கப்பட்டான். அவன் ஒரு மன்னிப்புக் கடிதம் எழுதிக் கொடுத்துத் தான் மோசடி செய்த பணத்தை யும் திருப்பிக்கொடுத்ததால், அவன்மீது வழக்குத் தொடராமல் வேலையிலிருந்து நீக்கிவிட்டேன்.

அதன்பிறகு அவன் பிறருடைய தூண்டுதலின் பேரிலோ, சுயமாகவோ, நான அவனை அடித்து இம் சித்து ஒப்புதல் கடிதம் பெற்றுக்கொண்டதாக சங்கர் லால் பாங்கருக்கும் மகாத்மா காந்திக்கும் கடிதங்கள் எழுதினுன்.

5. ஒரு ஊழியன் தைலாம்பாளையம் என்ற நூல் நூற்புக் கிளையில் ஒரு பெண்ணிடம் தகாத வார்த் தைகள் பேசி மாட்டிக் கொண்டு தப்பித்தோம் பிழைத் தோமென்று என்னிடமும் சொல்லிக் கொள்ளாமல் எங்கோ சென்று இராஜினமாக் கடிதம் அனுப்பிய தால், சர்க்கா சங்க விதிகளின்படி அவனுடைய க்ஷேம நிதியோடு சர்க்கா சங்கத்தின் பாகம் கொடுக்கப்பட வில்லை. அவன் பெரிய நாயக்கன்பாளையத்தில் முகாம் செயது கொண்டு, சங்கர்லால் பாங்கருக்கும் மகாத்மா காந்திக்கும் என்னைப்பற்றிப் பல அவதூருன கடி தங்கள் எழுதினுன்.

6. இருவம்பாளையத்தில் கதர் நெசவு செய்திருந்த ஒரு வாலிபன் ஒருநாள் என்னிடம் வந்து, இருவம் பாளையம் நிர்வாகி தனது கணக்கை முடிக்க மறுப்ப தாகத் தெரிவித்தான். நான் விசாரித்து ஆவன செய் வதாகச் சொன்னேன். அதன் உடனே அந்த நிமிஷமே கணக்கை முடித்தாக வேண்டுமெனக் கத்தினுன். அவன் என்னிடம் விரோத மனுேபாவம் கொண்டிருந்த சில கதர் வியாபாரிகளால் தூண்டப்பட்டு அவ்விதம்

அடம் பிடித்தான். பின்னர் அன்றுமாலை நான் அவனை அடித்துவிட்டதாக மகாத்மா காந்திக்கும் பாங்க ருக்கும் தந்திகள் பறந்தன.

7. கருப்பண்ண செட்டியார் என்பவர் ஒரு மாஜி கதர் வியாபாரி. மனிதன் நல்லவர்தான், ஆனால் அவரது ஊழ்வினைப் பயனால் வியாபாரத்தில் நஷ்ட மேற்பட்டு, உடல் நலமும் கெட்டு, கதர்வியாபாரி களுக்காக "கதர்த் தொழில்" என்றொரு பத்திரிகை நடத்திவந்தார். அப் பத்திரிகையில் வியாபாரிகளின் தூண்டுதலின்பேரில் என்னைப் பற்றியும் எனது சகாக்கள் சிலரைப் பற்றியும் அவதூறாக எழுதினார். அவர்மீது நான் மானநஷ்ட வழக்குத் தொடரவே கோர்ட்டில் மன்னிப்பு வேண்டினார்.

8. கதர் வியாபாரிகளின் குமாஸ்தா ஒருவர் சர்க்கா சங்க வஸ்திராலயத்துள் நுழைந்து தாறுமா றாகப் பேசவே அவருக்குக் கல்தா கொடுக்கப்பட்டது. உடனே வியாபாரிகள் எல்லாம் கூடி மகாத்மா காந் திக்கும் பாங்கருக்கும் தந்திகள் அனுப்பினார்கள்.

இவைபோல் இன்னும் எத்தனையோ சம்பவங்கள். இவையாவும் வாழ்க்கையில் சகஜமாக நடக்கக் கூடிய வைகள். இவற்றைச் சமாளிப்பதும் நான் பெரிய தொல்லையாய்க் கருதவில்லை.

ஆனால் மூச்சுவிட்டவுடன் மகாத்மா காந்திக்கும் மற்றவர்களுக்கும் தந்திகள் பறப்பதும், மகஜர்கள் செல்வதும், அவற்றிற்கு மகாத்மா என்னிடம் சமா தானங் கோருவதும், அப் பொய்யும் புளுகும் நிறைந்த பழி பாவத்துக்கஞ்சாத குற்றச்சாட்டுகளுக்கெல்லாம் நான் மறுப்புக்கள் எழுதிக் கொண்டிருப்பதும், எனது அரியகாலத்தை அநியாயமாய் அபகரித்ததோடு, என்

மனதிலே ஒரு சலிப்பும், "நமக்கேனடா இந்தத் தொல்லைகள்" என்ற அயர்வும் சோர்வும் அடிக்கடி பாதித்தன.

## கிஷோரிலால் மஷ்ரூவாலா

என்னை ஒரு கம்ஸனாகவும், ஹிட்லராகவும் இரண்யனாகவும் மகாத்மாவின் மனதில் தோன்றும்படி பல புகார்கள் அவருக்கு அநுதினமும் போய்க் கொண்டிருந்தன.

அவர் வெகு தொலைவில் இருந்ததாலும், தமது கண்களைவிடக் காதுகளையே பெரிதும் நம்பியாக வேண்டிய நிலையில் இருந்ததாலும் இங்குள்ள உண்மையான நிலைமையைப் புரிந்து கொள்வது முடியாத காரியமாய் இருந்ததெனலாம்.

இந்நிலையில் ஒருநாள் மகாத்மாவினிடமிருந்து எனக்கொரு கடிதம் வந்தது. அக்கடிதத்தை அவர் தமது கையில் எழுதியிருந்ததுடன், தபால் உறையின் மீதும் அவரே எனது விலாசத்தை எழுத்துப் பிழையின்றி மிகத் தெளிவாக எழுதியிருந்தார்.

அக்கடிதமாவது:—

ஷேகான், (சேவா கிராமம்)
வர்தா, 22, ஏப்ரல் 1938

எனதன்புள்ள அய்யாமுத்துக்கு,

நீங்கள் கிஷோரிலால்ஜியைப் பற்றிக் கேள்வியுற்றிருக்க வேண்டும். எனது மிகப் பழமையான சகாக்களில் அவர் ஒருவர். அவர் காந்தி சேவா சங்கத்தின் தலைவர் என்பதையும் நீங்கள் அறிவீர்கள்......

கிஷோரிலால் சென்னையில் இருக்கும் போது நீங்கள் அவரைச் சந்திக்கவேண்டும். அவர் அங்கு 26 தேதி முதல் 28 தேதிவரை தங்கியிருப்பார். நீங்கள் ஆத்திரமடைய மாட்டேன் என்று உறுதி கூறவேண்டும்.

நீங்கள் ஒரு பெரிய பொறுப்பைத் தாங்கிக் கொண்டிருக்கிறீர்கள், நான் அறிந்தவரை, உங்களுக்குப் புகழ்தரும் விதத்தில் உங்கள் கடமையைச் செய்து வருகிறீர்கள்.

ஆனால் உங்களுக்கு முன்கோபம் உண்டென நீங்களே ஒப்புக்கொண்டிருக்கிறீர்கள். இந்த விஷயத்திலும், மற்றெல்லா விஷயத்திலும் நீங்கள் முன்கோபத்தை விட்டுவிட வேண்டுமென்று நான் வலியுறுத்துகிறேன். அப்போதுதான் நீங்கள் தரித்திர நாராயணன் சேவைக்கு மிகவும் தகுதிவாய்ந்தவர் ஆவீர்கள்.

உங்கள் அன்புள்ள
எம். கே. காந்தி

கிஷோரிலால் மஸ்ருவாலா அவர்களை நான் 28ந் தேதி சென்னையில் இராஜாஜி இல்லத்தில் சந்தித்தேன்.

அடுத்த நாள் மாலை அவரும் அவர் மனைவியும் என்னுடன் ரயிலேறி 30ந் தேதி திருப்பூர் சேர்ந்தார்கள்.

எனது இல்லத்தில்தான் அவ்விருவரும் தங்கினார்கள்.

பெரியநாயக்கன் பாளையம் போகவேண்டுமென்று அவர் தெரிவித்ததால் அவரையும் அவர் மனைவி

யையும் காரிலேற்றிக் கொண்டுபோய் அவிஞசிலிங்கத்தின் இராமகிருஷ்ண வித்யாலயத்தில் சேர்த்துவிட்டுத் திரும்பினேன்.

ஒருநாள் அங்கு தங்கியிருந்து மறுநாள் மஸ்ருவாலா அவர்கள் தம் துணைவியோடு திருப்பூர் காந்தி நகரிலிருந்த எனது இல்லத்துக்குத் திரும்பினுர்.

மறுநாள் அவிஞசிலிங்கம் பாளையம் என்னும் இராமத்துக்கு அவரும் நானும் போய் வந்தோம்.

காந்தி நகரில் எனது சகஊழியர்களை ஒன்று திரட்டி மஸ்ருவாலா அவர்களைச் சந்தித்துத் தங்கள் குறைகளையெல்லாம் அவரிடம் தெரிவிக்குமாறு கேட்டுக்கொண்டு, நான் வேறு அலுவலாக வெளியில் போயிருந்தேன்.

இவ்வாருக இரண்டு தினங்கள் மஸ்ருவாலா தம்பதிகளை நானும் எனது மனைவி கோவிந்தம்மாளும் எங்கள் விருந்தினர்களாக உபசரித்து சென்னைக்கு அனுப்பி வைத்தோம்.

மஸ்ருவாலா அவர்களை சென்னையில் சந்தித்தபோதும், திருப்பூரில் என்னுடன் தங்கியிருந்த இரண்டு நாட்களிலும், கோவை பெரியநாயக்கன் பாளையம் முதலிய இடங்கட்கு அவருடன் பிரயாணம் செய்தபோதும் என்னிடம் எவ்விஷயம் குறித்தும் அவர் விவாதிக்கவில்லை. எனது சகஊழியர்களிடத்தில் அவர் என்ன கேட்டார் அல்லது அவர்கள் என்ன தெரிவித்தார்கள் என்பதும் நான் விசாரிக்கவில்லை.

மஸ்ருவாலா அவர்கள் கொடிய ஆஸ்துமாவினுல் எங்களுடனிருந்த இரண்டு இரவுகளும் அவஸ்தைப் பட்டுக்கொண்டிருந்தார். காலையில் ஒரே ஒரு!இட்லி

சாப்பிட்டுச் சிறிது நேரத்தில் அதையும் வாந்தி யெடுத்துவிட்டார். எப்படியோ இரண்டு நாட்கள் எங்களுடன் அவர்களிருவரும் மனமகிழ்வுடன் தங்கி யிருந்தனர்.

அவரை ரயிலில் ஏற்றி நான் சரங்குவித்து விடை பெறும்போது, அவர் முகத்தில் புன்முறுவல் தவழ என்னிரு கரங்களையும் பற்றிக்கொண்டு "I am immensly pleased with you and your activities. I shall convey my best impressions about you to Bapu" "உங்களிடத்திலும், நீங்கள் புரிந்துவரும் காரியாதிகளிடத்தும் நான் பெருமகிழ்வு கொண்டேன். உங்களைப்பற்றிய எனது நல்லெண்ணங்களை நான் பாபுஜியிடம் தெரிவிப்பேன்" என்றவர் மிக மெல்லிய குரலில் சொன்னபோது, என்றுமில்லாதவாறு நான் உணர்ச்சிபட்டு, என்னிரு கண்களும் பனித்தன.

நானும் ஆஸ்துமாவை இருப்பில் போதிய அளவு வைத்திருந்தபடியால் அவருக்கு என்னிடம் இரக்கமும் அநுதாபமும் தோன்றியிருக்கலாம்.

அந்தச் சந்திப்புக்கு அப்புறம் ஸ்ரீ மஸ்ருவாலா அவர்கள் எனக்குப் பல கடிதங்கள் எழுதியுள்ளார். மகாத்மா காந்தியின் மறைவுக்குப் பின்னரும் அவர் "ஹரிஜன்" பத்திரிகை ஆசிரியராயிருந்தபோது எனது கட்டுரைகளை அப்பத்திரிகையில் பிரசுரித்து, அதைப் பற்றித் தலையங்கமும் எழுதியுள்ளார்.

## கொழும்பு யாத்திரை

காந்தி தூதர் வந்து சென்ற பின்னரும் எனக்கு மன அமைதி ஏற்படவில்லை. தொழுவில் பூட்டிய எருதைப்போல் சர்க்கா சங்க சேவையில் மாட்டிக்

கொண்டோமே என்ற கவலை மேலிட்டது. பொது ஸ்தாபனத்தின் பொறுப்பிலிருந்து தப்பித்துக் கொண்டு, சுதந்திரத்தோடு வாழவேண்டுமென்ற எண்ணம் வளர்ந்துகொண்டே இருந்தது.

ஜுலை மாதம் நான்காம் தேதி ஸ்ரீசங்கர்லால் பாங்கர் திருப்பூர் வந்து ஓர் இரவும், ஓர் பகலும் எனது இல்லத்தில் தங்கியிருந்து திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்துக்குச் சென்றார்.

ஜுலை மாதம் 12ந் தேதி நான் சர்க்கா சங்கத்தை விட்டு விலகுவதாக முடிவுசெய்து எனது இராஜினமா கடிதத்தை இராஜாஜிக்கு அனுப்பி, அதை மகாத்மா காந்திக்கு அனுப்பி வைக்குமாறு கேட்டுக்கொண்டேன்.

"முடியாது" என்று ஒரே ஒரு ஒற்றை வார்த்தைப் பதிலுடன் அக்கடிதம் எனக்கே திரும்பி வந்தது.

தெய்வமே துணையென்று என் வேலையில் முன்னை விட அதிக மும்முரமாக ஈடுபடலானேன்.

இலங்கையில் கதர் கிடைப்பதில்லை யென்று பல ஆவலாதிகள் வந்திருந்தன. ஈழகேசரி ஆசிரியர் அவர்களும் எனக்குக் கடிதம் எழுதியிருந்ததுடன் தமது பத்திரிகையிலும் ஒரு தலையங்கமே எழுதியிருத்தார்.

செப்டம்பர் மாதம் 22ந் தேதி இலங்கைக்குச் சென்றேன். மதுரை T. K. ராமா என்னுடன் வந்தார்.

கொழும்பிலிருந்த இந்திய சமுகத்தினர் எங்களைப் பேரன்போடு வரவேற்று உபசரித்தனர்.

கொழும்பில் வாழைத்தோட்டம் என்னுமிடத்தில் எனக்காக ஒரு பொதுக்கூட்டம் ஏற்பாடு செய்தார்கள். அக்கூட்டம் மிகப் பெரியதாய் இருந்தது. அவ்வளவு பெரிய கூட்டம் கூடுமென நான் எதிர்பார்க்

கவே இல்லை. அக்கூட்டத்தில் ஒரு மணி நேரம் பேசிக் கொளும்பு வாழ் இந்தியரின் பாராட்டுதலைப் பெற்றேன்.

கொளும்பு நகரம், கண்டி., திரிகோணமலை, யாழ்ப்பாணம் ஆகிய நான்கு ஊர்களில் கதர் விற்பனை ஏஜன்சிக் கிளைகளைத் திறந்து வைத்துவிட்டு, நானும் ராமாவும் அக்டோபர் இரண்டாந்தேதி இந்தியா வந்து சேர்ந்தோம்.

## 10

## எனது ராஜினுமாக் கடிதம்

15-2-1939ல் மகாத்மா காந்திக்கு நான் கீழ்க் கண்டவாறு எழுதினேன்.

அகில பாரத சர்க்கா சங்கம்
திருப்பூர் 15-2-39

நெ. 637.
பிரசிடெண்ட்
அகில பாரத சர்க்கா சங்கம்
வர்தா

அன்புள்ள அய்யா,

தில்லியில் கூடிய அகிலபாரத சர்க்கா சங்கக் கௌன்சிலில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்திற்கிணங்க நூற்போர் கூலியை உடனடியாக உயர்த்துமாறு, இரண்டு தினங்கட்கு முன் சென்னையில் என்னைச் சந்தித்த அகில பாரத சர்க்கா சங்கக் காரியதரிசி கூறினர்.

கூலியை உயர்த்துவதிலுள்ள பிரத்தியட்ச சங்கடங்களை யெல்லாம் அவரிடம் விரிவாக எடுத்துக் கூறினேன். ஆனல் அவர், அவ் விஷயத்தில் ஒரு முடிவுக்கு வந்திருந்தபடி

யால், யாதொரு தயக்கமுமின்றிக் கூலியை உயர்த்துமாறு சொன்னர்.

கதர் விலையை உயர்த்தியும், அரசாங்கத்தினிடமிருந்து பெறும் மான்யத் தொகை கொண்டும், நஷ்டத்தை ஈடுசெய்ய முடியுமென்றும், மான்யம் கிடைக்காவிடில் விலையை மேலும் உயர்த்தலாமென்றும் அவர் தெரிவித்தார்.

தற்சமயம் கூலியை உயர்த்துவதிலுள்ள சங்கடங்களைத் தங்களிடமும் தெரிவிக்க விரும்புகிறேன்.

1. நூல் உற்பத்தி செய்யும் பிரதேசங்கள் பலவற்றில் கடுமையான வறட்சியும், கொடிய பஞ்சமும் ஏற்பட்டிருப்பதால், உற்பத்தியை கட்டுப்படுத்த முடியாது.

2. சென்ற ஆண்டில் 54,047 நூற்போர்களின் பெயர் பதிவு செய்யப்பட்டுள்ளது. அவர்களிடமிருந்து 91,49,809 சிட்டங்கள் ரொக்க விலைக்கும் 25,35,041 சிட்டங்கள் சுயதேவைக்குமாக வாங்கப்பட்டது. பணமுடையால் ஆண்டின் துவக்கத்திலிருந்து கொள்முதலைக் கட்டுப்படுத்திய நிலையிலும் இப்பெருமளவு உற்பத்தியாயிற்று.

நாம் கொடுக்கும் விலையைக் காட்டிலும் மிகக் குறைவான விலைக்கு அத்தாட்சியில்லாத வியாபாரிகள் பெருமளவு நூல் வாங்கியுள்ளனர். உற்பத்தியாகும் எல்லா நூல்களையும் நம்மால் கொள்முதல் செய்ய இயலாத காரணத்தால் இந்நிலைமை ஏற்பட்டது.

3. ஆதலால் இப்போதிருக்கும் அளவி லிருந்து உற்பத்தியைக் கட்டுப்படுத்திக் குறைக்க முடியாதென்பது தெளிவு. இப் போது ரூபாயுக்குப் பதினைந்து சிட்டங்களா கக் கொள்முதல் செய்யப்படும் நூலை பதி மூன்று சிட்டங்களாக வாங்குவதென்றால் ஒரு லட்ச ரூபாய் உள்ளீடு ஏற்படும். தமிழ்நாடு, ஆந்திரா, கேரளம் ஆகிய மூன்று மாநிலங்கட் கும் சேர்த்து அரசாங்கம் அளிக்கும் மானியம் ஒரு லட்சமேயாகும், இதில் தமிழ்நாட்டுக் குக் கிடைக்கும் தொகையைக் கொண்டு நஷ் டத்தில் சரிபாதியைத்தான் சரிக்கட்ட முடி யும். மறுபாதியைச் சரிக்கட்டக் கதர்விலையை உயர்த்தியாக வேண்டும்.

4. 1936ல் கூலியையும் கதர்விலையையும் கூட்டியதால் எழுந்த புயல் இன்னும் தணிய வில்லை. கதருடுத்துவோர்கள் இன்னும் கடிந்து கொண்டே இருக்கிறார்கள். மேலும் விலைகள் உயர்த்தப்பட்டால் கண்டனக் குரல்கள் வலுவடைவதுடன் கதர் விற்பனையும் குறைந்துவிடும். அத்தாட்சி பெறாத கதரின் உற்பத்திக்கும் விற்பனைக்கும் மறைமுகமான ஆதரவு தந்தவர்கள் ஆவோம்.

5. ஆனால் கொள்முதல் தீர்மானத்திற் குக் கீழ்ப்படிந்து செயலாற்ற வேண்டும் என்ற தங்கள் நீண்டகாலக் கனவு பலித மடைய வேண்டும். என்னுடைய சக்தியின்மை அவற்றிற்குத் தடையாக இருக்கக்கூடாது.

ஆதலால் தாங்கள் கிருபைகூர்ந்து வேறு ஒருவரை நியமித்து, என்னை இந்த மகத்தான

பொறுப்பிலிருந்து விடுவிக்கும்படியாய்க் கோருகிறேன்.

நான் ஓடிப்போய் விடுவேன் என்பதல்ல இதன் அர்த்தம். ஏதாவதொரு மூலைக்காட்டில் நான் ஒரு சின்னஞ்சிறு ஊழியனாக இருந்து செயல்புரிவேன். இந்தப் பெருஞ் சுமை என்னை விட்டகலும். அத்தாட்சி பெறாத வர்த்தகர்களும், அவர்களது எடுபிடியாட்களும் வீசிவரும் கணைகளினின்று தப்புவேன்.

தங்களன்புள்ள
C. A. அய்யாமுத்து
காரியதரிசி

## பாங்கருக்கு இராஜாஜியின் கடிதம்

காந்திஜிக்கு எனது கடிதத்தை நேராக அனுப்பிவிட்டு, அதன் நகல் ஒன்றை இராஜாஜிக்கு அனுப்பி வைத்தேன். அவர் அதனைப் பெற்ற மாத்திரத்தில் ஸ்ரீ சங்கர்லால் பாங்கருக்குக் கீழ்க்கண்டவாறு எழுதி, அக்கடிதத்தின் நகல் ஒன்றை எனக்கு அனுப்பி வைத்தார்.

பஸ்ஸுல்லா ரோடு
தியாகராஜ நகர்
சென்னை
பிப்ரவரி, 18, 1939

எனதன்புள்ள சங்கரலால்ஜி!

அய்யாமுத்துவின் 15ந் தேதி கடிதத்தின் நகலொன்று எனக்குக் கிடைத்தது.

அவர் உங்களுக்குக் கடிதம் எழுதாமலிருந்தால்கூட தற்சமயம் திருப்பூரில் கூலி

விகிதங்களை உயர்த்தக்கூடாதென்றும், நான் ஏற்கனவே எழுதியபடி கூலியைக் குறைக்க வேண்டுமென்றும் நான் உங்களை வற்புறுத்தியிருப்பேன்.

பஞ்சம் ஏற்பட்டிருக்கையில் கூலியை உயர்த்தினால் அது மிக்க ஏற்றத் தாழ்வையுண்டுபண்ணுவதுடன், நூல் நூற்போரின் தேவைகளைச் சமாளிக்கச் சங்கத்தால் முடியாத நிலைமை தோன்றிவிடும். விற்பனையாகாமல் சரக்குகள் குவிந்துவிடுமென்றும், தாங்க முடியாத நஷ்டம் ஏற்படுமென்றும் அய்யாமுத்து தன் கடிதத்தில் விவரித்துள்ளார். யாதொரு நிவர்த்தியுமில்லையென்ற நிலையில் அய்யாமுத்து ராஜிநாமா சமர்ப்பித்திருப்பதைக் கண்டு நான் ஆச்சரியப்படவில்லை. நீங்கள் எக்காரணம் கொண்டும் அவரை இராஜிநாமா செய்யும்படி விடக்கூடாது. வேலையின்மையும், பஞ்ச நிலைமையும் மிகவும் அதிகரித்துள்ளது. இந்தச் சந்தர்ப்பத்தில் நீங்கள் இப்போதுள்ள நிலைமையில் தடுமாற்றம் உண்டாக்கக் கூடாது.

உங்கள் அன்புள்ள
சி. ஆர்.

## திரு. பாங்கரின் வருகை

இராஜாஜியின் கடிதம் வந்த அன்றே, அதாவது 19-2-39 சென்னையிலிருந்து பாங்கர் தந்தியும் வந்தது.

தாம் மறுநாள் திருப்பூர் வருவதாகவும், என்னைச் சந்திக்க முடியுமென்று நம்புவதாகவும் அத் தந்தி சொல்லிற்று.

ஆனால் அடுத்த நாள் காலை திருப்பூர் ரயிலடிக்குச் சென்று பார்க்கையில் பாங்கர் வரவில்லை.

வீட்டிற்கு வந்ததும் டெலிபோன் மணி ஒலித்தது.

ஆம். சென்னை அரசாங்க முதன் மந்திரி மாண்பு மிகு இராஜாஜி அவர்கள் தமது எண்ணற்ற அலுவலுக் கிடையே என்னைக் கூப்பிட்டுப் பேசினார்.

"பாங்கரின் தந்தி கிடைத்திருக்கும். நான்தான் அவரைத் திருப்பூர் போகவேண்டாமென்று தடுத்து நிறுத்தினேன். நீங்கள் இன்றிரவு ரயிலில் புறப்பட்டு நாளை காலை சென்னை வந்து சேரவும். பாங்கருடன் வார்தா சென்று ஸ்ரீ காந்தியை நீங்கள் சந்திக்க வேண்டுமென்பது என் விருப்பம், ஆதலால் அதற் குரிய ஏற்பாட்டுடன் இன்றிரவே புறப்பட்டு வர வேண்டும்" என்றார் எனது தந்தையினும் மிக்க வாஞ்சையுடன் இராஜாஜி.

எனது உடல்நிலை சரியாக இல்லையென்று இழுத் தேன்.

"பரவாயில்லை. நாளை காலை டாக்டர் செரியனிடம் உங்களை அனுப்பி கவனிக்கச் சொல்கிறேன்" என்றார்.

மறுநாள் நான் சென்னை போய்ச் சேர்ந்தேன்.

## பாங்கரோடு வார்தா செல்லுதல்

சென்னை சேர்ந்ததும் பாங்கர், பாபுவின் கடித மொன்றை என்னிடம் நீட்டினார். அக்கடிதம்:—

சேவாகிராமம், வார்தா.
17-2-39.

எனதன்புள்ள அய்யாமுத்து,

உங்கள் கடிதம் கிடைத்தது. அதன்படி உங்களை வருவிக்குமாறு ஸ்ரீ சங்கர்லால் பாங்

கரை அனுப்பி இருக்கிறேன். நீங்கள் தொடர்ந்து சங்கத்தின் தொண்டராகப் பணி யாற்றுவீர்களென்றும் உங்களிடம் கோரப் படும் எல்லா உதவியும் அளிப்பீரென்றும் எதிர்பார்க்கிறேன்.

இப்படிக்கு,
பாபு

இக்கடிதத்தைப் பெற்ற பின்னரும் நான் எதற் காக வார்தா செல்லவேண்டுமென இராஜாஜியுடன் வாதாடினேன்.

அவர் ஒரு துண்டுக் கடுதாசியில் எதையோ எழுதி என் கையில் கொடுத்து, இக்கடிதத்துடன் காந்தியைப் போய்ப் பாருங்கள் என்றார்.

"நீங்கள் எக்காரணத்தைக் கொண்டும் விலகக் கூடாதென்பது என் கோரிக்கை. உங்களுடைய பதி னைந்து வருஷ அனுபவம் சர்க்கா சங்கத்துக்கு மிகவும் தேவை"யென்று இராஜாஜி கூறியதும் நான் மறு வார்த்தை கூறுமல் பாங்கருடன் வார்தாவுக்குப் புறப் பட்டேன்.

## என்மீது சுமத்தப்பட்ட குற்றங்கள்

சென்னையிலிருந்து ரயில் வார்தாவை நோக்கி ஓடிக் கொண்டிருந்தது. பாங்கரும் நானும் மூன்றும் வகுப் புப் பெட்டியில் உட்கார்ந்து கொண்டிருந்தோம்.

ஸ்ரீ பாங்கர் ஒரு நீண்ட டைப் அடித்த கடிதத்தை தனது பெட்டியிலிருந்து எடுத்து என்னிடம் கொடுத் தார்.

அக்கடிதத்தின் தலைப்பில் ஒரு மூலையில் Dear Aiyamuthu, I see which side the wind is blowing-Bapu என்று குறிக்கப்பட்டிருந்தது.

அக்கடிதம் தமிழ்நாடு சர்க்கா சங்க கணக்குகளைப் பரிசோதித்த சங்கரராமன் அறிக்கை. அதில் என்மீது பல குற்றச்சாட்டுகள் காணப்பட்டன. அவற்றை நான் நிதானமாகப் படித்துவிட்டு ஸ்ரீ பாங்கரை நோக்கி:

இக்குற்றச்சாட்டுகள் அனைத்தும் ஆபத்தமானவை. இவை வேண்டுமென்றே என்மீது தப்பெண்ணத்தை உண்டாக்கும் பொருட்டு ஜோடிக்கப்பட்டவை. இந்த அறிக்கையைத் தயாரிக்குமுன் பரிசோதகர் தமக்குத் தோன்றிய சந்தேகங்களை என்னிடம் கேட்டிருந்தால் விளக்கம் தந்திருப்பேன் என்றேன்.

"அவர் உங்களைக் கேட்கப் பயப்படுகிறார்" இது பாங்கருடைய பதில்.

இந்த அறிக்கையை சங்கத்தின் பிரசிடெண்டான மகாத்மாவுக்கு அனுப்பு முன், எனக்கு அனுப்பி எனது சமாதானத்தோடு அவருக்கு அனுப்புவதுதான் முறை என்று உங்களுக்குத் தோன்றாமல் போனது ஏன் என்று நான் கேட்டேன்.

பாங்கர் விழித்தார்.

"உண்மையில் நீங்கள்தான் வெட்கப்படவேண்டும். சரி சரி, பாபுவிடம் நான் பேசிக்கொள்கிறேன்" என்று என் வார்த்தையை அத்துடன் முடித்தேன்.

வார்தா ஸ்டேஷனில் ரயிலை விட்டிறங்கி நானும் பாங்கரும் ஒரு டாங்காவில் ஏறி பஜாஜிவாடி சென்று அங்கு குளித்து உடைகளை மாற்றிக்கொண்டு சேவா கிராமம் சென்று மகாத்மாவைப் பார்த்தோம். தரையில் உட்கார்ந்திருந்தார். அவர்முன் ஒரு சிறிய சாய்வு மேஜை இருந்தது.

பாபுவைப் பார்த்த மாத்திரத்தில் எனது இரு கரங்களையும் கூப்பி அவரைக் கும்பிட்டு இராஜாஜி கொடுத்

திருந்த சீட்டை அவரிடம் கொடுத்துவிட்டு தரையில் உட்கார்ந்தேன்.

பாபு அச்சீட்டை வாங்கிப் படித்துவிட்டு, அதன் தலையில் தாம் பெற்றுக்கொண்ட தேதியைக் குறிப்பிட்டு தம் முன்னிருந்த சிறிய மேஜைமீது அதைப் பத்திரமாக வைத்துவிட்டு என்னைப் பார்த்தார்.

ஸ்ரீ பாங்கர் பாபுவின் பாதங்களில் தமது சிரசைத் தாழ்த்தி வைத்து வணங்கிவிட்டுத் தரையில் அமர்ந்தார்.

நான் பாங்கர் கொடுத்த பரிசோதகரின் அறிக்கையை எடுத்துப் பாபுவிடம் நீட்டிக்கொண்டே,

"இது இங்கே ரயிலில் வந்துகொண்டிருக்கும்போது தான் என்னிடம் கொடுக்கப்பட்டது.

பரிசோதகரின் குற்றச் சாட்டுகளைப் படிக்கும் போது எனக்குக் கோபம் வந்திருக்க வேண்டும். ஆனால் கோபம் வரவில்லை. சிரிப்புத்தான் வந்தது.

ஆனால் உங்கள் குறிப்பைப் பார்த்ததும் எனக்குத் துக்கம் வந்தது.

கொலை செய்ததாகக் குற்றம் சாட்டப்பட்டவனைக் கூடத் திர விசாரியாமல் உலகில் தீர்ப்புக் கூறுவதில்லை. ஆனால் தாங்கள் அந்த சாதாரண நீதியைக்கூட உணராமல் போனது எனது துரதிருஷ்டம் என்று எண்ணித்தான் நான் துக்கமடைந்தேன்.

தங்களுடைய அகிம்சா தர்மம் இப்படிச் செயல்படுமென்று நான் கனவிலும் கருதவில்லை.

முதலாவதாகப் பரிசோதகருக்கு ஏற்படும் சந்தேகங்களுக்கு விளக்கம் தருமாறு என்னையோ, அல்லது எனது காரியாலயக் கணக்கரையோ கேட்டிருந்தால் அவருடைய சந்தேகத்தைப் போக்க முயன்றிருப்

போம். அந்த நியாயமான சந்தர்ப்பம் எனக்கு அளிக்கப்படாதது முதற் குற்றம்.

ஸ்ரீ பாங்கராவது இந்த அறிக்கையைத் தங்களிடம் அனுப்புமுன் எனக்கு அனுப்பி எனது சமாதானங்களைப் பெற்று, அவருக்கு அவை திருப்தி தராதபட்சத்தில் இரண்டையும் சேர்த்துப் பிரசிடெண்டாகிய தங்களுக்கு அனுப்பத் தவறியது இரண்டாவது குற்றம்.

மூன்ருவதாக தாங்கள் என்னைக் கேட்ட பின்னர் தங்கள் அபிப்பிராயத்தை வெளியிடாமல் எப்பக்கம் காற்றடிக்கிறது என்று குறிப்பிட்டது Most unfortunate பெரிய துரதிருஷ்டம்.

என்மீது சுமத்தப்பட்டுள்ள குற்றங்கள் ஆறு.

முதலாவதாக என் வீட்டில் எரியும் மின்சார விளக்குகளுக்குத் தனி மீட்டர் இல்லை. ஆதலால் அதற்கு நான் பணம் செலுத்துவதில்லை என்பது.

தனி மீட்டர் இல்லையென்பது உண்மை. ஆனல் நான் மின்சாரக் கட்டணம் செலுத்துவதில்லையென்பது சரியல்ல. வருடம் ஐம்பது ரூபாய் செலுத்தி வந்திருக்கிறேன். தொழிற்சாலை விகிதத்தில் மின்சாரம் அளிக்கப்படுவதால் வீடுகளுக்கென்று தனி மீட்டர்கள் வைத்துக் கொள்ளப்படவில்லை. மேலும் என் வீட்டில் சர்க்கா சங்க காரியலாயமும் இருக்கிறது.

இரண்டாவதாக என் வீட்டின் காம்பவுண்டிற்குள்ளிருக்கும் மரஞ்செடிகளுக்கு சர்க்கா சங்க செலவில் தண்ணீர் பாய்ச்சினேன் என்பது.

அதற்கும் நான் அவ்வப்போது "தண்ணீர்க் கட்டணம்" செலுத்தி வந்துள்ளேன் என்பது கணக்குகளைப் பார்த்தால் தெரியும்.

மூன்ருவதாக காந்தி வித்யாலயக் கட்டிடத்திற்கு சர்க்கா சங்கத்திலிருந்து மரங்கள் எடுக்கப்பட்ட தென்பது.

சர்க்கா சங்கத்திற்குத் தேவையில்லாத மரங்களைத் தேவையான பேர்களுக்கு பில்போட்டு விற்பனை செய்திருக்கிரும். ஆதலால் அதில் சங்கத்திற்கு இலாபமே தவிர எவ்வித நஷ்டமும் இல்லை.

நான்காவதாக நானும் எனது சகாவும் ஒரு ஊருக்கு ஒருமுறை போய்வந்ததற்கு இரண்டு முறை போய் வந்ததாகப் பிரயாணப் பில் போடப்பட்டுள்ளது என்பது.

ஒரே ஊருக்கு இரண்டு வெவ்வேருன தேதிகளில் போய் வந்ததற்குத்தான் இரண்டு பில்கள் போடப்பட்டுள்ளனவே அன்றி ஒரு முறை சென்றதற்கு இரண்டு பில்கள் போடப்படவில்லை. எந்தெந்த ஊர்களுக்கு எந்தெந்தத் தேதிகளில் சென்ருேம் என்பதற்குப் போதுமான ஆதாரம் நான் பார்வையிட்ட கிளைகளின் தினசரிக் குறிப்புகளிலும், எனது சுற்றுப்பிரயாண அறிக்கைகளிலும் தவருது காணலாம்.

ஐந்தாவதாக என் வீட்டில் நான் சர்க்கா சங்க காரியாலயத்தை வைத்துக் கொண்டு அதற்கு மாதம் பத்து ரூபாய் வாடகை பெற்றுக்கொண்டேன் என்பது.

இந்த வாடகை வருடாந்திர பட்ஜெட்டில் சேர்க்கப்பட்டு, கவுன்சிலுடைய அநுமதி பெற்றுள்ளதால் யாதொரு பிசகும் இல்லை. காரியாலயத்தைப் பெருக்குவதற்கும், குடிதண்ணீர் நிரப்புவதற்கும் பணிப் பெண்ணிற்கு யாதொன்றும் தனியாக சர்க்கா சங்க நிதியிலிருந்து கொடுக்கப்படுவதும் இல்லை. மற்றும் என் வீட்டில் மீட்டர் இல்லாமல் விளக்குகள்

எரிக்கப்படுவதாகச் சொன்னதில் இக்காரியாலயத்தில் எரிக்கும் விளக்குகளும் சேர்ந்தவை.

மற்றும் காந்திநகருக்குவரும் ஸ்ரீ பாங்கர் போன்றவர்களும் இதர பார்வையாளர்களும் எனது வீட்டில் தான் தங்குகிறுர்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது.

எனது காம்பவுண்டிலுள்ள அவுட்ஹவுசுகளில் தான் நான் குடியிருக்கிறேன். பிரதான கட்டிடத்தில் சர்க்கா சங்க காரியாலயம் செயல் படுகிறது. விருந்தாளிகளும் அங்குதான் தங்குகிறுர்கள்.

ஆறுவதாக எனது சொந்தக் காரில் சவாரி செய்து கொண்டு சர்க்கா சங்கத்திடம் வாடகை பெற்றுக்கொண்டேன் என்பது.

சர்க்கா சங்க வேலையாக நானும் எனது சகாக்கள் இரண்டொருவரும் வாடகைக் கார் அமர்த்திச் சென்ருல், அக்காருக்குப் பெட்ரோலும் நாளொன்றுக்கு ஐந்து அல்லது ஆறு ரூபாய் வாடகையும் தருகிறோம். வாடகைக் கார்கள் கிடைக்காதபோது எனது சொந்தக் காரில் பிரயாணம் செய்தால் சர்க்கா சங்க செலவில் பெட்ரோல் போடுவதுடன், நாளொன்று ஐந்து ரூபாய் வாடகை பிரயாணச் செலவு கணக்குகளில் பற்றெழுதப்பட்டு, கார் வாடகைக் கணக்கில் வரவு வைக்கப்பட்டுள்ளது. ஆனுல் அக்கணக்கிலிருந்து ஒரு சல்லிக் காசும் நான் நாளதுவரை கைநீட்டி வாங்கியதில்லே. எனது காருக்கு ஏற்படும் சிறிய ரிப்பேர் செலவுகள்தான் அவ்வாடகைக் கணக்கிலிருந்து ஈடு செய்யப்பட்டு வந்துள்ளது. இதில் யாதொரு தவறும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லே. இத்தனே விபரமும் பரிசோதகர் எங்களிடம் வாய் திறந்தோ, அல்லது கடிதத்தில் எழுதியோ

கேட்கவில்லையானும், இக்கணக்குகளையெல்லாம் அவர் பரிசோதித்தபோது தெரியவராமல் இருந்திருக்க முடியாது. கலர் பென்சில்களிலே அவர்தம் கண்களை மூடிக்கொண்டு டிக் அடித்திருக்க மாட்டார்.

தமிழ்நாடு சர்க்கா சங்கத்தில் வருஷம் பதினைந்து லட்சம் ரூபாயுக்கு பஞ்சும் பருத்தியும் நூலும் ஜவுளியும் சாயமும் பிறவும் வாங்குகிறோம். தப்பு வழியில் பணம் சம்பாதிப்பதற்கு இவற்றில் ஏராளமான வாய்ப்பிருக்கையில் கேவலம் இரண்டு எலக்ட்ரிக் விளக்குகள் எரித்தும், பத்து ரூபாய் வாடகை பெற்றும், மரத்தையும் கிரத்தையும் எடுத்தும், நாலைந்து ரூபாய்கள் பிரயாண பில்லில் சேர்த்துமா நான் அவதிப்பட வேண்டும்?

சிலர் வேண்டுமென்றே சதியாலோசனை செய்து எனது பெயரையும், பிரக்யாதியையும் கெடுக்க எவ்வளவோ முயன்றும் அவர்களுக்கு இந்தத் தூசும் தும்பும்தான் என்மீது வாரிப்போட முடிந்தது கண்டு நான் உண்மையில் பெருமிதம் கொள்கிறேன்.''

என்று ஒரு குட்டிப் பிரசங்கமே பாபுவின் முன்னால் யாதொரு படபடப்பும் பதற்றமும் இன்றிச் செய்து விட்டேன்.

நான் சொல்வதையெல்லாம், இடையில் யாதொரு குறுக்கிடுமின்றி மகாத்மா மிக உன்னிப்போடு கேட்டிருந்துவிட்டு, நான் பேசி முடிந்ததும் ஸ்ரீ பாங்கரைத் தலைநிமிர்ந்து பார்த்தார்.

பாங்கர் வாய் திறக்கவில்லை. அடித்துவைத்த சிலைபோல் சிறந்தாழ்ந்து வீற்றிருந்தவர் திடீரென்று எழுந்து, மகாத்மாவின் மடிமீது தமது தலையை வைத்து ஓவென்று அழத் தொடங்கினார்!

மகாத்மா பாங்கரின் தலையைத் தடவிக்கொடுத்து அவரைச் சாந்தப்படுத்தி உட்காரச் சொல்லிவிட்டு, ஒரு துண்டுக் கடிதத்தில் எதுவோ எழுதி என் கைகளில் கொடுத்தார்.

மகாத்மாவின் ராஜிநாமா கடிதம்

அக்கடிதத்தில்—

My dear Aiyamuthu,

I do hereby resign my presidentship of the All India Charka Sangh.

Yours
**Babu.**

என்பதாக எழுதப்பட்டிருந்தது.

அதை நான் அவரிடமே திருப்பிக்கொடுத்து Send this to your Creator என்று சற்று துடுக்காகவே சொன்னேன்.

காந்தியடிகள் தம் பொக்கை வாயைத் திறந்து சிரித்துக்கொண்டே

"ஹோ! எனது இராஜிநாமாவை என்னைப் படைத்தவனுக்கு நான் அனுப்பவேண்டும். உங்கள் ராஜிநாமாவை நான் பெற்றுக்கொள்ள வேண்டுமா? அது முடியாது. இதோ இரண்டு ராஜிநாமாக்களையும் நான் கிழித்து விடுகிறேன்" என்று அத்துண்டுக் கடிதத்தை கிழித்தெறிந்துக் கொண்டே என்னை நோக்கி:

"இப்போது நல்ல பிள்ளையாகத் திரும்பச் சென்று எப்போதும்போல் உங்கள் வேலையைச் செய்யுங்கள். Now get back as a good boy and carry on your work as usual என்றார்.

அப்படியே செய்யத் தற்போது இசைகிறேன். ஆனால் ஐந்தாறு மாதத்துக்குள் தாங்கள் எனக்கு விடுதலை தரவேண்டும். நான் போய் வருகிறேன் என்று கூறிக்கொண்டே எழுந்துநின்று அவரை நமஸ்கரித்தேன்.

"பிராமணர்களைக் கண்டால்"........

பிராமணர்களைக் கண்டால் உனக்குப் பயமா என்று நான் எதிர்பாராத கேள்வியொன்றை மகாத்மா என்னிடம் கேட்டார்.

எனக்கென்ன பயம் என்றேன்.

இராஜாஜி ஒரு பிராமணர்தானே என்றார் மகாத்மா.

சந்தேகமென்ன என்றேன்.

இதோ அந்தப் பிராமணர் உம்மைப்பற்றி என்ன எழுதியிருக்கிறார் என்று படித்துப் பாரும் என்று சொல்லிக்கொண்டே, இராஜாஜி சென்னையில் என்னிடம் கொடுத்தனுப்பிய கடிதத்தை என்னிடம் கொடுத்தார். அக்கடிதம் வருமாறு:

(Date noted by Bapu)
24-2-39

Madras
22-2-39

My dear Bapu,

All troubles come together! Aiyamuthu is going to you. I sent for him and asked him to go to you.

Shankerlal has shown your letter to him.

He has been most loyal and he has worked with zeal, energy and intelligence amidst great difficulties and struggling with unscrupulous enemies.

I feel he deserves your love and blessing. Keep him with you for some time.

Love                                                  Yours
Raja

எனதன்புள்ள பாபு,

கஷ்டங்கள் எல்லாம் ஒருமித்தே வருகின்றன. அய்யாமுத்து தங்களிடம் வருகிறார். நான் அவரைவரவழைத்து உங்களிடம் போகுமாறு சொன்னேன்.

உங்கள் கடிதத்தை சங்கரலால் அவரிடம் காட்டினார்.

அவர் அதி விஸ்வாசத்துடன் இருந்திருக்கிறார். பழிக்கஞ்சாத பகைவர்கள் மத்தியில், அவர் ஊக்கத்தோடும், உற்சாகத்தோடும் விவேகத்தோடும் உழைத்து வந்திருக்கிறார்.

தங்கள் அன்புக்கும் ஆசிர்வாதத்துக்கும் அவர் பாத்திரமானவரென்று நான் கருதுகிறேன். அவரைத் தங்களோடு கொஞ்ச காலம் வைத்திருங்கள்.

அன்புடன், தங்கள்,
இராஜா

இராஜாஜியின் கடிதத்தைப் படித்துவிட்டு மகாத்மாவிடம் அதைத் திருப்பிக் கொடுத்தேன்,

"இல்லை, அக்கடிதத்தை நீங்களே பத்திரமாக வைத்துக்கொள்ளுங்கள் என்று சொல்லிவிட்டு

'நீங்கள் இராஜாஜியின் செல்லப் பிள்ளையா?' Are you Raja's pet? என்று கேட்டார்.

நான் சிரித்துக் கொண்டே இல்லை என்றேன்.

## 'சாப்பிட்டு விட்டுப் போ"

நான் புறப்படுகிறேன் என்று மகாத்மாவிடம் தெரிவித்தேன்.

அவர் சாப்பிட்டுவிட்டுப்போமாறு சொன்னார்.

நான் இங்கு வரும்போது சாப்பிட்டாய்விட்ட தென்றேன்.

அப்படியானால் நாளை வந்து சாப்பிடவேண்டும்,

அய்யோ; இல்லை. என்னை மன்னித்துவிடுங்கள். எனது சகாக்கள் எல்லோரும் பெரும் குழப்பத்தோ டிருப்பார்கள். நான் இன்றே திரும்ப வேண்டும் என்றேன்.

ஆம்! எனக்குக் கடந்த இரண்டு நாட்களாக உங்கள் சகாக்களின் தந்திகள் வந்து குவிந்து கொண் டிருந்தன. நீங்கள் விலக அநுமதிக்கக் கூடாதென்று அவர்கள் தெரிவித்திருந்தார்கள். நாளை தங்கி நீங்கள் என்னுடன் உணவருந்திவிட்டுப் போகலாம், என்றார் அன்பே உருக்கொண்ட அண்ணல்.

பாபுஜி! நான் சாப்பிடுவதெல்லாம் தங்கள் உண வென்றே கருதுகிறேன். அதற்காக வீணில் ஒருநாள் செலவழிப்பானேன் என்றேன்.

பரவாயில்லை, நாளைகாலை சரியாய்ப் பத்து மணிக் கெல்லாம் இங்குவந்து விடவேண்டும் என்று மகாத்மா திட்டப்படுத்தினார்.

அதற்குமேல் நான் எதுவும் பேசுவது சரியென்று தோன்றவில்லையாதலால், சரியென்று ஒப்புக்கொண்டு விடை பெற்றேன்.

ஆம், பாங்கருடனும் விடை பெற்றுக்கொண்டு வர்தாவிலுள்ள பஜாஜின் விருந்தினர் மாளிகைக்குத் திரும்பினேன்.

## "நீ அதிர்ஷ்டசாலி!"

மறுநாள் காலை பத்துமணிக்குக் கடியாரத்தைப் பார்த்துக்கொண்டே சேவாகிராம ஆசிரமத்தை அடைந்தேன்.

கஸ்தூரிபாய் அம்மையார் உணவு விடுதியின் வெளிப்புறத் திண்ணையில் நின்று கொண்டு, என் வரவை எதிர் பார்த்திருந்தார்.

அவரைப் பார்த்துச் சிரித்துக்கொண்டே ஒரு கும்பிடு போட்டேன்.

"வா, வா, பாபுஜிக்குக் காலில் வீக்கம். அதனால் அவருக்குச் சாப்பாடு அவர் இருக்குமிடத்திற்கே அனுப்பிவிட்டேன். நீ கை கழுவு, சாப்பிடுவோம்" என்றார் அன்னை சரளமான இந்திமொழியில்.

உள்ளே வரிசையாக வைக்கப்பட்டிருந்த தட்டுகளின் முன்னே ஆசிரமவாசிகள் உட்கார்ந்திருந்தார்கள். நான் உட்கார்ந்ததும், அன்னையார் என்னருகில் அமர்ந்தார்.

பிரார்த்தனை சொன்னார்கள். பிறகு சாப்பிட ஆரம்பித்தோம்.

நான் சாப்பிட்ட தாம்பாளத்தை சுத்தமாக மண் தேய்த்துக் கழுவி வைத்துவிட்டு அம்மையாரிடம்

''நான் போய்வருகிறேன். பாபுஜியிடம் சொல்லி விடுங்கள்'' என்றேன்.

''இல்லை. நீயே போய் சொல்லிவிட்டுப் போ'' என்றார் அன்னை.

''பாபு அதிக வேலையாக இருப்பார். அநேகம்பேர் அங்கு காத்திருப்பார்கள். நான் ஏன் போய் அவர் வேலையைச் செடுப்பானேன்?'' என்றேன்.

''அய்யாமுத்து வந்து சாப்பிட்டதும் தம்மை வந்து பார்த்துவிட்டுப் போமாறு பாபுஜீ தெரிவித்திருக்கிறார். அவர் சுபாவம்தான் உனக்குத் தெரிந்திருக்குமே. போய் பார்த்துவிட்டுப் போ,'' என்று மீண்டும் பாயின் கட்டளைப் பிறக்கவே ''அச்சாஜி—நமஸ்தே'' என்று கை கூப்பி நமஸ்கரித்துவிட்டுச் சுமார் ஐம்பது கெஜ தூரத்துக்கு அப்பாலிருந்த அண்ணலின் குடிலைநோக்கி விரைந்தேன்.

அங்கு பலபேர் கூடியிருந்தனர். அடிகளார் இராஜகோட் சமஸ்தானத்திற்குப் புறப்படும் தறுவாயிலிருந்தார்.

என்னைக் கண்டதும் மகாதேவ தேசாய் உள்ளே வருமாறு தலையை அசைத்தார்.

நான் கூப்பிய கரங்களுடன் பாபுவைப் பார்த்து, ''பாபுஜி! நான் சாப்பிட்டாய் விட்டது. போய் வருகிறேன். விடை தாருங்கள்'' என்றேன்.

அவரது கால் வீக்கத்திற்கு டாக்டர் சுசீலா அம்மையார் தைலம் தடவிக் கொண்டிருந்தார்.

மகாத்மா தலைநிமிர்ந்து என்னைப் பார்த்து ''எனக்குக் கால்வீக்கம். அதனால் அவ்வளவு தூரம்

நடந்து வந்து, உன்னோடு உட்கார்ந்து சாப்பிட முடிய வில்லை, வயிறு நிறையச் சாப்பிட்டாயா?'' என்றார்.

''ஆம்'' என்றேன் சிரித்துக்கொண்டே.

''பொய் சொல்லுகிறாய்'' என்றார் அந்தப் பொக்கை வாயர்!

''இல்லை, இல்லை. பொய் ஏன் சொல்லவேண்டும்? உண்மையாக வழக்கம்போல் சாப்பிடும் அளவு சாப் பிட்டேன்.''

''உப்பில்லை, புளியில்லை, காரமில்லை, மசாலா இல்லை, நீ எப்படி வயிறு நிறையச் சாப்பிட்டிருப்பாய்?''

''பாபுஜி! எனக்கு வேண்டியது சோறும், தயிரும். இரண்டும் அன்னை தந்தார்கள். மூச்குப்பிடிக்கச் சாப்பிட்டேன்'' என்று நான் மூக்கைத் தொட்டுக் கொண்டே சொல்ல, அங்கிருந்த சர்தார் வல்லபாய் படேலும் மற்றோரும் சிரித்தார்கள். சங்கர்லால் பாங் கரும் கூடச் சிரித்தார்.

''நீ அதிருஷ்டசாலி'' என்றார் மகாத்மா.

''சந்தேகமென்ன? அதிருஷ்டசாலியாய் இருந்த தால் தானே பாவின் பக்கத்தில் அமர்ந்து சாப் பிட்டேன்.''

''இல்லை, நான் அதற்காகச் சொல்லவில்லை. நேற்று உன்னைச் சாப்பிட வருமாறு சொல்லி அனுப் பியதும் பா வந்தார்கள். நான் அய்யாமுத்துவை நாளை பகல் சாப்பாட்டிற்கு வரச்சொல்லியிருக்கிறேன், அவன் அரிசி சாப்பிடுகிறவனாயிற்றே, என்ன செய் வது என்று அவரிடம் கேட்டேன்.''

''அரிசி இருக்கிறது'' என்று பா கூறினார்.

"எவ்வளவு" என்று கேட்டேன்.

"சுமார் நான்குபடி இருக்கும்" என்று பா தெரிவிக்கவே, "ரொம்பவும் நல்லதாயிற்று, நாளைக்கு எல்லோருக்கும் அரிசிச் சோறே சமைத்துவிடு என்றேன்"

என்ருர் மகாத்மா.

அன்றிரவு ரயிலில் ரூ. **11—5—0** கட்டணம் செலுத்தி மூன்ரும் வகுப்பு பெட்டியில் ஏறி மறுநாள் மாலை 5-45 க்கு சென்னை சேர்ந்து அன்றிரவே மலபார் எக்ஸ்பிரசிலேறி 27ந்தேதி காலை திருப்பூர் சேர்ந்தேன்.

# 11

## திரிபுரி காங்கிரஸ்

வர்தாவிலிருந்து திரும்பிவந்தபின் மார்ச்சு மாதம் நாலாந்தேதி சுபாஷ் சந்திரபோஸ் தலைமையில் நடைபெற்ற திரிபுரி காங்கிரசுக்குச் சென்றேன்.

அங்கு 6-3-39 கைத்தொழில் பொருட்காட்சியைத் திறந்து வைத்த பண்டித ஜவஹர்லால் நேரு பேசுகையில் குறிப்பிட்டதாவது:

உங்கள் மனத்தில் இன்று காந்திஜியின் உருவம் தான் பதிந்திருக்கும். அவர்தான் இப்பொருட் காட்சியைத் திறந்து வைக்க வேண்டியவர். இங்கு நடத்தப்படும் கதர் பொருட்காட்சி மகாத்மாஜியின் லட்சியங்களைக் குறிக்கிறது.

இன்று அவர் இராஜ்கோட்டில் உபவாசமிருக்கிறார். அது தேசத்திலுள்ள மற்றெல்லா விவகாரத்தையும் பின்னணிக்குக் கொண்டுபோய்விட்டது. இங்கு நமது காரியத் திட்டங்கள் கூட அந்த உபவாசத்தினால் கலங்கி நிற்கின்றன.

சென்ற பல வருஷங்களாகக் காந்திஜி கதர்த் தத்துவத்தை உபதேசித்து வருகிறார். தேசத்தின் சின்னமாகக் கதர் கருதப்படும் காலம் வந்துவிட்டது. ஆரம்ப திசையில் இது முரட்டுத் துணியாய் இருந்தது.

ஆனால் இப்போது கதர்த் தொழில் மிகவும் உயர்ந்து விட்டது நைஸான துணிகளும், பார்ப்பதற்கு அழகான ரகங்களும் இப்போது கதர்க் கடைகளில் காணப்படுகின்றன.

இந்தப் பொருட்காட்சி வெறும் தமாஷல்ல. வேடிக்கை பார்க்கும் இடமல்ல, தேசத்தினர் வாழ்வில் கிராமக் கைத் தொழில்களுக்குள்ள ஸ்தானத்தை சித்தரித்து, கிராமப் பொருளாதாரத்தை எப்படிச் சீர்திருத்துவது, கிராமக் கைத்தொழில்களுக்கு எவ்விதம் ஊக்கமளித்துப் புத்துயிர் ஊட்டுவது, என்பனவற்றை காட்டுவதற்காகவே இவைகள் ஆரம்பிக்கப்பட்டுள்ளன. கிராமவாசிகளை நீங்கள் மேன்மையுறச் செய்யாதவரையிலும், சுதந்திரத்தைப் பற்றி நீங்கள் கருதியவர்கள் ஆகமாட்டீர்கள்.

## மகாத்மா அனுப்பிய தந்தி

அடுத்த நாள் 7-3-39 காந்திஜி உபவாசத்தை முடித்துக் கொண்டார் என்ற நற்செய்தியை பண்டித ஜவஹர்லால் அறிவித்ததும், காங்கிரஸ் மகாநாட்டில் "காந்தி வாழ்க" எனும் பேரொலி எழுந்தது.

மார்ச்சு 6-ந்தேதி ஆரம்பமான மகாநாட்டின் நடவடிக்கைகள் தொடர்ந்து 12-ந்தேதி வரை நடைபெற்று முடிவடைந்தன.

இராஜ்கோட்டிலிருந்து மகாத்மா கீழ்க்கண்ட தந்தியை ராஷ்ட்ரபதிக்கு அனுப்பியிருந்தார்:—

"காங்கிரசில் இருக்கும் ஒழுங்கீனங்களைக் களைவதற்குத் திரிபுரி காங்கிரஸ் வழிகோலாவிட்டால் அது முதல்தரமான தவறாக இருக்கும். காங்கிரஸ் விதி

களில் திருத்தங்கள் செய்து, காங்கிரசின் அங்கீகாரத்துக்கு வைக்க வேண்டுமென்று கருதாமல், அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக்கே அதிகாரம் இருக்கும்படி செய்யவேண்டும்."

இதுதான் காந்திஜி அனுப்பிய தந்தியின் சாரம்.

ராஷ்டிரபதி சுபாஷ்சந்திரபோஸ் நோய் வாய்ப்பட்ட நிலையில் இருந்ததால் ஒரே ஒருநாள் மகாநாட்டுப் பந்தலுக்கு வரமுடிந்தது. மற்றை நாட்களில் மௌலானா அபுல்கலாம் ஆசாத் தலைமை வகித்து நடத்தி மகாநாட்டை முடித்து வைத்தார்.

## பலமான சர்ச்சைக்கு இடமளித்த தீர்மானம்

"மகாத்மா காந்தியின் விருப்பத்தை அநுசரித்துக் காங்கிரஸ் காரியக்கமிட்டிக்கு அங்கத்தினர்களை நியமிக்க வேண்டும்" என்ற தீர்மானத்தைப் பண்டித கோவிந்த வல்லபந்த் கொண்டுவந்தபோது, அதன்மீது பலமான சர்ச்சைகளும், கூச்சல்களும் கிளம்பியதெனினும் அத்தீர்மானம் பெருவாரியான வோட்டுகளால் நிறைவேற்றப் பட்டதால் காங்கிரசிலே மகாத்மாவுக்கிருந்த மதிப்பை அது ஊர்ஜிதம் செய்தது போலாயிற்று.

வங்கத்திலிருந்து வந்த டெலிகேட்டுகள், இத்தீர்மானம் விவாதிக்கப்பட்டபோது பெரிய ஆர்ப்பாட்டமும் கூச்சலும் போட்டு பண்டித ஜவஹர்லாலைப் பேசவிடாது செய்தனர். ஆனால் அவர்களது முயற்சி பலிக்கவில்லை. அவர்கள் தொண்டை கிழியக் கத்தினதும், காலொடியக் குதித்ததும்தான் மிச்சமாயிற்று.

## கதர் தொண்டர்கள் மகாநாடு

திரிபுரியில் இருந்த நாட்களில் எனது மனம் திருப்பூரையே தியானித்துக் கொண்டிருந்தது.

வர்தாவில் மகாத்மாவிடம் வாக்களித்தபடி கதரின் புதிய திட்டம் வெற்றிபெறச் செய்ய உதவும்படி தமிழ்நாடு சர்க்கா சங்கத் தொண்டர்களையும் பிரமுகர்களையும் ஒரு மகாநாடு கூட்டி அழைத்து ஆலோசிக்க வேண்டுமென்று என் மனம் துடித்துக் கொண்டிருந்தது.

திரிபுரியிலிருந்து மார்ச்சு மாதம் 20-ந்தேதி திருப்பூர் திரும்பியதும், அம்மகாநாட்டிற்கு அழைப்புகள் அனுப்பினேன்.

மார்ச்சு 31-ந் தேதி திருப்பூர் காந்தி நகரில் அம் மகாநாடு, காலை எட்டரை மணிக்கு ஆரம்பமாகி நள்ளிரவு ஒன்றரை மணிக்கு முடிவுற்றது.

மாகாணத்தின் எல்லா பாகத்தினின்றும் கதர்த் தொண்டர்களும், கதர் அபிமானிகளும், காங்கிரஸ் பிரமுகர்களும் பெருந்திரளாக வந்திருந்தனர். வர இயலாதவர்கள் ஆசிச் செய்திகள் அனுப்பியிருந்தனர்.

சென்னைப் பிரதமர் இராஜாஜி அவர்கள் தமது ஆசிச் செய்தியைத் தமது மந்திரிகளில் ஒருவரான எஸ். இராமநாதனிடம் கொடுத்தனுப்பியிருந்தார்.

மற்றும் சங்கர்லால் பாங்கர், தி. சு. அவினாசிலிங்கம், எம். பக்தவத்சலம், என். எம். ஆர். சுப்பராமன், எஸ். சத்யமூர்த்தி, டாக்டர். ப. சுப்பராயன், வி. சி. வெள்ளியங்கிரி கவுண்டர், கே. சந்தானம், வி. வி. கிரி, டாக்டர். டி. எஸ். எஸ். ராஜன், வி. ஐ. மூனிசாமி பிள்ளை, ஸ்ரீமதி ருக்மணி லட்சுமிபதி,

கே. பாஷியம், டி. பிரகாசம், தென்னட்டி விஸ்வநாதன், வி. சி. கோபால ரெட்டி, சீதாராம ரெட்டி, ராமுண்ணிமேனன், மாதவமேனன், ஒ. பி. இராமசாமி ரெட்டியார், குமாரசாமி ராஜா, சட்டநாதக் கரையாளர், நல்லதம்பி சர்க்கரை மன்றாடியார், மு. பெருமாள், வி. துரைசாமிபிள்ளை, எல். என். கோபால்சாமி, திருச்சி பொன்னம்பலக் கவுண்டர், இரத்தினவேல் தேவர், தஞ்சை நாடிமுத்துப் பிள்ளை, பூவராகன், குடந்தை கே. எம். ஹெரீப், சாத்தூர் எஸ். இராமசாமி நாயுடு, மதுரை எ. வைத்தியநாதய்யர், சர்தார் வேதரத்னம் பிள்ளை ஆகிய நண்பர்கள் வாழ்த்துச் செய்திகள் அனுப்பியிருந்தார்கள்.

வந்திருந்தவர்களை வரவேற்றுப் பேசுகையில் நான் குறிப்பிட்டதாவது :

உங்கள் எல்லோரையும் இங்கு மீண்டும் கூட்டுவிக்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது பற்றி நான் மிகவும் பெருமை கொள்கிறேன்.

உலகம் போற்றும் ஒப்பற்ற மகாத்மாவின் தலைமையின் கீழ் நாம் சேவை செய்துவருகிறோம். உலகத்திலேயே மிகவும் ஏழ்மைத் திசையிலுள்ள மக்களுக்கு நாம் தொண்டு செய்வதை நமது கடனாகக் கொண்டிருக்கிறோம்.

தன்னம்பிக்கை இழந்து, கவனிப்பாரற்றுத் திக்கற்ற நிலையிலிருக்கும் இந்நாட்டுக் கிராம மக்களுக்கு கைராட்டின இயக்கம் எவ்வளவு சிறந்த பலனை அளித்துள்ளதென்பதை நாம் கண்கூடாகக் கண்டு வருகிறோம்.

உண்டியற்றோருக்கு உணவும், ஆடையற்றோருக்கு உடையும், சோம்பலுற்றோருக்குத் தொழிலும், அவர்

கள் இருக்குமிடங்களிலே தேடிச்சென்று கொடுத்து, அம்மக்கள் மனதிலே மகிழ்வும், முகத்திலே களையும், உடலிலே நல்ல இரத்தமும் தரத்தக்க கதர் சேவையில் நாம் ஈடுபட்டுள்ளது, நாம் பெருமைப்பட வேண்டிய தல்லாது வேறென்ன?

கிராமம் கிராமமாகக் குடிசை குடிசையாகத் தரித்திர நாராயணங்கள் என்று கூறப்படும் ஏழை மக்களுக்கு நாம் தொழில் கொடுத்து, அவர்கள் அத் தொழிலைத் திறமையுடன் புரியவும், அவர்கள் வயிற்றுக்கும் ஆடைக்கும் இதர தேவைக்கும் போது மான கூலி பெறவும், அயராது, தளராது நாம் ஊழியம் செய்து வருவதில் நாம் பெருமைப்படுவது நியாயமே யாகும்.

எனினும் நாம் தன்னடக்கத்துடன் சென்ற காலத்தில் செய்துள்ள சேவைகளைச் சீர்தூக்கிப் பார்த்து, நமது குறைபாடுகளையும், கஷ்ட நஷ்டங்களையும் உணர்ந்து, எதிர்காலத்தில் மேலும் அதிகத் திறமையுடன் தொண்டு செய்யத் தக்க வழிவகைகளை ஆராய்ந்து அறியவே இன்று, இங்கு, நாம் கூடியிருக்கிறோம்.

சரியாகப் பன்னிரண்டு மாதங்களுக்கு முன் நாம் இங்கு கூடியபோது இருந்த நிலைமைக்கும், இன்றுள்ள நிலைமைக்கும் பெரிய வேறுபாடு ஏற்பட்டுள்ளது.

அன்றைய தினம் தேவைக்கு ஏற்ப உற்பத்தியைப் பெருக்கவும், நூற்புக் கருவிகளில் சீர்திருத்தம் செய்யவும், நூற்பவர்களுக்குத் திருந்திய முறைகளைக் கையாளப் போதனை நல்கவும், அவர்களது நூற்புத் திறனை அதிகரித்து அதன் மூலம் அவர்கள் வருவாயைப் பெருக்கவும், நூலில் நல்ல முறுக்கும் சமமும் ஏற்

படுத்தித் துணியை வலுவுள்ளதாகவும், நூலும் துணியும் உற்பத்தியாகும் கிராமங்களிலுள்ளவர்களைக் கதருடுத்தச் செய்யவும் நாம் திட்டங்கள் வகுத்தோம்.

அதன்படியே கடந்த ஒராண்டாக வேலையும் செய்தோம். நமது வேலை சிறந்த பலனை அளித்துள்ளதாகவே கருதுகிறோம். இன்னும் அதிகம் செய்ய முடியவில்லையே என்ற ஏக்கமும் ஆசையும் நமது மனத்தில் இருந்தபோதிலும், நாம் சாதித்துள்ள வேலைகள் நமக்கு திருப்தியும் பெருமையும் அளிக்கத் தக்கனவாய் இருக்கின்றன.

இதற்கெல்லாம் காரணம் உங்களுடைய தளராத உழைப்பும், உற்சாகமும், காங்கிரஸ் சர்க்காரின் ஆதரவும், பொதுமக்களுடைய ஆழ்ந்த பக்தியும் ஆகும். இதனிமித்தம் உங்களையும் நமக்கு ஆதரவு நல்கிய எல்லோரையும் வாழ்த்தி வணங்குகிறேன்.

## நாம் சாதித்தவைகள்

சென்ற ஆண்டில் மொத்தம் அறுபதினுயிரம் குடும்பங்களுக்குச் சேவை செய்திருக்கிறோம். வருட ஆரம்பத்தில் 37,000 மாக இருந்த நூற்போர்களின் எண்ணிக்கை வருட இறுதியில் 57,000 மாக உயர்ந்தது.

நெசவாளர் எண்ணிக்கையும் அதற்கேற்ப 2,200 லிருந்து 3,200 ஆக உயர்ந்துள்ளது.

இதர துணைத் தொழிலாளர்களான அச்சடிப்போர், சாயமிடுவோர், சலவை செய்வோர், ராட்டைகள் செய்வோர் முதலியோர் எண்ணிக்கை 175லிருந்து 305 ஆக உயர்ந்துள்ளது.

கதர்த் தொண்டர்களின் எண்ணிக்கையும் 228 லிருந்து 344 ஆக உயர்ந்தது.

அத்தாட்சி பெற்ற வியாபாரிகள் 49 லிருந்து 53 வர் ஆயினர்.

கதர் விற்பனைத் தொண்டர்களும் இருபதிலிருந்து அறுபதாக உயர்ந்தனர்.

1937ல் ஆறரை லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள கதர் உற்பத்தி செய்தோம். ஆனால் சென்றவாண்டில் அது *பதினாறரை லட்சமாக உயர்ந்தது.

1937ல் நூல் உற்பத்தியின் கிரயம் நாலேகால் லட்ச ரூபாய். சென்ற ஆண்டில் 9,77,000 ரூபாய்.

1938ல் நூற்போருக்கு 6,62,000 ரூபாயும்
,, நெய்வோருக்கு 3,98,000 ,,
,, இதரர்களுக்கு 76,300 ,,

ஆக மொத்தம் 11,36,000 கூலியாக வழங்கியிருக்கிறோம்.

கதர் சேவையில் ஈடுபட்டுள்ள 344 தொண்டர்களுக்கு கொடுக்கப்பட்ட சம்பளம் இவ்வாண்டில் 49,454 ரூபாய், அதாவது ஆள் ஒன்றுக்கு சராசரி சம்பளம் நாள் ஒன்றுக்கு எட்டு அணாவுக்கும் குறைவாகவே கொடுக்கப்பட்டுள்ளது.

இத்தொண்டர்களில் பெரும்பாலோர் ஆங்கிலம் படித்த பட்டதாரிகள் ஆவர். சிலர் சட்டக் கல்லூரிப் பட்டமும் பெற்றவர்கள். மற்றும் பலர் வாணிபத்திலும் வேறு பல தொழில்களிலும் தேர்ச்சி பெற்ற

---

* 1969ம் ஆண்டில் விலை நிலவரப்படி இது ஒரு கோடி ரூபாய்க்கும் அதிகமாகும். அன்று 4 முழம் வேட்டியின்விலை ஒரு ரூபாய். இன்று ஆறு ரூபாய்!

வர்கள். சத்தியம், ஒழுங்கு, கட்டுப்பாடுள்ள சிலர்கள், பலர் சிறை சென்ற தியாகிகள். இவர்கள் இக்குறைவான *ஊதியம் பெற்றுக்கொண்டு மன நிறைவோடு ஊழியம் செய்து வருவது, அவர்களுடைய தேச பக்திக்கும், தியாக உணர்வுக்கும் ஒரு எடுத்துக்காட்டாக விளங்குகின்றதல்லவா?

சென்ற ஆண்டில் 16½ லட்சம் ரூபாய் பெறுமான கதர் உற்பத்தியாயிற்றென்று தெரிவித்தேன் அல்லவா?

ஆனால் விற்பனை:

| | |
|---|---|
| நகரங்களில் | 7,00,000 |
| கிராமங்களில் | 1,61,000 |
| இதர மகாணங்களுக்கு | 2,82,000 |
| நூற்பவர் குடும்பங்களுக்கு | 1,51,000 |

ஆக மொத்தம் 12,94,000 விற்பனையாயிற்று.

வருட இறுதியில் நம்மிடம் ஐந்து லட்சம் பெறுமானமுள்ள கதரும், இரண்டு லட்சம் பெறுமானமுள்ள நூலும் தேங்கிக் கிடந்ததால், மேற்கொண்டு உற்பத்தியை குறையாமல் நடத்துவதற்குப் போதிய மூலதனம் நம்மிடம் இல்லை.

எனவே சென்றவாண்டின் ஆரம்பத்தில் உற்பத்தியை பெருக்க நாமிட்ட திட்டம் இன்றுள்ள நிதி நிலைமையில் உற்பத்தியைக் குறைப்பதற்குத் திட்டம் போட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுள்ளது.

---

*அன்றிருந்த விலைவாசிகளின் நிலவரப்படி ஒரு புருஷன் மனைவி கொண்ட குடும்பத்துக்கு மாதம் பதினைந்து ரூபாய் போதுமானது. நானும் எனது மனைவியும். மாதம் பதினைந்து ரூபாயில் திவ்யமாகக் காலட்சேபம் செய்து வந்தோம். 1969-ல் மாதம் 150 ரூபாய் செலவு செய்தாலும் முப்பதாண்டுகட்கு முன்னிருந்த சௌகரியத்தைப் பெற முடியாது.

## உற்பத்தியைக் குறைப்பது எப்படி?

நான் எற்கனவே குறிப்பிட்டவாறு நம்மிடம் பதிவாகியுள்ள நூற்போர் எண்ணிக்கை 57,000 ஆகும்.

இவர்கள் அனைவரும் சேர்ந்து ஒட்டுமொத்தமாகப் பெற்றுள்ள கூலி 6,62,000. இதைப் பகிர்ந்து பார்த்தால் ஆளொன்றுக்கு நாளொன்றுக்கு அரையணுத்தான் தேருகிறது.

இக்கணக்குப்படி பார்த்தால் நாம் நபர் ஒன்றுக்கு மூன்றணுக் கூலி கொடுத்ததாகச் சொல்வது பொய்யாகத் தோன்றுமல்லவா?

ஆனால் உண்மையில் நாம் மூன்றணுக் கூலிதான் கொடுத்திருக்கிறோம்.

அது எப்படி?

நம்மிடம் பதிவாகியுள்ள அத்தனை பேர்களும் ஒழுங்காக நூற்பவர்கள் அல்ல. பலர் எப்போதாவது காடுகரைகளில் வேலையில்லாதபோது நூற்பவர்கள். மற்றும் பலர் தங்கள் ஓய்வு நேரங்களில் நூற்பவர்கள். வேறுபலர் நாடோறும் நூல் நூற்பதையே தங்கள் தொழிலாகக் கொண்டு முழு நேரம் நூற்பவர்கள்.

இவர்களிற் கடைசியாகச் சொன்னவர்கள் நாளொன்றுக்கு 8 மணி நேர வேலைக்கும் பெறும் கூலிதான் மூன்றணு ஆகும்.

நூற்பதையே தொழிலாகக் கொண்டுள்ளவர்களைப் பிரித்து நாம் அவர்களிடமிருந்து நூல் வாங்குவது எனத் திட்டமிடும் பட்சத்தில், நம் கைவசமுள்ள மூலதனத்தைக் கொண்டு சமாளிக்க முடியும்.

மற்றவர்களை, அதாவது நூற்பதையே ஜீவனமாகக் கொண்டிராதவர்களை நாம் அணுகி, அவர்கள்

நூற்கும் நூலுக்கு நாம் தற்போது கொடுத்து வரும் பருத்திக்கும் பணத்திற்கும் பதிலாக, அவர்களுக்குத் தேவையான கதராடைகளையும் நூற்பதற்கு வேண்டிய பஞ்சையும் வழங்குவதென்ற திட்டம் செயல்படச் செய்தால், நமது பணமுடை சுலபமாவதுடன் சுயதேவைப் பூர்த்தித் திட்டத்தை அமல் நடத்தி வெற்றி பெறச் செய்தவர்களாவோம்.

## நூற்புக் கூலியில் உயர்வு

நமது பிரத்தியட்சக் கூலி விஷயங்கள் இவ்வாறிருக்க மகாத்மா காந்தியடிகள் நூற்புக் கூலியை மேலும் உயர்த்துமாறு திட்டமிட்டு நமக்குக் கட்டளையும் அனுப்பியிருக்கிருர்.

நாளொன்றுக்கு குறைந்த பட்சம் எட்டணுக் கூலி என்ற லட்சியத்தை நாம் படிப்படியாக எய்தவேண்டுமென்பது அவரது ஆவல்.

நூற்பவர்கள் கேளாமலே அவர்களது கூலியை நாம் உயர்த்த வேண்டும் என்ற சீலத்தை மகாத்மா நமக்கு போதிக்கின்ருர்.

தற்போது நாம் நாளொன்றுக்கு மூன்றணு கூலியென கணக்கிட்டிருப்பது பஞ்சு கொட்டிப் பட்டை போட்டு நூற்கும் நூற்களாகும்,

நூல் நூற்பதற்கு மட்டும் மூன்றணுக் கூலி பெறத் தக்கவாறும், பஞ்சுடைப்பதற்கும் பட்டைபோடுவதற்கும் நூலின் தரம் போல் ராத்தலொன்றுக்கு 0-1-6 முதல் 0-8-0 வரையில் தனிக் கூலி பெறத் தக்கவாறும் கணக்கிட்டு, அதற்கேற்ப நூல் விலையை, நாம் உடனே உயர்த்தியாக வேண்டும்,

இதைப்பற்றி நாம் இன்று ஆலோசித்து ஒரு முடிவுக்கு வரவேண்டியது அத்யாவசியமாகும்.

இவ்வாறு கூலி மேலும் உயர்த்தப்தப்படுவதால் இன்னும் அதிகமான பேர்கள் நூற்புத் தொழிலை மேற்கொள்ள முன் வருவார்கள். இதன் பலனைப் பெரும்பாலும் ஏழை மக்களே அடையத் தக்க வழிவகைகளை நாம் கண்டுபிடிக்கவேண்டும்.

சென்ற ஆண்டில் நாம் 32 நூற்புப் போட்டிகள் நடத்தினோம். 231 பேர்கள் போட்டிகளில் கலந்து கொண்டனர். இவர்கட்கு 592 ரூபாய் பரிசாக வழங்கப்பட்டது.

## மகாநாட்டில் பேசிய பிரமுகர்கள்

எனது வரவேற்பு உரைக்குப் பின்னர் சென்னை சர்க்காரின் விளம்பர மந்திரி எஸ். இராமநாதன், முத்தூர் எம். பி. குப்புசாமிக் கவுண்டர், நாகசமுத்திரம் ஆர். எம். குமாரசாமி, கோவை நகரசபைத் தலைவர் சுப்ரி எனும் கே. சுப்ரமண்யம், திருப்பூர் தி. சு. கந்தசாமி செட்டியார், கே. ஆர். ஈஸ்வரமூர்த்திக் கவுண்டர், இராஜபாளயம் இ. பூ. அழகர்சாமிராஜா ஆகியவர்கள் பேசிய பின்பு, மகாநாடு இடைவேளை போஜனத்திற்காக கலைந்தது.

பிற்பகலில் இடுவம்பாளையம் என். மாரிமுத்து, மதுரை அ. சுப்பராயலு, சென்னை அ. இராமசாமி அய்யர், மாயவரம் வெங்கட்ராமன், குடந்தை எஸ். இராஜகோபால், காரைக்குடி வி. சேதுராமன், தூத்துக்குடி தி. இராமசாமிப் பிள்ளை, கோடந்தூர் நல்லசாமி கவுண்டர், ஆகியோர் தங்கள் அநுபவங்களையும் ஆலோசனைகளையும் எடுத்துக் கூறினார்கள்.

இரவு போஜனத்துக்குப் பின் பொதுவான விவாதத்தில் எல்லோரும் கலந்துகொண்டனர்.

மன்னார்குடி கல்யாணசுந்திரம் வாழிய செந்தமிழ் பாட இரவு ஒன்றரை மணிக்கு மகாநாடு இனிது முடிவுற்றது.

இம் மகாநாட்டின் போது சென்னையில் சட்டசபைக் கூட்டமும், திருச்சியில் ஹரிஜன சேவா சங்க கூட்டமும், பொள்ளாச்சியில் கோவை மாவட்டக் காங்கிரஸ் கமிட்டிக் கூட்டமும் நடைபெற்றதால், நான் எதிர்பார்த்த பலபேர் கலந்துகொள்ள முடியாமற் போயிற்று. அப்படியிருந்தும் மாகாணத்தின் பல ஜில்லாக்களிலிருந்தும் 150 பேர்கள் வந்திருந்தனர்.

## புதிய சகாப்தம்

கதர்த் தொண்டர்கள் மகாநாட்டிற்குப் பிறகு புத்தம் புதிய உற்சாகத்துடன் தொண்டு புரிய ஆரம்பித்தோம்.

ஏப்ரல் மாதம் 15ந் தேதி உதகமண்டலத்தில் ஒரு கதர்ப் பொருட்காட்சி ஆரம்பித்தோம். இரண்டு மாதங்கள் பெரிய விளம்பரத்தோடும், பிரசார பலத்தோடும் பொருட்காட்சி நடைபெற்றது. அதன் பின்னர் அப் பொருட்காட்சி அதே இடத்தில் நிரந்தர வஸ்திராலயமாக ஸ்தாபிக்கப்பட்டு இன்றும் சர்வோதய சங்கத்தின் கிளையாகச் செயல்பட்டு வருகிறது.

பொருட்காட்சி சமயத்தில் சங்கர்லால் பாங்கர் உதகையில் மிஸ். அநுசூயாபென் என்ற அம்மையாருடன் தங்கியிருந்தார். பொருட்காட்சி முடிந்த பின் திருப்பூருக்கு வந்து எனதுடன் ஒரே ஒருநாள் தங்கியிருந்த சமயம் பல நூற்புக் கிளைகளுக்குச் சென்று வந்தோம்.

## பாங்கரின் சீற்றம்

தேங்கிக் கிடக்கும் கதரை விற்பதற்குக் கண் காட்சிகள், மகாநாடுகள், பிரசுரங்கள், வெளியீடுகள் போன்ற முயற்சிகளுடன் கதர்க் கூபன்கள் அச்சிட்டு விநியோகம் செய்வதென முடிவு செய்தேன்.

1939ம் ஆண்டு தேசீய வாரத்தில் கதர்க்கூப்பன் விநியோகம் செய்யும் நோக்கத்துடன் பிப்ரவரி மாதம் 18ந் தேதி அநுமதி கோரி நான் எழுதிய கடிதத்துக்கு செப்டம்பர் மாதம் மூன்றும் தேதிதான் அநுமதி கிடைத்தது.

இதைப்பற்றி அக்டோபரில் வெளியான "குடி நூல்" பத்திரிகையில் நான் இவ்வாறு எழுதினேன்:

"...ஸர்க்கார் காரியாலயங்கள்தான் தாமதத்துக் குப் பேர்போனவை. ஆனால் "சர்க்கா" காரியாலயம் இவ்விஷயத்தில் சர்க்காரைத் தோற்கடித்துவிட்டது.

சர்க்கா சங்க அலுவல்களை உடனுக்குடன் கவனிக்க வல்ல, முழுநேரக் காரியதரிசி இல்லாததே இதற்குக் காரணம்.

தற்போது அகில இந்தியக் காரியதரிசியாய் செயல்படும் ஸ்ரீ சங்கர்லால் பாங்கர் மிகவும் நல்லவர். ஆனால் அவர் சர்க்கா சங்கத்துக்கு மட்டும் காரியதரிசி அல்ல. அவர் கவனத்தையும் நேரத்தையும் கொள்ளை கொள்ளும் ஆமதாபாத் மில் தொழிலாளர் சங்கம் இருக்கிறது.

பாங்கர் மகாத்மா காந்தியை தெய்வம்போல் ஆராதிப்பவர். ஆதலால் அவருடைய தொடர்பு நீங்காதிருக்கும் பொருட்டே அவர் சர்க்கா சங்கத்தின் காரியதரிசியாய் இருந்துவருகிறார் என்று எண்ண வேண்டியிருக்கிறது.

சர்க்கா சங்கத்துக்கு அவரால் முழுநேரம் செலவிட முடிவதில்லை. ஒரு உதாரணம் சொல்கிறோம்.

கடந்த மே, ஜூன் ஆகிய இரண்டு மாதங்களும் அவர் உதகையில் தங்கியிருந்தார். தமிழ்நாட்டுக் கிளையின் தலைமைக் காரியாலயமாகிய திருப்பூர் உதகைக்கு வெகு சமீபத்தில் இருந்தும் அங்கு போக வேண்டுமென்ற எண்ணம் அவருக்கு உதயமாகவே இல்லை.

பல கடிதங்கள் எழுதி அழைத்த பின்னர் திருப்பூர் வந்தவர் ஒரே ஒருநாள் சில மணி நேரமே தங்கியிருந்து போய்விட்டார்.''

இக்கட்டுரை பாங்கரின் கண்களிற் பட்டது. மகாத்மாவின் காதுகளுக்கும் எட்டிற்று. இவ்வாறு பத்திரிகையில் எழுதிப் பலரும் பார்க்கும்வண்ணம் நான் செய்த காரியம் பாங்கருக்கு சீற்றத்தை உண்டாக்கியது.

எனினும் அவர் நல்லவர். ஆதலால் எனது கட்டுரை அவரது மனசாட்சியை உறுத்தவாரம்பித்தது. அதன் பலனாக அவர் சர்க்கா சங்கத்தை விட்டு விலகும் முடிவுக்கு வரலானார்.

### கதர்க் கூடன்கள்

சென்னை "Sunday Times", ஹிந்துஸ்தான் ஆகிய பத்திரிகைகளின் ஆசிரியராயிருந்த திரு. சஞ்சீவி காமத் எனது அரிய நண்பர். அக்காலத்தில் இராஜாஜிக்கு அடுத்தபடியாக அவர் என்னிடம் அதிக வாஞ்சையுடன் ஆதரவு காட்டியவர். எனது "குடிநூல்" மாசிகையும் அவரது காரியாலயத்தில்தான் அச்சிடப்பட்டது.

கதர் கூபன்களை அவர் வெகு நேர்த்தியாகவும் துரிதமாகவும் அச்சிட்டு உதவினர்.

சென்னையில் கதர் கூபன்களைப் பெற்றதும் அவற்றை ஒரு காரில் ஏற்றிக்கொண்டு, தமிழ்நாடு முழுவதும் மூவாயிரம் மைல் தூரம் முப்பத்திரண்டு நாட்கள் ஓயாது அயராது பிரயாணம் செய்து 1,06,896 ரூபாய்க்கு விற்றேன்.

முன்னதாகப் பணம் கொடுத்துவிட்டுத் தங்கட்குத் தேவையானபோது எங்கள் வஸ்திராலயங்கள் ஏதாவதொன்றில் கதர் வாங்கிக்கொள்ளச் செய்வதே கதர் கூபன் வெளியீட்டின் நோக்கமாகும்.

முப்பத்திரண்டே நாட்களில் ஒரு லட்சத்து ஆறாயிரம் ரூபாயை யாதொரு வட்டியும் வாசியும் கழிவும் இல்லாமல் சர்க்கா சங்க வேலைக்கு முன் பணமாகப் பெற்றதில் பெருமகிழ்ச்சி அடைந்தேன்.

இத்துடன் அவ்வாண்டு தீபாவளி விற்பனையும் சேர்ந்து சுமார் மூன்று லட்சம் ரூபாய் பெறுமானமுள்ள கதர் எங்கள் கையை விட்டகன்றது.

## மகாத்மாவின் கட்டுரை

மகாத்மா காந்தியும் "தேங்கிக் கிடக்கும் கதர்" என்று தலைப்பிட்டுத் தமது "ஹரிஜன்" பத்திரிகையில் இவ்வாறு எழுதினர்.

"அகில பாரத சர்க்கா சங்கம் நூற்போர் கூலியை வலுவில் திடீரென்று வியக்கத்தக்க விதமாய் உயர்த்தியதால் ஏராளமாக நூல் உற்பத்தியாகி விட்டது. இவ்வாறு உற்பத்தியான கதரை எல்லா இடங்களிலும் சமாளிப்பது பெருங்கஷ்டமாகி விட்டது.

தமிழ்நாட்டில் மட்டும் உற்பத்தி ஐந்தரை லட்சத்திலிருந்து பதினைந்து லட்சமாக உயர்ந்தது. ஆனால் விற்பனை ஒன்பது லட்சத்திலிருந்து பதினொரு லட்சமாகத்தான் உயர்ந்தது.

ஐக்கிய மாகாணத்தில் உண்டாகியிருக்கும் கஷ்டங்களைப்பற்றி நான் முன்னரே கூறியிருக்கிறேன். இவை இரண்டும் இங்கே குறிப்பிடத்தக்கவை. பொதுவாக எல்லா இடங்களிலும் இதே கஷ்டங்கள்தானிருக்கின்றன.

கதர் நிபுணர்கள் அதன் நிலைமையை சாஸ்திரீக முறையில் ஆராய்ந்து, அதற்குகந்த உபாயங்களைத் தேட வேண்டுமென்று நான் முன்னரே கூறியிருக்கிறேன். இதர ஆராய்ச்சி வேலையைப்போல் இந்த ஆராய்ச்சி வேலைக்கும் சில காலம் பிடிக்கும். அதற்கிடையில் தேங்கிக் கிடக்கும் இருப்புக் கதரை வெளியேற்ற வேண்டும். தேசபக்தியுள்ள பொதுமக்கள் அனைவரும் இக் கைங்கரியத்தில் உதவி செய்ய வேண்டும்.''

## பிறந்த நாள் கொண்டாட்டம்

மேற்கண்ட கட்டுரையில் மகாத்மா தமது பிறந்த நாள் போன்றதே மற்றெல்லா நாட்களும். அவற்றில் நன்னாளுமில்லை. தீநாளுமில்லை.

"எனது பிறந்த நாள் கொண்டாட்டத்தை நான் விரும்பவில்லை, பிறந்த நாள் போன்றதே மற்றெல்லா நாட்களும், அவற்றில் நன்னாளுமில்லை. தீநாளுமில்லை.

எனது பெற்றோர்கள் அவர்கள் குழந்தைகட்குப் பிறந்த நாள் கொண்டாடியதாக எனக்கு ஞாபகமில்லை.

லண்டன் பரிட்சைக்காக எனது பிறந்த தின அத்தாட்சி எடுக்க நேரிட்டதால், நான் பிறந்த தினம் என் ஞாபகத்தில் இருக்கிறது.

ஆனால் கதரியக்கம் தோன்றுமுன்பு நான் எனது பிறந்த தினத்தை நினைத்ததேயில்லை.

கதர் அபிமானிகள் கதர் விற்பனையைத் துரிதப் படுத்த எனது பிறந்த தினத்தை ஒரு சமய சந்தர்ப்பமாக உபயோகித்துக் கொள்கிறார்கள். அவர்கள் அவ்வாறு அதைக் கொள்ளை கொள்வதில் எனக்குக் கவலையில்லை.

குஜராத்தியர் பேசும் பாஷையை அநுசரித்து "ரெண்டியா ஜெயந்தி' என்று அதை அழைப்பது ஒருவாறு பொருந்துமென்று எண்ணுகிறேன். ஏனெனில் அவர்கள்தான் இக்கொண்டாட்டத்தை முதன் முதல் ஆரம்பித்தார்கள்.

கதர் அபிமானிகள் வருகிற அக்டோபர் இரண்டாந் தேதி போதிய அளவு விற்பனைக்குக் கதர் தயாராக வைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

வரப் போகும் கொண்டாட்டத்தின் போது அமோகமாகக் கதர் விற்பனை செய்யலாமென்ற நம்பிக்கையுடன் தமிழ்நாடும், பிற மகாணங்களும் கதர் உண்டிகள் வெளியிட்டுள்ளனர்...

கிராமாந்தரங்களில் வசிக்கும் ஏழைச் சகோதர சகோதரிகளால் செய்யப்படும் ஆடைகளால் நமது மானத்தைப் போர்த்துக் கொள்வதைவிட நமக்கு வேறு என்ன பெருமை இருக்கிறது?

'ஹரிஜன்' *16-9-1939.*

## மகாத்மாவின் புகழ்மாலை

நூற்புக் கூலி உயர்த்தியதின் விளைவாக ஏற்பட்டுள்ள நடைமுறைச் சிரமங்களைப் பற்றிய ஓர் அறிகைகையும், அவ்வறிக்கையுடன் ஒரு கடிதமும் மகாத்மா காந்திக்கு அனுப்பியிருந்தேன்.

அக்கடிதத்தைப் பெற்றதும் மகாத்மா காந்தியிடமிருந்து 31-8-39ல் எனக்கு கீழ்க்கண்டவாறு பதில் பதில் வந்தது.

சேவாகிராமம்,
வார்தா.

எனதன்புள்ள அய்யாமுத்து,

உங்கள் அறிக்கையும், கடிதமும் இரண்டையும் படித்தேன். அவ்விரண்டின் முக்கிய பாகங்கள் எனது விமர்சனத்துடன் பிரசுரிக்கப்படுகிறது.

நீங்கள் ஒழுங்காக ஒரு சஞ்சிகை வெளியிட்டுவருவதைக் காண்கிறேன். அது நன்கு அபிமானிக்கப்படுமென்றும், அதன்மூலம் கதர் விற்பனை பெருகுமென்றும் நம்புகிறேன்.

அதில் மிகைப்பட எதுவும் புகுந்துவிடாமல் பார்த்துக் கொள்வதுடன், அது கதர் சம்பந்தப்பட்ட எல்லா விஷயங்களிலும் ஒரு வழிகாட்டியாக விளங்குமாறும் நீங்கள் செய்வீர்களென்று நம்புகிறேன்.

உங்கள்
பாபு

## "அயர்வறியாத காரியதரிசி"

(''ஹரிஜன்'' கட்டுரை)

"இப்பத்திரிகையின் வேறோரிடத்தில் பிரசுரிக்கப் பட்டுள்ள, தமிழ்நாட்டில் ஜுன் 30 முடிய நடைபெற்ற கதர் வேலையின் சாராம்சம், மிக்க அக்கரையுடன் படிக்கத் தக்கதாகும்.

அகில பாரத சர்க்கா சங்கத்தின் தமிழ்நாட்டுக் கிளையின் அயர்வறியாத காரியதரிசி ஸ்ரீ அய்யாமுத்துவிடமிருந்து ஒரு தனிக்கடிதமும் இவ்வறிக்கையைத் தொடர்ந்து வந்தது. அக்கடிதம் போதனை மிகுந்ததாக இருப்பதால் அதன் சில பாகங்களைக் கீழே தருகிறேன்,

## புத்துயிரும் புதுவேகமும்

அய்யாமுத்து எழுதுகிறார்:

முதன்முதலாக நூற்பவர்களுக்குக் குறைந்தபட்சமான ஒரு கூலி நிர்ணயித்து மூன்றாண்டுகள் கடந்துவிட்டன. இம்மாதத் துவக்கத்தில் கூலி உயர்வு விஷயத்தில் இரண்டாம்படி ஏறியிருக்கிறோம். நூற்பவர் கூலி திட்டமாக உயர்வடைந்து வந்திருக்கிறது. அது நாம் விரும்பும் அளவு எட்டாதிருக்கலாம்.

நூற்பவரின் பஞ்சு கொட்டும் திறனையும், நூற்கும் திறனையும், உயர்ந்த அபாரமான ஆரம்பவேலைகள் செய்யப்பட்டுள்ளன. இயந்திரத்தால் அரைத்த பஞ்சை அறவேநீக்கி, நூற்பதனைத்துக்கும் (கொட்டை நீக்காத) பருத்தியே உபயோகித்து வரப்படுகிறது,

சீர்திருத்திய கருவிகள் ஏராளமாக விநியோகிக்கப் பட்டுள்ளன. விசைச் சக்கரம் ஒன்று பூட்டியதன்மூலம்,

புராதனமானக் கிராம ராட்டை புத்துயிரும் புது வேகமும் பெற்று விளங்குகிறது. இவற்ருல் ஏற்பட்டுள்ள மாறுதல்கள் அனைத்தையும் சற்றே சிந்தித்துப் பார்க்கும் சமயம் வந்துவிட்டது.

கதர் கிராமவாசியின் குடும்பப் பொருளாதாரத் திட்டத்தின் ஒரு அம்சமென்றே தாங்கள் கருதிவருகிறீர்கள். அச்சிறிய ராட்டும், சூரிய கதிரும், நமது முன்னேர்கள் அவனுக்குத் தேடிக் கொடுத்த சொத்தாகும். ஒவ்வொரு குடும்பமும், தமது ஆடைகளுக்கு உடனுக்குடன் வேண்டிய நூலைத் தாமே நூற்றுக் கொள்ள வேண்டுமென்பதே நமது முன்னேர்களின் எண்ணமாகும்.

ஒவ்வொருவனும் உடுத்தும் ஆடைக்கும், அவன் குடும்பத்தாரின் தேவைக்கும், மீறினுல் ஒவ்வொரு கிராமத்தவர்களின் மொத்தத் தேவைக்கும் உற்பத்தி செய்யப்படுவதையே நமது முன்னேர்கள் கருத்தில் கொண்டிருந்தார்கள். எப்போதாவது நெசவுகாரன் சில வஸ்திரங்களைச் சந்தைக்கும் கொண்டுபோய் விற்றிருக்கலாம். ஆனுல் தூரந்தொலைவில் உள்ளவர்களின் தேவையைப் பூர்த்தி செய்யவல்ல வியாபார அம்சத்தை நமது முன்னேர்கள் கருத்தில் கொள்ளவில்லை.

## நூற்பவள், அன்றும் இன்றும்

*1935* வரை, அதாவது நூற்பவளின் கூலியை முதலாவதாக உயர்த்தும்வரை, சர்க்கா சங்கம் நூற்பவளின் நலத்தைவிடக் கதர் உடுத்துவோரின் நலத்தையே அதிகமாகக் கவனித்து வந்ததெனலாம்.

கதரை அதிகம்பேர்கள் உடுத்தச் செய்யும் நோக்கத்துடன், சர்க்கா சங்கம், கதரின் விலையைக் கூடுமான

வரை குறைப்பதையே தனது குறியாகக் கொண்டிருந்தது இதனுல் தனிப்பட்ட வியாபாரிகள் கதரியக்கத்தினுள் நுழைந்து, கதர் உடுத்துவோரை வஞ்சிக்க முடியாமலிருந்தது. ஆதலால் அற்ப சொற்பமானவர்களே கதர் வியாபாரத்தில் நுழைந்தார்கள். அவர்கள் நினைத்தபடி கொள்ளையடிகக முடியாதது கண்டு, அதிலும் சிலர் விலகிக்கொண்டார்கள்.

1935 முடிய நூற்பவளுக்கு, ஒரு ராத்தல் நூலுக்கு நான்கணுக்களே சராசரி கூலியாகக் கிடைத்து வந்தது. நயமாக நூற்பவளுக்கு ராத்தலுக்கு ஆறணு கிடைத்தது. அந்தக் காலத்தில் நூற்பவள் கூலியில் ஒரு செப்புக்காசைப் பிடித்துவிட்டால், அவள் கண்ணீர் வடிக்கத் தொடங்கி விடுவாள்,

அதே மாதிரி, அவள் எதிர்பார்த்ததைவிட ஓரிரண்டு காசுகள் அதிகமாய்க் கொடுத்துவிட்டால், அவள் முகம் மலர்ந்துவிடும்.

இம்மாதிரியாக அவள் மனதை மாற்ற ஒருகாசால் முடிந்தது. ஒரு காசு அவளுக்கு அவ்வளவு பெரிதாய் இருந்தது!

### "அவள் கனவிலும் எண்ணவில்லை"

1936ல் அவள் கூலி உயர்த்தப்பட்டது, திடீரென அவள் கூலி இவ்வாறு உயர்த்தப்படுமென அவள் கனவு கூட கண்டிருக்கமாட்டாள். 1935ல் 4 அணுவாக இருந்து 1938ல் 0-12-3 அணுவாக ஏறிவிட்டது. இம்மாதிரி கூலி ஏறியதால் இயற்கையாக அவள் நல்ல நூல் நூற்றிருக்க வேண்டும். அவள் நூலில் சரியான சமனும், முறுக்கும் அமைந்திருக்க வேண்டும். ஆனுல் அவ்வாறு முன்னேற்றம் ஏற்படவில்லை.

நூற்பவளுடைய வாழ்க்கைத்தரம் உயரவேண்டுமெனக் கருதி நாம் அவள் கூலியை கேட்காமலேயே நாமாக உயர்த்திக் கொடுத்தோம். ஆனல் அவள் தனக்கு அளவுக்கு மீறிப் பணம் தரப்படுவதாகவே எண்ணுகிருள்.

அவளுடைய நூல் மட்டமானதென்று கூறி கூலி குறைத்துக் கொடுக்கப்பட்டால், அவள் அதற்காகத் துளிக்கூட வருந்துவதாகக் காணேம்.

நமது சோதனைக்குச் சரியாக இருக்கும் நூலுக்குத் தான் சரியான விலை தருகிருேம்.

ராத்தலுக்குப் பத்தணு கூலி கிடைத்தாலும் அது குறைவானதல்லவென்றே அவள் கருதுகிருள். எட்டணுக் கொடுத்தாலும் அவள் விசனப்படுவதில்லை. ஆறணுக் கொடுத்தாலும் அவள் அதைப்பற்றிச் சிந்திப்பதே கிடையாது. அத்தொகை தனதுவேலைக்கு அரைமடங்கு அதிகமாகக் கொடுக்கப்பட்டதாகவே அவள் கருதுகிருள்.

## அத்தாட்சியில்லாத வியாபாரி

இந்தக் கடைசி விலையான ஆறணுவைக் கொடுத்து அவளுடைய மட்டமான நூலை வாங்குவதற்கு ஒரு மனிதன் எப்போதும் காத்துக்கொண்டே இருக்கிருன்.

அவன் எந்த நூல் வந்தாலும், லபக்கென்று வாங்கித் தனது பைக்குள் போட்டுக்கொள்கிருன்.

ஆறணுக் கூலிக்கு நூல் கிடைத்தால் அவனுக்குப் பரம சந்தோஷம். அவன்தான் அத்தாட்சியில்லாத வியாபாரி.

அவன் நாம் கொடுக்கும் கூலியில் பாதி கொடுத்து விட்டு, நாம் விற்கும் விலையில் முக்கால் விலைக்கு விற்பவன்.

1936லிருந்து நமது அக்கரையெல்லாம் நூற்பவ ளிடமே திரும்பியிருக்கிறது. கதர் உடுத்துபவர்களிட மிருந்து எவ்வளவு பறிக்கமுடியுமோ, அவ்வளவையும் பறித்து நூற்பவனுக்குக் கொடுக்க வேண்டுமென்பதே நமது ஆவல்.

இதனால் நூற்பவனையும், கதர் உடுத்துபவனையும் ஏககாலத்தில் சுரண்டுவதற்கு அத்தாட்சியில்லாத வியாபாரிக்கு அதிகமான சௌகரியம் ஏற்பட்டுவிட்டது. நாளுக்கு நாள் அவர்கள் தொகையும் பெருகிய வண்ணமாய் இருக்கிறது.

இதன் விளைவு என்னவென்றால் கூலி உயர்வுக்குத் தக்கவாறு நூலும் துணியும் தரத்தில் உயரவில்லை என்பதேயாம்.

## விற்பனையும் உயரவில்லை

நூற்புக் கூலியில் ஏற்பட்ட உயர்வால் நூற்பவரின் தொகையும் அதிகரித்துவிட்டது. 1935ஆம் ஆண்டு இறுதிவரை நூல் நூற்பதில் அதிக ஆதாயம் இல்லாதிருந்ததால் அநேகர் அதனைத் தங்கள் முழுநேர வேலையாகக் கொள்ளவில்லை.

ஆனால் நூற்புக் கூலி உயர்ந்த பின்னர் அதையே தமது தொழிலாக அநேகர் ஏற்றுக்கொண்டனர். 1925ல் ஆறு லட்சமாய் இருந்த நமது உற்பத்தி 1938ல் பதினாறு லட்சமாக உயர்ந்துவிட்டது.

நம்மிடமுள்ள சொற்ப மூலதனத்தைக் கொண்டு, நூற்கப்படும் எல்லா நூலையும் நம்மால் வாங்க முடிவதில்லை.

உற்பத்தி பெருகியுள்ள அளவுக்குத் தகுந்தபடி விற்பனையும் உயரவில்லை. இதனால் நாம் அநேகரிட மிருந்து நூல் வாங்க முடிவதில்லை,

அத்தாட்சியில்லா வியாபாரியின் தரகன், கிடைக்கும் நூல் அத்தனையும் எளிய விலைக்கு வாங்கி, அத்துணியை நம்மிலும் மலிவான விலைக்கு விற்கிறான். அத்துணியின் ஊடும் பாவும் கதர்தானா என்று சொல்வதற்கும் இல்லை.

## நமது சித்தாந்தம்

உற்பத்தி செய்பவனே இயற்கையில் உபயோகிப்பவன் என்ற சித்தாந்தத்தின் மீதே நாம் 1936ம் ஆண்டு முதல் வேலைசெய்து வருகிறோம். அவன் உடுத்தியது போக மிகுதியானதே விற்பனைக்கு அனுப்பிட வேண்டுமென்பது நமது கொள்கை. இதை முன்னிட்டு நூற்பவனின் ஒரு பகுதி நூலை நிறுத்திக்கொண்டு மறு பகுதிக்கே விலைகொடுத்து வருகிறோம். இத்தகைய நிலுவை மொத்த உற்பத்தியில் 100க்கு 15 விகிதத்திலிருந்து, 1938ல் 31 விகிதமாக உயர்வடைந்துள்ளது. அத்தாட்சியில்லாத வியாபாரியின் தலையீடு இல்லாவிட்டால் இந்நிலுவையை இன்னும் அதிகரித்திருக்க முடியும். இவ்விஷயத்தில் அவனது சேஷ்டைகள் மிகக் கொடுமையானதாகவிருக்கிறது. நூற்பவரின் சொந்த உபயோகத்துக்காக நாம் கொடுக்கும் புடவைகளையும் இதர ஜவுளிகளையும் அவன் ஈன விலைக்கு வாங்கி நம்முடன் போட்டியிடுகிறான்.

## சுயேச்சையான தொழில்

உற்பத்தி ஸ்தலத்திலேயே கதரை உபயோகித்துவிட ஏற்பாடு செய்தால் இத்தொல்லைகள் ஒருவாறு நீங்கலாகும். கிராமாந்தரங்களில் உற்பத்தி செய்து பட்டினங்களில் விற்கப்படும் பண்டமாகக் கதரைச் செய்யக்கூடாது.

தன் தேவைக்காகவும், தனது குடும்பத்தாரின் தேவைக்காகவும் தான் நூற்பதாக நூற்பவள் கருதுவதில்லை. அதை யாருக்கோ விலைக்கு விற்பதற்காகவே நூற்பதாக அவள் எண்ணுகிருள். இதனுல்தான் நூற்கும் நூல் எத்தகையதாய் இருக்க வேண்டுமென்பதில் அவளுக்குச் சிறிதும் அக்கரையில்லை. நமது தேவைக்கு ஏற்பத் தரமான நூல் நூற்கும்படி செய்யவும் நம்மால் முடிவதில்லை.

விற்பனைக்காக மாத்திரம் கதர் உற்பத்தி செய்வதாயிருந்தால், அக்கதர் வாங்கியுடுத்துபவரின் தேவையை அநுசரித்ததாக இருக்க வேண்டும். ஒவ்வொரு தரத்திலும் எவ்வளவு தேவை என்பதைக் கண்டறிந்து. உற்பத்தி செய்யவேண்டும் கட்டுப்பாடான ஒரு இயந்திரசாலையில் இதைச் செய்ய முடிகிறது. ஒரு காம்பவுண்டுக்குள் நூற்பு வேலை முழுவதும் இயந்திர சக்தியால் நடைபெறுவதால் அவர்கள் விரும்பிய பருமனில் நூல் உற்பத்தியாகிறது.

கதர்நூல் உறபத்தி விஷயம் அப்படியல்ல நூற்பவள் சுயேச்சையானவள். அவளது நூற்புக்கருவிகளும் அவளுக்கே சொந்தமானவை, அவள் தன் குடிசையிலிருந்தபடியே சுதந்திரத்தோடு தொழில் புரிகிருள். அவள் தனது தேவைக்காக மட்டும் நூற்பதாகவிருந்தால், தனக்கு வேண்டிய தரத்திலும் அளவிலும் நூற்றுக்கொள்வாள். அவளது தேவை போக மீதியிருப்தால் அதை ஒரு மத்திய ஸ்தாபனத்திடம் ஒன்று சேர்த்து விற்பனைக்கு ஏற்பாடு செய்யலாம். இக்காரியத்தை கிராமப் பஞ்சாயத்தாரிடம் ஒப்படைக்கலாம். இந்நூலின் விலையை நிர்ணயிக்கும்போது நூற்பவளுக்கு ஒரு திட்டவட்டமான கூலி கிடைக்கும்படி செய்துவிடலாம்.

## நூற்புக் கூலி உயர்த்தும் யோசனை

சென்ற ஜூன் மாதம் கதர்த் தொண்டர்கள் கூட்டம் திருப்பூரில் நடைபெற்றது. அக்கூட்டத்திற்கு ஸ்ரீ சங்கர்லால் பாங்கரும் வந்திருந்தார். நூற்புக் கூலி உயர்த்தும் விஷயம் இக்கூட்டத்தில் ஆலோசிக்கப் பட்டது. தமிழ்நாடெங்குமிருந்து வந்திருந்த 93 தொண்டர்களில் இருவரே கூலி உயர்வை ஆதரித் தனர்.

நூற்பவனுக்குச் சிறிது காசு அதிகமாகக் கொடுக் கக் கூடாதென்ற எண்ணத்தின்மீது மற்றவர்கள் ஆட்சேபிக்கவில்லை. கூலி உயர்வால் நாம் விரும்பிய பலன்கள் கிட்டாது என்ற காரணத்தை முன்னிட்டே அவாகள் ஆட்சேபித்தார்கள். கூலிஉயர்வால் உற்பத்தி மேம்பாடு அடையவில்லை. அதுமட்டுமல்ல, நூறப வனையும்கதருடுத்துவோரையும் ஏககாலத்தில் வஞ்சித்து கொள்ளை லாபமடைய அத்தாட்சியில்லாத வியாபா ரிக்கு அதிக வசதி ஏற்பட்டுவிட்டது. இவ்வியாபாரி யின் கேவலமான நடவடிக்கைகளைத் தடுகக நம்மால் முடியவில்லை. எங்கள் நிலைமைமய இதனினும் செவ் வையாக ஸ்ரீ பாங்கரிடம் விளக்கிக் கூற எங்களால் முடியவில்லை. இக்கடிதத்தின் மூலம் விளக்கிவிட் டோமா என்பதிலும் எங்களுக்குச் சந்தேகமதான். எங்கள் நிலையிலிருந்து இப்பிரச்சினையைச் சீர்தூக்கி எங்கள் கஷ்டங்களை உணருமாறு தங்களை வேண்டு கிறோம்...

### மகாத்மாவின் விமர்சனம்
#### "கதர்த்திட்டம்தான் மிகப் பெரியது"

மேற்கண்ட எனது கடிதத்தை "ஹரிஜன்" பத் திரிகையில் பிரசுரித்து மகாத்மா எழுதியுள்ளதாவது:

காரியதரிசி உற்சாகமுள்ள அவசரக்காரர். எந்தப் பெரிய முயற்சியிலும் இக்குணங்கள் ஓரளவுக்குத்தான் பயன்படும்.

நான் வகுத்த திட்டங்களில் கதர்த் திட்டந்தான் மிகப் பெரிது. ஏனெனில் இதன்மூலம் சாதிசமய வேறுபாடின்றி இலட்சோப லட்சம் பேர்கள் பயன் அடைந்து வருகின்றனர்.

உற்சாகமிக்க அவசரக்காரர் எத்தனை பேர் வந்தாலும் அத்தனை பேர்களையும் கதரியக்கம் ஏற்றுக் கொள்ளும். ஆனால் அவர்கள் வாய்மையும், ஒழுக்கமும், தூய்மையும் நிறைந்து தன்னலமற்றவர்களாக இருக்கவேண்டும். சாந்தமாகவும். பொறுமையுடனும், அலுப்பற்ற ஆராய்ச்சி செய்தால்தான், இறுதியில் கோரிய பலன்பெற முடியுமென்பதை அவர்கள் ஞாபகத்தில் வைத்து வேலை செய்துவர வேண்டும்.

## ஸ்ரீ அய்யாமுத்துவின் கஷ்டங்கள்

ஸ்ரீ அய்யாமுத்துவின் கஷ்டங்களை இனிநான் பரிசிலனை செய்கிறேன்.

1. அத்தாட்சியில்லாத வியாபாரிகள் ஒரு சாபம். அவர்கள் நூல் நூற்கும் சகோதரிகளின் விரோதிகள். அவர்கள் முன்னேற்றத்தின் பகைவர்கள். இறுதியில் தங்களுக்கே தீங்கைத் தேடிக்கொள்கிறார்கள்.

நூற்பவர்கள் கொண்டுவரும் எல்லா நூலுக்கும் விலை கொடுத்து வாங்கிவிடுவதே இவ்வியாபாரிகளைப் போக்க நேரான பாதையாகும்,

இது ஒரு கணித சாஸ்திரம். கூலி உயர்வை நிர்ணயிக்கும் பூரண சுதந்திரம் ஸ்ரீ அய்யாமுத்துவுக்கு இருக்கிறது. சில தேர்ந்தெடுக்கப்பட்டவர்களுக்கு இவர்

எட்டணுக் கூலியும் கொடுக்கலாம். அவர்கள் இவருடைய ஆராய்ச்சி வேலைக்கும் பயன்படுவார்கள். அவர்களுடைய எண்ணிக்கையைக் கட்டுப்படுத்த வேண்டும்.

மற்ற நூல்களையெல்லாம் நூற்பவர்கள் சம்மதிக்கும் விலைக்கு இவர் வாங்கிவிட வேண்டும். இப்படிச் செய்வாராளுல், அத்தாட்சியில்லாத வியாபாரிகள் நூலைப் பொறுத்தவரை தாமாகவே ஒழிந்து போவார்கள்.

இவர் லட்சியமாகக் கொண்டுள்ள உயர்வான கூலியை எல்லா நூற்பவர்களுக்கும் அடையச் செய்ய வேண்டும் என்ற எண்ணத்தால் தூண்டப்பட்டு, இவர் ஒவ்வொரு காரியமும் செய்யாவிட்டால், இத்தகைய பரீட்சை அபாயகரமானது என்பதை நானறிவேன். இந்த நிபந்தனையை மனதில் வைத்துக்கொண்டு, இவர் நூற்பவர்கள் எல்லோரையும் தம்வசப்படுத்தி, அத்தாட்சி இல்லாத வியாபாரிகளை ஒழித்து நூற்பவர்கள் அதிக சம்பாத்தியம் அடையும் மார்க்கத்தை அவர்களுக்குப் போதிக்க வேண்டும்.

அப்போது நூற்பவள், தனக்குச் சகாயம் செய்பவர் யாரென்பதை உணர்ந்து நல்ல மாணுக்கன் ஆவாள். அவளது தேவைக்சாகக் கொடுக்கப்படும் ஆடைகள் கள்ளத்தனமாய் விற்கப்படுவதும் நின்றுவிடும்.

2. ஒவ்வொரு கிராமமும் தனது தேவைக்கு வேண்டிய பருத்தியை விளைவித்து, நூல் நூற்று, துணி தயாரித்துக் கொள்ளும் அளவில் சுதரியக்கம் பரவலாக நடைபெற வேண்டுமென்பதை நான் முழுதும் ஆமோதிக்கிறேன்.

தேவைபோக மீதியிருந்தால் அது தேவையான இடத்துக்கு அனுப்பப்பட வேண்டும். உதாரணமாகப்

பருத்தி விளையாத பிரதேசங்கட்கும், பட்டினங்கட்கும் அனுப்பப்படலாம்.

ஒவ்வொரு கிளையும் ஒரு கிராமத்தைத் தேர்ந்தெடுத்து, சிறந்த ஊழியரைக் கொண்டு காரியாதிகள் நடத்தினால்தான் இந்த லட்சியம் நிறைவேறும்.

மற்ற லட்சியங்களோடு இந்த லட்சியத்தையும் நிறைவேற்றும் எண்ணத்தோடு நான் சிவ கிராமத்தில் குடியேறினேன். மூன்று வருஷங்களுக்கு முன்னால் நான் இங்கு வரும்போது இருந்த நிலையிலே, நான் இந்த லட்சியத்தின் வெகு தொலைவில்தான் இருக்கிறேன் என்பதை நான் ஒப்புக் கொள்ளவேண்டும்.

என் முன்னேற்றத்தில் தாமதம் ஏற்படுவதின் காரணங்களை நான் கூறவேண்டுவதில்லை, இதனின்று தொண்டர்கள் எச்சரிக்கையும், உற்சாகமும் கொள்வார்களாக.

ஒரு கிராமத்துள் நுழைந்த மாத்திரத்தில் அவர்கள் அற்புதங்களை எதிர்பார்க்கக் கூடாது. தாங்கள் முழு முயற்சியுடன் உழைத்தும் நல்ல முடிவுகள் விளையாவிட்டால் அவர்கள் சோர்வடையத் தேவையில்லை. நான் இக் கிராமத்தில் குடியேறி மூன்றுண்டுகளான பின்னரும் என்னால் எவ்வித முன்னேற்றமும் காண முடியவில்லையென்பதை அவர்கள் மனதில் கொள்ள வேண்டும்.

3. காங்கிரஸ் அரசாங்கம் அற்புதங்கள் விளைவிக்க வேண்டுமென்று தொண்டர்கள் எதிர்பார்த்தால் அவர்கள் சோம்பேறிகளாகிவிடுவார்கள்! காங்கிரஸ் அரசாங்கத்துக்கு ஒரு வரையறை உண்டு. சட்டங்கள் மூலமாகச் சில சகாயங்கள் செய்யவும் கூடும். அத்தாட்சி இல்லாதவர்களால் கதர் விற்கப்படுவது தடை

செய்யப்படவேண்டும். டாட்டா கம்பெனிக்கு உதவியதுபோலக் கதருக்கு மானியம் கொடுத்து உதவலாம் மில் துணிக்கு வரி விதிப்பதன் மூலம் இம்மானியத் தொகையைத் தேடலாம். அத்தாட்சியில்லாமல் கதர் விற்பவர்களிடம் வசூலிக்கப்படும் அபராதத் தொகைகளில் கோர்ட்டு செலவுகள் நீங்கலாக மீதியை அகில பாரத சர்க்கா சங்கத்துக்குக் கொடுக்கலாம்.

4. விற்பனை விஷயம் சந்தேகமில்லாமல் பெரும் பிரச்னையாகும். முன்பொரு கட்டுரையில் இதைப் பற்றி விவாதித்திருக்கிறேன். காங்கிரஸ்காரர்கள் தங்கள் தேவைக்கு வேண்டிய சகல ஆடைகளையும் கதர் வஸ்திராலயங்களிலிருந்தே வாங்கவேண்டுமென்பதில் சந்தேகமில்லை. சர்க்காரும், காங்கிரஸ்காரர்களும், காங்கிரஸ்வாதிகள் அனைவரும் இதனைச் சிந்தித்துக் கதருக்கு உதவ வேண்டும். அதன் மூலம் அவர்கள் சொற்ப செலவில் வேலையற்றோர்க்கு வேலை தேடிக் கொடுத்தவர்களாகிறார்கள். ("ஹரிஜன்" 28-8-39)

## பணம் எங்கே?

மேற்கண்ட விமர்சனத்தைப் படித்தபின் மகாத்மாவுக்கு நான் கீழ்க்கண்ட கடிதம் எழுதினேன்.

திருப்பூர்,
6-9-39.

அன்புள்ள பாபு,

மேன்மை மிக்க, தங்கள் கடிதத்துக்கும், விமர்சனத்துக்கும் நான் நன்றி கூறுகிறேன்.

சென்ற ஆண்டில் தங்கள் உத்தேசப்படியே நான் நூற்பவர்கள் கொண்டு வந்த நூல் அனைத்தையும் வாங்கி, அத்தாட்சி

யில்லாத வியாபாரிகட்கு நூல் கிடைக்காத படி செய்தேன்.

என் கைவசமிருந்த மூலதனமனைத்தும், மூன்றே மாதங்களில் நூலாக முடங்கி விட்டது.

அதன்பின் நூல் வாங்க என்னிடம் ஏது பணம்?

அதே நிலைமைதான் இன்றும் நீடிக்கிறது. எல்லா நூலையும் வாங்கும்படி தாங்கள் மிக எளிதாகச் சொல்லிவிட்டீர்கள். ஆனால் பணத்துக்கு எங்கே போவது?

தாங்கள் மிக்க அன்புடன் ஒரு சுற்றுப் பிரயாணத்தை மேற்கொள்வீர்களானால், மூல தனத்தைப் பெருக்க முடியும். தமிழ் நாட்டில் கதர் வேலைக்குக் குறைந்த பட்சம் இருபது லட்சம் ரூபாய் மேற்கொண்டு தேவைப் படுகிறது. இல்லையேல் அத்தாட்சியில்லாத வியாபாரிகளைச் சமாளிக்க முடியாது.

கதர்க் கூபன்கள் இன்னும் சில நாட்களில் தயாராகிவிடும். பொதுமக்கள் இக் கூபன் களைத் தாராளமாக வாங்கி, அதன் மூலம் கதர் விற்பனை அதிகரிக்க உதவுமாறு தாங்கள் ஒரு வேண்டுகோள் விடுமாறு கோருகிறேன்.

தங்கள் பணிவார்ந்த
சி. எ. அய்யாமுத்து

# 12

## எனது மோட்டார் கார்

1939-ம் ஆண்டு, அக்டோபர் திங்கள் 9, 10 தேதிகளில் வர்தா சிவகிராமத்திலிருந்த மகாத்மா காந்தியின் ஆசிரமத்தில் அவருடைய எழுபத்தோராவது பிறந்தநினக்கொண்டாட்டமும், அகில பாரத சர்க்கா சங்கக் கவுன்சில் கூட்டமும், அகில பாரத காங்கிரஸ் கமிட்டிக் கூட்டமும் நடைபெற்றன.

அவற்றில் கலந்து கொள்வதற்காக நான் வர்தா சென்றிருந்தேன்.

ஓமந்தூர் பி. இராமசாமி ரெட்டியார், பெருமாள் சாமி ரெட்டியார், திண்டுக்கல் அப்துல் சத்தார் சாகிபு, வேலூர் உபயதுல்லா, குடந்தை கே. எம். ஷெரீப், குடந்தை இராமச்சந்திரன், எல். சட்டநாதக் கரையாளர் முதலானோர் என்னுடன் வர்தாவில் ஒரே அறையில் தங்கியிருந்தனர்.

மரியாதைக்காக மகாத்மா காந்தியை அச்சமயம் சென்று பார்த்தேன். அப்போது பேச்சினிடையே: "என்ன அய்யாமுத்து, நீங்கள் மோட்டார்கார் வைத்திருக்கிறீர்களாமே" எனக் கேட்டார்.

"ஆமாம், தங்களுக்கு அவ்விஷயம் ஏற்கனவே தெரிந்ததாயிற்றே" என்றேன் நான்.

"ஆம். ஆம். நீங்கள் மோட்டார் கார் வைத்துக் கொண்டிருப்பதை நான் விரும்பவில்லை. நீங்கள் தரித்திர நாராயணங்களிடையே தொண்டு புரிந்து வருவதால், சாத்யமான வரைக்கும் அப்பஞ்சை மக்களைப் போன்றே நீங்களும் வாழ்க்கை நடத்திப் பழகவேண்டும். நீங்கள் மோட்டார் காரில் செல்வதால் அவர்களுக்கும் உங்களுக்குமிடையே ஒரு விரிவை உண்டாக்குகிறீர்கள். உங்களைக் காணும் நூல் நூற்பவள் "யாரோ படே சாஹிப்" என்று எண்ணிக் கொண்டு உங்களை நெருங்க அஞ்சுவாள். ஆதலால் நீங்கள் ஊர் சென்றதும் உங்கள் மோட்டார் காரை விற்றுவிட்டுக் காளைமாட்டு வண்டியில் செல்லுமாறு யோசனை கூறுகிறேன்" என்றார் மகாத்மா.

"முன்பு சாதாரணக் கதர்த் தொண்டனாகப் பணியாற்றியபோது கிராமங்களுக்குக் கால் நடையாகவே சென்றதுண்டு. தோள்மீது கதர் மூட்டைகளைச் சுமந்துசென்று விற்றிருக்கிறேன். பின்னர் கதர் உற்பத்தி சாலை நிருவாகியாகப் பணியாற்றியபோது மாட்டு வண்டிகளிலும், சைக்கிள்களிலும் சென்றிருக்கிறேன். இப்பொழுது தமிழ்நாடு முழுதும் நடைபெறும் கதர்வேலைகளுக்குப் பொறுப்பாளியாகப் பணியாற்றி வருகிறேன். குமரியை அடுத்த கொட்டாரத்திலிருந்து சென்னைப் பட்டினம் வரை எனது நிர்வாக எல்லையுள்ளது. நூறு கிளைகளுக்குமேல் நான் பராமரித்து வருகிறேன். 400 தொண்டர்கள் என்னுடன் சேவை புரிகின்றனர். ஆண்டொன்றுக்கு முப்பது லட்சம் ரூபாய்க்கு உற்பத்தியும் விற்பனையும் நடைபெறுகிறது. எல்லாவற்றையும் நான் அடிக்கடி சென்று பார்வையிடாவிட்டால் அவற்றில் ஏற்படும் கஷ்ட நஷ்டங்களுக்கு நான்தானே ஜவாப்தாரியாக

வேண்டும். இக்காலத்தில் மோட்டார் கார் தாங்கள் எண்ணுகிறபடி நூதனப் பொருள் அல்ல. கிராமங்களில் அது சர்வசாதாரணமாகக் கருதப்படும் பொருளாகி விட்டது. ஆகவே எனது சின்னஞ் சிறிய காரைக் கண்டு யாரும் மிரளுவார்களென்று தாங்கள் சொல்வதை என்னால் ஒப்புக்கொள்ள முடியவில்லை" என்றேன்.

அவர்: "நீங்கள் கூறும் சமாதானம் எனக்குத் திருப்தி அளிக்கவில்லை. எல்லா இடங்களுக்கும் நீங்களே சென்று கவனிக்க வேண்டிய அவசியமில்லை. உங்கள் பிரதிநிதியாக நீங்கள் பல பேர்களை அனுப்பி அக் காரியாதிகளை கவனிக்கச் சொல்லலாம் அல்லவா?" என்றார்.

"மாகாணம் முழுவதற்கும் பொறுப்பாளியாய் இருப்பதால் அப்படிச் சொல்ல முடியாது. மாகாணத்தை ஜில்லாவாரியாகப் பிரித்து ஒவ்வொரு ஜில்லாவிற்கும் ஒருவர் பொறுப்பேற்கச் செய்தால் அது நடக்கும். அதை அகிலபாரத சர்க்கா சங்கக் கவுன்சில் பார்த்துச் சொல்லலாம். பொறுப்பு என்னுடையதாக இருக்கும் வரையில் நான் அதைத் தட்டிக் கழிக்க முடியாது. எனது காதுகளின் மீது எனக்கு அவ்வளவு நம்பிக்கை கிடையாது. எதற்கும் என் கண்களைத் தான் நம்புகிறேன். எனவே எல்லாவற்றையும் நானே நேரில் பார்த்தாக வேண்டும்.

"கடந்த 1929 முதல் 1934 முடிய ஆறு வருடங்களில் தமிழ்நாடு சர்க்கா சங்கத்தில் பதிமூன்று லட்சம் ரூபாய் நஷ்டம் ஏற்பட்டுள்ளது. நான் நிருவாகப் பொறுபேற்ற கடந்த ஐந்து வருடங்களில் இரண்டே கால் லட்சம் ரூபாய் நிகர இலாபம் காட்ட முடிந்தது.

எனது நேரிடைக் கண்காணிப்பில்தான் நஷ்டம் இலாபமாக மாறியுள்ளது.

"நகரப் புறங்களில் படாடோபமான அலங்காரங் களுடன் விற்பனை நிலையங்கள் நிறுவி நடத்தி வருகி றோம். கண்கவர் பொருட்காட்சிகள் நடத்திவருகி றோம். மகத்தான விளம்பரங்கள் செய்கிறோம். மகா நாடுகளில் தலைமை தாங்கிச் சொற்பொழிவுகள நிகழ்த்துகிறோம். இவையனைத்தும் எங்களை உயர்த்திக் கொள்ளும் பொருட்டன்று. அந்த ஏழை நூற்பவர் களின் மேம்பாட்டிற்காகவே இந்த ஜோடனைகளெல் லாம் அவசியமாகவும் தவிர்க்க முடியாததாகவும் திகழ்கின்றன. இவற்றுடன் ஒப்பிடுகையில் எனது மோட்டார் கார் மிகச் சிறிய அம்சம். நாள் ஒன்றுக்கு நான்கு பேர்கள் சேர்ந்து நூறு மைல்கள் பிரயாணம் செய்ய நான்கே ரூபாய்கள்தான் செலவாகின்றன. அதனால் இலாபமே அன்றிக் காலமும் பணமும் விரய மாவதில்லை" என்று விளக்கினேன்.

மகாத்மா நான் பேசுகையில் இடைமறித்து யாதொன்றும் சொல்லாமல் மிகக் கவனமுடனும், பொறுமையுடனும் கேட்டுவிட்டு சொன்னதாவது :—

"உங்கள் தர்க்கவாதம் Logic and Reasoning நன்றாகத்தானிருக்கிறது. ஆனால் எளியவாழ்வை மேற்கொண்டவர்களால்தான் ஏழ்மையில் மூழ்கியுள்ள வர்களுக்குச் சிறப்பான சேவை செய்ய முடியும் என்ப தில் நான் மிக்க உறுதிபூண்டிருக்கிறேன் என்பது உங்களுக்குத் தெரியும். ஆதலால் இலாப நஷ்டங் களைக் கணக்கிடாமல், நீங்கள் திருப்பூர் சென்றதும் உங்கள் காரை விற்றுவிடுவதுதான் நல்லதென நான் கருதுகிறேன்" என்று முடிவாகக் கூறினார்.

அதற்குமேல் அப்பெரியாரிடம் தர்க்கமாட நான் விரும்பவில்லை. விரும்பினாலும் உரையாடும் சக்தி யற்றுப் போனேன்.

நான் வர்தா வரும்போது எனது காரை சென்னையில் விட்டிருந்தேன். சென்னை சேர்ந்ததும் எனது டிரைவரைக் கூப்பிட்டு "முத்துச்சாமி! இன்றிரவு நான் திருப்பூருக்கு ரயிலேறுவதற்குள் எனது காரை யாருக்காவது, எந்த விலைக்காவது விற்றுவிட வேண்டும். யூனியன் மோட்டார் கம்பெனிக்குச் சென்று மானேஜரிடம் சொல்லி விற்றுவிட்டு வா" என்று கூறினேன்.

முத்துச்சாமி அன்றுமாலை ஆயிரம் ரூபாயோடு திரும்பினான். இருவரும் திருப்பூருக்கு ரயிலேறினோம்

# 13

# 1939

1939ம் ஆண்டு தமிழ்நாட்டின் கதர் இயக்கத்திற்கு ஒரு பெருஞ்சோதனையாக முடிந்தது.

வருட ஆரம்பத்தில் கைவசம் ஏழு லட்சம் ரூபாய்க்கும் அதிகமான நூலும் ஜவுளியும் தேங்கிக் கிடந்தன.

ஆங்காங்குள்ள கிளைகளிலும், பாங்குகளிலும் சேர்ந்து கைவசமிருந்து ரொக்கம் ரூபாய் 68,000.

நாடெங்கும் தலைகால் தெரியாத பஞ்சம் நிலவிக் கொண்டிருந்தது கோவை ஜில்லாவெங்கும் வறட்சி நிலைமை மிகக் கொடுமையாக இருந்தது. பல்லடம், தாராபுரம், உடுமலையாகிய மூன்று தாலூக்காக்களில் குடி தண்ணீரும் கிடையாமல் மக்கள் சோர்வுற்றனர். போதுமான தீவனமின்றிக் கால்நடைகள் எலும்புந் தோலுமாக மாறின. ஆழக் கிணறுகள் எல்லாம் ஒரு சொட்டு நீருமின்றி வரண்டன. தென்னை மரங்கள் காய்ந்து தீய்ந்து மொட்டையாகக் காட்சியளித்தன. வேம்பும், பனையும் மாட்டுத் தீனிக்காக மொட்டையடிக்கப்பட்டன.

எலும்புந் தோலுமாய் ஏழை மக்கள் சாரை சாரையாய்த் தெருவெங்கும் அலைந்து திரிந்தனர்.

அன்றிருந்த காங்கிரஸ் சர்க்கார் அவசர அவசர மாகப் பஞ்ச நிவாரண முகாம்களை ஏற்படுத்தினர். இலட்சக்கணக்கான மக்களுக்கு கல் உடைக்கும் வேலை தரப்பட்டது. நாளொன்றுக்கு அப்பஞ்சை மக்கள் பெற்ற கூலி ஒன்றேகாலணு!

பஞ்சப்பிரதேசமாகிய வெள்ளகோவில் என்னு மிடத்தில் கிருஷ்ணப்ப செட்டியார் என்பவர் பிரதி தினமும் ஆயிரம் பேர்களுக்குக் கஞ்சி வார்த்து வந்தார். மற்றும் பல தனவந்தர்ச்ள் ஆங்காங்கு கஞ்சித் தொட்டிகள் வைத்து நடத்தினர்.

இத் தர்ம கைங்கர்யங்கள் நடைபெற்றிராவிடில் பஞ்சப் பிரதேசமெங்கும் கொலைகளும், கொள்ளைகளும் நடைபெற்றிருக்கும்.

பசிக்குதெனப் பலபேர்கள்
பார்மிசையே பரதவிக்கப்
புசிப்பவர்க்கு நெஞ்சமெலாம்
பொங்கெரியிற் செய்ததுவோ
மசத்தனமோ வன்கண்மை மாருத
வரட்டுநெஞ்சம் படைத்தவரார், படைத்தவரா

என்று எங்கள் நெஞ்சம் கதறிற்று.

கைவசமிருந்த சொற்ப முதலைக் கொண்டு எவ் வளவு அதிகமான பேர்களுக்கு நிவாரணம் அளிக்க முடியுமோ, அவ்வளவும் சிரமம் பாராமல் கிராமங்கள் தோறும் கொடுத்துவந்தோம்.

எனினும் உற்பத்தியை முந்திய வருடத்தின் அள வுக்குத் தொடர்ந்து நடத்தமுடியாமல் திணறினேம்.

ஜனவரி மாதத்தில் 1,22,000 ரூபாய்க்கு நடை பெற்ற உற்பத்தி ஜூன் மாதத்தில் 86,000 ரூபாயாக இறங்கியது.

விற்பனையை அதிகரிக்கப் பகிரதப்பிரயத்தனங்கள் செய்தோம். சென்னை மந்திரிகள் பிரதி தினமும் நாள் ஒருவராக எங்கள் சென்னை கிளையில் விற்பனையாளர் களாகக் காட்சி தந்தனர். அவ்வாரத்திய அக்கிளையில் ரூ. 51,209க்கு கதர் விற்பனையாயிற்று.

மகாத்மாவின் திட்டப்படி இப் பஞ்ச நிலைமை யிலும் நூற்போர் கூலியை ஆகஸ்டு மாதத்தில் மீண்டும் உயர்த்தினோம்.

## பட்டகாலிலே படும்

என்பதற்கிணங்க அவ்வாண்டின் இறுதியில் சென்னையில் நடைபெற்ற பொருட்காட்சி தீக்கிரையா யிற்று.

எங்கள் ஸ்டாலில் இருந்த 36,000 ரூபாய் மதிப் புள்ள கதர் சாம்பலாயிற்று. எவ்வளவு பெரிய அடி! எனினும் நாங்கள் மனந்தளரவில்லை. எனது சம்பளத் தில் நாற்பது சதம் நிரந்தரமாகக் குறைத்துக் கொண் டேன். எனது உதாரணத்தைப் பின்பற்றி எனது சக ஊழியர்கள் பலர் தங்கள் சம்பளங்களில் ஒரு பகுதியை நன்கொடையாக அளித்தார்கள். பொது ஜனங்களிடமிருந்தும் சிறிது தொகை வசூலிக்கப் பட்டது. இவை எல்லாமாகச் சேர்ந்து ரூ. 4634-9-6 வசூலாயிற்று.

## கைமணைகள் உபயோகம்

1921ல் கதரியக்கம் ஆரம்பிக்கப்பட்டதிலிருந்து கைராட்டைகளில் நூற்பதற்கு ஜின்னிங் பாக்டரிகளில் அரைத்த பஞ்சே உபயோகப்பட்டு வந்தது. இதை நான் மாற்றுவதென முடிவு செய்தேன்.

பரண்களிலே தூங்கிக்கிடந்த கைமணைகளைக் கீழே இறக்கி—பழுது பார்த்துச் செப்பனிட்டுச் சீர் படுத்தி, அவைகளைக்கொண்டே பருத்தியிலிருந்து கொட்டை நீக்கச் செய்தேன். பழைய மணை இல்லாதவர்களுக்குப் புதிய மணைகள் செய்து அரை விலைக்கு வழங்கினேன். இவ்வாறாக 1939ம் ஆண்டில் நூற்கப்பட்ட 6,30,904 ராத்தல் எடையுள்ள பஞ்சில் 10,282 ராத்தல் நீங்கலாக மீதி அனைத்தும் கைமணைப் பஞ்சு. கடந்த நான்கு வருடங்களில் எங்கள் தொண்டர்கள் எடுத்துக்கொண்ட தீவிர முயற்சியால் இதைச் சாதிக்க முடிந்தது.

கைமணைகளில் பருத்தியை அரைப்பதன் மூலம் நூற்பவர்களுக்கு அதிகமான வேலைவாய்ப்புகள் கிடைப்பதுடன், பருத்தியிலுள்ள தூசுகள் துப்புகள் இலைச் சருகுகள், செம்பாடுகள், இவற்றை அரைக்கு முன் நீக்கிச் சுத்தம் செய்ய முடிகிறது. அவ்வப்போது தேவைக்கேற்ப அரைபடும் பஞ்சு கட்டிகள்சேரா திருப்பதால், அதைப் பட்டைப்பஞ்சாக மாற்றுவதும் எளிதாகிறது. அதனால் நூற்கப்படும் நூல் தூசு துப்புகளின்றி சமமான முறுக்கும் வலுவும் உடையதாகிறது. இந்நூலால் நெசவு செய்யப்படும் கதர் நீடித்து உழைக்கிறது. மற்றும் காடுகரையுள்ள நூற்பவர்கள் இக்கொட்டைகளை விதைப்பதற்கும், கறவை மாடுகளுக்கு உணவாகவும் உபயோகிக்க அநுகூலமாகிறது.

## சுயதேவைப் பூர்த்தி

மகாத்மா காந்தியின் சுயதேவைக்காக நூல் நூற்கும் திட்டத்தை இவ்வாண்டில் எங்களால் நன்கு செயல்படுத்த முடிந்தது. 1,78,614 ரூபாய் பெறுமானமுள்ள 35,978 வண்ணப்புடவைகள் நூற்பவர்களு

டைய சொந்தமான நூலால் இவ்வாண்டில் தயாரித்து விநியோகம் செய்தோம். இதுவன்றி 37,052 ரூபாய் மதிப்புள்ள வேஷ்டிகள், சட்டைகள், போர்வைகள், துவாலைகள் நூற்பவர் தங்கள் சொந்த நூலைக் கொடுத்துப் பண்டமாற்ருகப் பெற்றுக் கொண் டார்கள்.

இவ்வாண்டில் மொத்தம் உற்பத்தியான 90,72,353 சிட்டங்களில் (ஒரு சிட்டம் என்பது 840 கெஜம் அள வுள்ள நூல்) 28,82,769 சிட்டங்கள் நூற்பவரின் சுய தேவைக்காகச் சேமித்து வைக்கப்பட்டது. இது மொத்த உற்பத்தியில் 32 சதவிகிதமும், ரொக்க கொள்முதல் 47 சதவிகிதமும் ஆகிறது. இந்த அள வுக்குக் கதரியக்கம் கிராம மக்களிடையே வேரூன்றி வருவதாகத் தயக்கமின்றி கூறமுடியும்.

## உற்பத்தியான கதரும் கொடுக்கப்பட்ட கூலியும்

இவ்வாண்டு சர்க்கா சங்கக் கிளைகளில் உற்பத்தி யான கதரின் கிரயம் ரூ. 10,45,935. அத்தாட்சி பெற்ற ஸ்தாபனங்கள் உற்பத்தி செய்தது ரூ. 1,39,052.

உற்பத்தியான கதரின் மொத்த அளவு 3,85,110 சதுர கெஜம்.

,, ,, ,, எடை 5,94,888 ராத்தல்.

இவ்வாண்டு கொடுக்கப்பட்ட் நெசவுக் கூலி ரூ. 3,04,050-0-0. சர்க்கா சங்கத்தில் 1883 நெசவாளரும் அத்தாட்சிபெற்ற ஸ்தாபனங்களில் 210 பேர்களுமாக 2093 பேர்கள் வேலை செய்தனர்.

இவர்கள் பெற்ற கூலி வாரமொன்றுக்கு நபர் ஒன்றுக்கு சராசரி ரூ. 6-2-3.

வாராவாரம் நெசவாளர்கள் சிறுசேமிப்பு நிதிக்கு அளித்த தொகை இவ்வாண்டில் மொத்தம் சராசரி தலைக்கு ரூ. 13-6-0 ஆகும்.

இவ்வாண்டில் விற்பனையான கதரின் மதிப்பு ரூ. 14,56,730-0-0.

## நிர்வாகமும்—மேற்பார்வையும்

சர்க்கா சங்க கிளைகள் மூலம் இவ்வாண்டில் நடைபெற்ற வேலைகள் கீழ்க்கண்டவாறு:

| | | |
|---|---|---|
| நூல் உற்பத்தி | ரூ. | 5,53,729-0-0 |
| கதர் | ,, | 10,45,935:0-0 |
| அச்சு, சாய வேலைகள் | ,, | 76,637-0-0 |
| மொத்தவிற்பனை | ,, | 1,52,135-0-0 |
| சில்லறை விற்பனை | ,, | 7,58,846-0-0 |
| இதர மாகாணங்களுக்கு அனுப்பிய கதர் | | 3,51,067-0-0 |
| ஆக மொத்த லேவாதேவி. | ரூ. | 29,38,349-0-0 |

இவையன்றி ரூ. 49,476க்குப் பருத்தி கொள்முதல் செய்யப்பட்டது.

ரூ. 14814க்கு நூற்புக் கருவிகள் தயாரிக்கப்பட்டன.

இத்யாதி காரியங்கள் நடத்திவருவதற்கு 27 இடங்களில் நூல் உற்பத்திக் கிளைகளும், 20 இடங்களில் கதர் உற்பத்திக் கிளைகளும், இவைகளுக்கு 23 உப கிளைகளும்

ஒரு அச்சு சாயச்சாலை, இராட்டைக் கருவிகள் செய்யும் தொழிற்சாலை, தொண்டர்களுக்குப் பயிற்சி முகாம், சரக்குகள் சேமித்து வைக்கும் மத்திய ஸ்டோர், 20 கதர் விற்பனை வஸ்திராலயங்களும் நிர்வகிக்கப்பட்டு வருகின்றன.

இவற்றில் வேலை செய்யும் தொண்டர்கள் 365.

இவர்கள் இவ்வாண்டில் பெற்ற ஊதியம் ரூ. 53,803-2-8. இது மொத்த லேவாதேவியின் மீது (Turn over) 1·8 சதமாகிறது.

இக்காரியாதிகளை மேற்பார்வை செய்யும் 11 மேற்பார்வையாளர்களும், காரியதரிசி எனப்படும் தலைமைத் தொண்டராகிய எனக்கும் இவ்வாண்டில் ரூ. 7983-15-0 சம்பளமாகக் கொடுக்கப்பட்டது. இது மொத்த லேவாதேவியின்மீது 0·3 சதம் ஆகிறது.

உலகத்தில் இவ்வளவு குறைந்த செலவில் நிர்வகிக்கப்படும் ஸ்தாபனம் மகாத்மா காந்தியால் நிறுவப்பட்டுள்ள அகிலபாரத சங்கத்தைத் தவிர வேறொன்றிராதெனத் தைரியமாகக் கூறலாம் அல்லவா?

நாளொன்றுக்கு சராசரி ரூ 0-1-7 வருமானமுள்ள (per capita income) நாட்டில் இதனின்றும் அதிகமாக நிர்வாகச் செலவு செய்வதும் குற்றமல்லவா?

## விளம்பரமும்—பிரசாரமும்

இவ்வாண்டில் பதினேழு பொருட்காட்சிகளில் பங்கெடுத்துக் கொண்டோம்.

நான் 161 நாட்களில் 17,000 மைல்கள் பிரயாணம் செய்து 180 இடங்களுக்குப் போயிருந்தேன். ஏறக்குறைய எல்லா நூற்புக் கிளைகளையும், அவற்றைச்

சார்ந்த பல கிராமங்களுக்குச் சென்று நூல் நூற்பவர்களையும், நெசவு செய்பவர்களையும், கிராமப் பிரமுகர்களையும் நேரிற் கண்டு நட்புறவு பூண்டுவந்தேன்.

பல மகாநாடுகளிலும், பொதுக்கூட்டங்களிலும் கலந்து கதர் இயக்கத்துக்கு ஆக்கம் தேடினேன்.

2,84,000 துண்டுப் பிரசுரங்கள் அச்சிட்டு வழங்கினேன். 58,500 "குடி நூல்" பிரதிகள் விற்பனையாயின.

## சமூக ஊழியம்

எங்கள் கிளைகள் நூலும் துணியும் உற்பத்தி செய்வதோடு நிற்பதில்லை. ஒவ்வொரு கிளையும் ஒரு சமூக ஊழியச் சங்கமாக விளங்குகிறது. மதுவிலக்கு, ஹரிஜனத்தொண்டு, முதியோர் கல்வி, ஆகிய துறைகளில் எங்கள் தொண்டர்கள் பேருக்கம் காட்டி வந்துள்ளனர்.

பாடசாலைகள் இல்லாத ஊர்களில் நெசவாளர் குழந்தைகளுக்கு இராப்பாடசாலைகளும், பகற் பாடசாலைகளும் நடத்தி வந்தோம்.

20-8-1939ல் கோவை ஜில்லா, கோபி தாலுகா, கொங்கர்பாளையம் கிராமத்தில் இராஜாஜி தலைமையின் கீழ் நடைபெற்ற முதியோர் கல்வி மகாநாடு எங்கள் தொண்டர்களுக்கு முதியோர் கல்வித் திட்டத்தில் புதிய உத்வேகத்தையும், உற்சாகத்தையும் தந்துள்ளது.

இடுவம்பாளையம், தேவராயம்பாளையம், நல்லக்காளிபாளையம், புஞ்சைப்புளியம்பட்டி ஆகிய கிராமங்களில் நெசவாளர் குழந்தைகளுக்கு முழுநேரப்

பாடசாலைகளும், ஒழிவு நேரப் பாடசாலைகளும், இரவுப் பாடசாலைகளும் நடத்திவரப் பெற்றன.

இப்பாடசாலைகளின் நிர்வாகச் செலவின் நிமித்தம் கதர் நெசவாளர்கள் தங்கள் கூலிப்பணத்தில் ரூபாய்க்குக் காலணா செலுத்தி வருகிறார்கள். அதிகப்படியான செலவுகளைச் சர்க்கா சங்கம் ஏற்றுக் கொண்டது.

புஞ்சைப் புளியம்பட்டியில் "சக்கிலியர்" எனப் படும் ஹரிஜனச் சிறுவர்களுக்கு ஒரு தனிப் பாடசாலை நடத்தி வந்ததுடன் அக்குழந்தைகளுக்கு மதிய உணவும் அளித்து வந்தோம்.

காந்தி நகரில் அச்சு சாயத் தொழில் ஊழியர்களுக்குப் பகல் ஒருமணி நேரம் முதியோர் கல்வி வகுப்பு நடைபெற்றது.

இங்கு வேலை செய்யும் சிறுவர்களுக்கு இரண்டு மணி நேரம் ஒதுக்கப்பட்டு பொதுக்கல்வியும், நூல் நூற்றலும் கற்றுத் தரப்படுகின்றது.

திருப்பூர் காந்தி நகரில் என்னுடன் வசித்த சர்க்கா சங்கத் தொண்டர்கட்கும், அவர்கள் மனைவி மக்கட்கும், ஹிந்தி வகுப்பொன்று நடத்தப் பெற்றது. குழந்தைகளுக்குத் தனிப் பாடசாலையும் இருந்தது.

# 14

## ராம்கார் காங்கிரஸ்

சட்டமறுப்பு இயக்கத்தை மீண்டும் உடனே ஆரம்பிக்க வேண்டுமெனத் தேசமெங்கும் ஒரே மனோவேகத்துடன் இருந்த நாட்கள்.

1940 மார்ச்சு மாத மத்தியில் ராம்காரில் மௌலானா அபுல்கலாம் அசாத் தலைமையின்கீழ் அகில இந்திய காங்கிரஸ் கூடிற்று.

மார்ச்சு 11ந் தேதியே திருப்பூரிலிருந்து சென்னைக்குப் புறப்பட்டேன். காங்கிரசுக்கு நான் எப்போதும் மூன்றாம் வகுப்பில்தான் செல்வது வழக்கம். ஆனால் இம்முறை இரண்டாம் வகுப்பு சுற்றுலா டிக்கட் வாங்கிக்கொண்டு சில அன்பர்களோடு புறப்பட்டேன்.

அதன்படியே நாங்கள் மார்ச்சு 12ந் தேதி சென்னையில் ரயிலேறி, வழியில் குர்ஷா ரோடில் இறங்கிப் பூரி நகர் சென்று ஜகந்நாதர் ஆலயத்தில் அருமையான நெய்வடை சாப்பிட்டுவிட்டுக் கல்கத்தா சென்று அங்கு காளிகட்டத்தில் இரத்தப் பசியுடன் நாவை நீட்டிக்கொண்டிருக்கும் காளியைப் பார்த்துவிட்டு, 17ந் தேதி இரவு பன்னிரண்டு மணிக்கு ராம்கார் போய்ச் சேர்ந்தோம்.

18 முதல் 21 முடிய நான்கு நாட்கள் ராம்கார் காங்கிரசில் தங்கியிருந்து தமிழ்நாட்டுக் கதர் ஸ்டாலை யும் கவனித்திருந்தேன்.

## மகாத்மாவின் சொற்பொழிவு

காங்கிரஸ் மகாநாட்டிலே மகாத்மா சொற்பொழி வாற்றினர். அப்போது அவர் கூறியதாவது:

"இன்று இங்கு வந்து இங்கு நடந்த விவாதங்களை எல்லாம் பார்க்க முடிந்ததற்குச் சந்தோஷப்படு கிறேன். இங்கு பேசியவர்கள் அனைவரும் சட்ட மறுப்பையே குறிப்பிட்டார்கள். இந்தச் சந்தர்ப்பத் தில் பைபிள் வாக்கியமொன்று என் நினைவுக்கு வரு கிறது.

கடவுள், கடவுள், என்று மனிதன் கூச்சல்போட்டுக் கொண்டே இருக்கலாம். ஆனல் தன் வேலையைச் செய்திருப்பவன்தான் கடவுளை அடைய முடியும் என்பதே அவ்வாக்கியம்.

உங்களுடைய இருதயமும், மனமும் எனக்குத் தேவையே அன்றி உங்களுடைய கரகோஷங்கள் அல்ல. சட்டமறுப்பு, சட்டமறுப்பு என்று கூச்சலிடுபவர் களால் சட்டமறுப்பு ஆரம்பிக்க முடியாது.

சொன்னதைச் செய்வதும், வேண்டாமென்று சொல்வதை விட்டுவிடுவதும்தான் உண்மையான சட்டமறுப்பு. சட்டமறுப்பைச் சரியான முறையில் ஆரம்பித்து நடத்தினல் நிச்சயம் விடுதலை பெற முடியும்.

நம்முடைய நாட்டிலே நாம் அடிமைகளாக இருக் கிறோம் என்பதை நாமெல்லோரும் அறிவோம். நமக்குச் சுதந்திரம் அவசியம் என்பதையும் நாம்

உணர்ந்திருக்கிறோம். அந்தச் சுதந்திரத்திற்காக நாம், போராட வேண்டுமென்பதையும் அறிந்திருக்கிறோம். உடனே சட்டமறுப்பு ஆரம்பிக்க வேண்டுமென்று செய்யப்பட்ட பிரசங்கங்களுக்காக உங்களுடன்சேர்ந்து நானும் கரகோஷம் செய்யத் தயாராக இருக்கிறேன்...

ஒரு திருடன் வந்து என்னை என் வீட்டிலிருந்து விரட்டிவிட்டான். அவனுடன் சண்டை போட்டு என் வீட்டை நான் மீண்டும் கைப்பற்ற வேண்டும். அதற்குமுன் நான் தயாராய் இருக்கவேண்டும். ஆனால் இந்த முன்னேற்பாடுகள் என்னவென்பதை நீங்கள் அறியவில்லையென்று உங்களுடைய கரகோஷங்கள் ருசிப்பிக்கின்றன.

## "தோல்வி கண்டதில்லை"

நீங்கள் தயாராக இல்லை. நீங்கள் நிஜமான சோல்ஜர்கள் அல்ல. நீங்கள் சொல்லும் முறையில் முன்னேறினால் தோல்வி நிச்சயமென உங்களுடைய ஜெனரல் கருதுகிறார்.

பின்னால் வருந்தக் கூடிய காரியம் எதையும் நான் செய்யத் தயாராக இல்லையென்பதைத் தெளிவாக விரும்புகிறேன். நான் இவ்வளவு வருஷங்களாகச் சண்டைபோட்டு வந்திருக்கிறேன். இதுவரை நான் தோல்வியடைந்ததாக ஒப்புக்கொண்டதில்லை.

இராஜ்கோட் சம்பவம் எனக்கு ஒரு தோல்வி யென்று சிலர் சொன்னபோதிலும், அது தோல்வியில்லை யென்றே நான் சொல்லுகிறேன். எதிர்காலத்தில் இது ருசுவாகும்.

நீங்கள் எல்லோரும் தயாரானவுடன் நான் முன்னேறிச் செல்லத் தயாராக இருக்கிறேன் என்று பகிரங்கமாக உங்களுக்கு வாக்குறுதி அளிக்கிறேன்.

நமது வெற்றி இறந்து எனக்குச் சந்தேகமே இல்லை, விஷயாலோசனைக் கமிட்டியிலும் இதைச் சொன்னேன். இங்கும் அதையே திருப்பிச் சொல்கிறேன். உங்களுடைய மனதையும் இருதயத்தையும் பரிசுத்தம் செய்து கொள்ளுங்கள்.

## கைராட்டையில் நம்பிக்கை இல்லாவிட்டால்....

போராட்டத்தை ஆரம்பம் செய்வதற்கு சரக்காவில் கவனம் செலுத்தவேண்டிய அவசியமில்லையென்று இங்கு சிலர் சொன்னார்கள். அவர்களுடைய வாய்மையிலும் தைரியத்திலும் எனக்குச் சந்தேகமில்லை. ஆனால் ஸ்ரீ ஜவஹர்லால் சொன்னதுபோல் இது அவர்களுடைய மனத்தின் பலஹீனத்தையே காட்டுகிறது.

சர்க்கா இல்லாமல் சத்தியாகிரஹம் ஆரம்பிக்க முடியாதென்று கடந்த இருபது வருடங்களாக நான் சொல்லி வந்திருக்கிறேன்.

நான் சர்க்காவை விட்டுவிட வேண்டுமென்று டாக்டர்கள் சொல்லுகிறார்கள். ஆனால் என்னையே நான் தயார் செய்து கொள்ள வேண்டியிருப்பதால் அதில் இன்னும் அதிகமான கவனம் செலுத்திக் கொண்டிருக்கிறேன். சர்க்காவில் நம்பிக்கை கொண்டிராத யாரும் என் தலைமையின் கிழ் சோல்ஜராக இருக்க முடியாது. ஏனெனில் அது என்னையும் உலகத்தையும், தன்னையுமே ஏமாற்றுவதாகும்.

என் சம்பந்தப்பட்ட வரையில் அஹிம்சையைத் தவிர வேறு ஒரு வழியும் என்னிடம் இல்லை.

## என்னையும் ஏன் இழுக்கின்றீர்கள்?

உடனே போராட்டத்தை ஆரம்பிக்க வேண்டுமென்றும், போராட்டத்தை வெற்றிகரமாக நடத்துவதற்கு வேறு வழி இருக்கிறதென்றும் நீங்கள் நம்பினால், பேஷாக அப்படியே செய்யுங்கள் என்றுதான் நான் சொல்வேன். உங்களுடைய வெற்றியை நானே முதலில் பாராட்டுவேன். ஆனால் என்னையும் விடாமல், என்னுடைய முறைகளையும், உத்திரவுகளையும் பின்பற்றவும் விருப்பமில்லையென்றால், அது என்ன தலைமைப் பதவியென்று கேட்கிறேன்.

உடனே சட்ட மறுப்பு ஆரம்பிக்க வேண்டுமென்று அவசரப்படுகிறவர்கள் என்னையும் தங்கள்கூட இழுக்கப் பார்க்கிறார்கள். ஜனங்கள் என் பக்கம் இருக்கிறார்களென்று அவர்கள் கருதுவதே இதற்குக் காரணம். நான் ஜனங்களின் மனிதன்தான். என் வாழ்க்கையில் ஒவ்வொரு நிமிடமும் பட்டினியாகக் கிடக்கும் லக்ஷக்கணக்கான மக்களைப்பற்றிய சிந்தனைதான் என் மனதில் குடிகொண்டிருக்கிறது. அவர்களுடைய கஷ்டங்களை நிவர்த்திப்பதற்காகவே நான் உயிரோடிருக்கிறேன். அதற்காக என் உயிரையும் கொடுக்கத் தயாராக இருக்கிறேன். மக்களிடம் எனக்குக் கொஞ்சம் செல்வாக்கிருப்பதாக நான் பாத்யதை கொண்டாடிக் கொள்வேன். ஏனெனில் நான் அவர்களுடைய உண்மையான ஊழியனாயிருந்து வந்திருக்கிறேன். நீங்கள் என்னைக் கல்லால் அடித்துக் கொன்றாலும், அப்போதும் அவர்களுக்காகவே நான் வேலை செய்வேன். வேறு வழி ஏதாவது இருக்கிறதென்று நீங்கள் கருதினால் தயவு செய்து என்னைத் தனியாக விட்டுவிடுங்கள்.

சர்க்கா இல்லாவிட்டால், நம்முடைய விடுதலைப் போராட்டத்தில் நான் உங்களை ஜெயிலுக்கு அழைத்துச் செல்லமுடியாது. சர்க்காவில் நம்பிக்கையில்லாத யாரும் எனக்கு வேண்டாம். சர்க்காவில் உங்களுக்கு மாறாத நம்பிக்கை ஏற்பட்டு விட்டதென்று எனக்குத் திருப்தி ஏற்பட்டால்தான் முன்னேறிச் செல்வேன்.

இங்கு கூடியுள்ள நாம் ஒரு தவறு செய்துவிட்டால், காங்கிரசைத் தெய்வமாகக் கொண்டாடும் லட்சக் கணக்கான வாயற்ற மக்கள் அதற்காகப் பெரிய கஷ்ட நஷ்டங்களை அநுபவிக்க நேரிடும். நாம் செய்த தவறுக்காக மக்கள் கஷ்டப்பட்டால், அதற்குக் கடவுளிடம் நாம் என்ன பதில் சொல்லமுடியும்?

காங்கிரசுக்கு டெலிகேட்டுகளாக வந்திருக்கும் உங்களுக்குப் பொறுப்பு அதிகம். உங்களுடைய ஜெனரலாகிய எனக்கு அதைவிட அதிகப் பொறுப்பு இருக்கிறது. உங்களுடைய ஜெனரல் என்ற ஹோதாவில் நான் திசை காட்டும் விளக்காக நின்று கொண்டு, அபாயங்களைப்பற்றி உங்களை எச்சரிப்பது என் கடமையாகும். ஆகையால் வெகு ஜாக்கிரதையாகப் போக வேண்டியிருக்கிறது.

## எனக்குத் திருப்தி ஏற்படவேண்டும்

பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்தின் தீமையைப்பற்றிப் பலர் பிரஸ்தாபித்தார்கள். அதைப்பற்றி அதிகம்பேச நான் விரும்பவில்லை.

அதை நாம் ஒழிக்கவேண்டுமென்று மட்டும் சொல்வேன். அதற்கு நான் பரிகாரம் சொல்லியிருக்கிறேன். நான் சத்தியாக்கிரகம் ஆரம்பிப்பதற்கு முன்பாக, அந்தப் பரிகாரத்தை நீங்கள் சரியாகத் தெரிந்து

கொண்டிருக்கிறீர்களென்று எனக்குத் திருப்தி ஏற்பட வேண்டும்.

நான் சொல்லும் பத்தியப்படி நீங்கள் மருந்து சாப்பிடப் போவதில்லையென்றால், என்னிடம் வந்து மருந்து கேட்பதில் பிரயோசனமில்லை. வேறு டாக்டரைப் பார்த்துக் கொள்ளுங்கள் என்றுகூடச் சொல்வேன்.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் திறமையைப் பற்றிப் பலர் பேசியதைக் கேட்டீர்கள். அது உங்களுக்குக் கோபத்தை உண்டாக்குமேயொழிய, ஏகாதிபதியத்தை ஒழித்துவிட உதவி செய்யாது. இக்கோபம் நமது பிரசினைகளைத் தீர்க்காது. கோபம் கொள்வது சத்தியாக்கிரகத்துக்கு முரணானது. பிரிட்டிஷ் மக்களுடன் நமக்குச் சண்டையில்லை. அவர்களுடன் நண்பர்களாகவே இருக்க விரும்புகிறோம். நம்மீது அவர்கள் ஆதிக்கம் செலுத்துவதன் மூலம் அல்ல. சம அந்தஸ்துடன் சுதந்திர இந்தியா என்ற ஹோதாவில் அவர்களுடன் நண்பர்களாக இருக்க விரும்புகிறோம்.

சுதந்திர இந்தியா யாரிடமும் துவேஷம் காட்டாது. யாரையும் அடிமைப்படுத்தவும் முயற்சிக்காது: உலகத்திலுள்ளவர்கள் நம்முடன் சேர்ந்து வரவேண்டுமென்று விரும்புகிறோம். நாமும் அவர்களுடன் சேர்ந்து செல்வோம்.

## சத்யாக்கிரகத்தின் சின்னம்

என்ன நேரினும் சத்தியத்தைக் கடைப்பிடிப்பதென்பதே சத்தியாக்கிரஹமாகும். நீங்கள் இந்தப் பாதையைப் பின்பற்றத் தயாராக இல்லாவிட்டால் தயவு செய்து என்னைத் தனியாக விட்டுவிடுங்கள்

அதற்காக நான் கோபமடைய மாட்டேன். இதை இப்போதே நான் தெரிவிக்காவிட்டால், நான் பாழாய்ப் போய்விடுவேன். என்னுடன் சேர்ந்து இத் தேசமும் பாழாய்ப்போய்விடும்.

சத்தியம் அஹிம்சையாகிய இரண்டும் சத்தியாக்கிரஹத்தின் ஜீவன். சர்க்கா அதனுடைய சின்னம். தன் சோல்ஜர்கள் ஒரு குறிப்பிட்ட உடையைத்தான் அணிய வேண்டுமென்று ஜெனரல் சொல்வதுபோல் உங்களுடைய சின்னம் சர்க்காவாகத்தான் இருக்க வேண்டுமென்று நான் வற்புறுத்துகிறேன்.

சத்தியம், அஹிம்சை, சர்க்கா, ஆகிய இம் மூன்றிலும் முழு நம்பிக்கையில்லாவிட்டால் நீங்கள் என்னிடம் சோல்ஜர்களாக இருக்க முடியாது. அந்நிலையில் நீங்கள் என்னைத் தனியே விட்டுவிட்டு உங்களுடைய முறைகளை யோசித்துப் பாருங்களென்று மீண்டும் சொல்கிறேன்.

என்று கூறி மகாத்மா தமது பிரசங்கத்தை ராம்கார் காங்கிரஸ் மகாநாட்டில் முடித்தார்.

## பார்வர்டு பிளாக் மகாநாடு

ராம்கார் காங்கிரஸ் நடைபெற்ற அதே சமயம், அதே மைதானத்தருகில் ஒரு பிரமாண்டமான பந்தலின் கீழே. சுபாஷ்சந்திரபோஸ் தலைமையின்கீழ் பார்வர்டு பிளாக் மகாநாடு நடந்தது அம்மகாநாட்டிற்கும் நான் சென்றிருந்தேன்.

மகாநாடடிற்குச் சுமார் இரண்டாயிாம் பேர்கள் வந்திருந்தனர்.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துடன் காங்கிரஸ் "வலதுசாரிகள்" சமாதானம் செய்துகொண்டால்

உள்நாட்டுக் கலகம் ஏற்படு மென்று இம்மகாநாடு எச்சரித்தது.

விடுதலைப் போராட்டத்தை உடனே துவக்கும் படியும், ஒரு குறித்த தேதிக்குள் சுதந்திரம் வழங்கா விட்டால் போராட்டம் துவக்கப்படுமெனப் பிரிட்ட னுக்கு "அல்டிமேட்டம்" முடிவான எச்சரிக்கை விடுக்க வேண்டுமென்றும், போராட்டத்துக்குத் தேசம் தயாராக இருக்கிறதென்றும் மகாநாட்டுப் பிரதி நிதிகள் பேசினர்கள்.

இந்த பார்வர்டு பிளாக் மகாநாட்டின் நட வடிக்கைகளைப் பின் அணியாக மனதில் வைத்துக் கொண்டு மகாத்மா காந்தியின் ராம்கார் பிரசங் கத்தைப்படித்தால், அவரது மனநிலை நன்கு புலனுகும்.

# 15

## சர்க்கா சங்கத்தைவிட்டு விலகுதல்

தமிழ்நாடு சர்க்கா சங்கத்தின் முழுப் பொறுப் பாளனாகத் தொடர்ந்து பணியாற்றுவது எனக்கு மிகச் சங்கடமாக இருந்தது. ஆதலால் எனது இராஜீனமாக் கடிதத்தை எழுதி அதனை இராஜாஜிக்கு அனுப் பினேன். இராஜாஜி அதனைப் பெற்றுக்கொண்டு எனக்குக் கீழ்க்கண்ட கடிதம் எழுதினார்.

### இராஜாஜியின் கடிதம்

சென்னை, 9-3-1940.

எனதன்புள்ள அய்யாமுத்து,

உங்கள் கடிதமும், அத்துடன் உங்கள் உத்தேச ராஜினமாக் கடிதமும் கிடைக்கப் பெற்றேன்.

எனினும் நான் ஏற்கனவே உங்களுக்கு எழுதியிருந்த வண்ணம் நீங்கள் ஆமதாபாத் சென்று ஸ்ரீ பாங்கரைக் காணவேண்டுமென வற்புறுத்துகிறேன்.

ஸ்ரீ பாங்கரின் உடல்நிலை சரியாக இல்லை. உங்கள் மனோநிலையையில், எனது ஆலோசனை களையும் அவர் காந்திஜிக்குத் தெரிவித் துள்ளார்.

எனது விருப்பங்களுக்கும், வேண்டுதல்களுக்கும், நீங்கள் இதுகாறும் செவிசாய்த்து வந்துள்ளமைக்கு நன்றி கூறுகிறேன். கதர்த் துறையில் உங்களுடைய திறமையான தலைமையை இம் மாகாணம் இழப்பதை நான் விரும்பவில்லை. உங்கள் உணர்ச்சிகளின் மீது நீங்கள் வெற்றி கண்டு தொடர்ந்து சேவை புரிவீர்களென்று நம்புகிறேன். பதினைந்து வருட அநுபவமும், நிர்வாகத் திறமையும் உங்களிடம் இருப்பதால் உங்களை வற்புறுத்துகிறேன். அதாவது நீங்கள் தொடர்ந்து சேவை புரிவதால் கதர்வேலை திறம் பெறும் என்று கூறுகிறேன். எனது ஆலோசனையை ஏற்றுக்கொண்டு, நீங்கள் ஆமதாபாத் சென்று, ஸ்ரீ பாங்கரை நேரிற் கண்டு பேசியபின் ஒரு முடிவுக்கு வருவீர்கள் என்ற பதிலை உங்களிடமிருந்து எதிர்பார்க்கிறேன். உங்கள் பதில் கடிதத்தை எதிர்பார்த்து உங்கள் ராஜிநாமாக் கடிதத்தை அனுப்பாது வைத்திருக்கிறேன்.

உங்களன்புள்ள,
சி. இராஜகோபாலாச்சாரி

இக் கடிதம் பெற்ற மறுதினமே, பாங்கருக்கும் எனக்குமிடையே ஏற்பட்டுள்ள மனத்தாங்கலின் காரணங்களை விளக்கி விஸ்தாரமாக எட்டுப் பக்கங்கள் கொண்ட ஒரு கடிதத்தை டைப்படித்து இராஜாஜிக்கு அனுப்பி, நான் பாங்கரை நேரிற் சென்று காணுமுன் அக்கடிதத்தை அவருக்கு அனுப்பி வைக்கும்படி கேட்டிருந்தேன்,

அவ்வாறே அக் கடிதத்தை ஸ்ரீ பாங்கருக்கு இராஜாஜி அனுப்பிவிட்டார். பாங்கர் அதனை காந்திஜிக்கு அனுப்பிவிட்டார்.

ராம்காரிலிருந்து திரும்பும் மார்க்கத்தில்மௌன்ட் ஆபு என்னுமிடத்தில் தங்கியிருந்த பாங்கரை நேரிற் சென்று பார்த்தேன். அவர் உடல்நிலை மிகவும் குன்றி யிருந்தார். நடந்தவற்றையெல்லாம் மறந்து விட்டு எப்போதும் போல் வேலை செய்து வரும்படி அவர் என் னிடம் தெரிவித்தார். நான் திருப்தியடையவில்லை.

திருப்பூர் காந்தி நகரில் ஒரு கட்டிடம் கட்டும் வேலையைத் துவக்கினேன். இக்கட்டிடத்தின் மதிப்பீடு பதின்மூன்றுயிரம் ரூபாய். வரவுசெலவு திட்டத்தில் இவ்வேலை சேர்க்கப்பட்டு, சர்க்கா சங்க அனுமதியும் பெற்றிருந்தபடியால் கட்டிடத்திற்கு வேண்டிய மரங்கள், சிமெண்ட், கருங்கல் எல்லாம் சேகரம் செய் யப்பட்டுத் தயாராக இருந்தன.

காந்தி நகரில் அச்சு சாயச்சாலை, சலவைச் சாலை, கைராட்டைத் தொழிற்சாலை, கதர்த் தொண்டர்கள் பயிற்சி சாலை, தமிழ்நாடு சர்க்கா சங்கத்தின் தலைமைக் காரியாலயம், காந்தி நகர் போஜன சாலை, ஆரம்ப பாடசாலை இந்தி பாடசாலை, முதியோர்க் கல்வி வகுப்பு, இராப் பாடசாலை, ஓய்வு நேரப் பாடசாலை தபால் நிலையம் முதலியவை செயல்பட்டிருந்தன சர்க்கா சங்கத் தொண்டர்கள் ஏழெட்டுப் பேர் அங்கே சொந்தமாக வீடுகள் கட்டிக் குடியிருந்தனர். நானும் அவர்களில் ஒருவன்.

திருப்பூரில் மத்திய கோடவுனும், வஸ்திராலயமும் இருந்தன. பஞ்சு, பருத்தி, நூல் யாவும் அங்குதான் சேமித்து வைக்கப்பட்டிருந்தது. இவை யாவற்றிற்கும்

அவ்விடம் போதுமானதாயிருக்கவில்லை. இவை காந்தி நகருக்கு இரண்டு மைல் தூரத்திலிருந்தன.

கோவை மாவட்டத்திலிருந்த உற்பத்தி சாலைகளில் தயாராகும் நூல், ஜவுளியாகியவற்றைக் கிளை நிர்வாகிகள் வாரந்தோறும் திருப்பூர் சென்ட்ரல் கோடவுனில் கொணர்ந்து கொடுத்துவிட்டுத் தங்களுக்கு வேண்டிய பருத்தி பஞ்சு ரொக்கமாகியவற்றைப் பெற்றுக்கொண்டு போவார்கள்.

இந்த மத்திய கோடவுன் திருப்பூரிலிருப்பதைக் காட்டிலும் காந்தி நகரில் இருந்தால், உற்பத்தி சாலை நிர்வாகிகளை நான் சந்திப்பதற்கும், அவர்கள் கொண்டு வரும் சரக்குகளைப் பார்வையிடுவதற்கும் வசதியாக இருக்குமெனக் கருதியே சென்ட்ரல் கோடவுன் கட்டிடம் காந்தி நகரில் கட்டுவதாக முடிவு செய்யப்பட்டது.

மேலும் பிரதிதினமும் திருப்பூரிலிருந்து காந்தி நகருக்கு வண்டிகளில் அச்சு சாயச் சாலைக்கும் சலவைக்கும் வேண்டிய துணிகளைக் கொண்டு வருதலும், பிறகு அவற்றைத் திரும்பவும் திருப்பூருக்கு அனுப்பி வருவதில் ஏற்படும் செலவும் நேரமும் தவிர்க்கப்படுமெனக் கருதப்பட்டது.

திடீரென மகாத்மா காந்தியிடமிருந்து ஒரு கடிதம் வந்தது.

"புதிய கட்டிடம் கட்டவேண்டாம். ஏழை நூற்பவர்களின் பணத்தைக் கல்லிலும் காரையிலும் முடக்கி வைக்க எனக்குப் பிரியமில்லை" என்று அக்கடிதத்தில் கூறப்பட்டிருந்தது.

புதுக் கட்டிடம் எதற்காகத் தேவையென்று விபரமாக விளக்கிக் கூறி மகாத்மாவின் அனுமதியைப்

பெற்றிருந்தேன். அநுமதி கொடுத்தபின் மகாத்மா இப்படிப் பின்வாங்கும் காரணமும் எனக்குப் புதிதாக இருந்தது.

எனவே அவருக்கு இப்படியொரு கடிதம் எழுதினேன்.

"ஸ்தலத்தில் வேலை செய்பவனுக்குத்தான் கஷ்ட நஷ்டங்கள் தெரியும். சர்க்கா சங்க நலனை உத்தேசித்தே நான் கடந்த பதினைந்தாண்டுகளாக உழைத்துப் பல்லாயிரக்கணக்கான தனத்தை தேடியிருக்கிறேன். முன் யோசனையற்ற நிர்வாகத்தின் பயனாய் நெடுக பல்லாயிரக்கணக்கில் ஏற்பட்டிருந்த நஷ்டத்தைத் தடுத்து நிறுத்தியிருக்கிறேன். இங்குள்ள சொத்துக்கு ஜவாப்தாரி என்ற நிலையில், அதன் பந்தோபஸ்துக்குத் தகுந்த கட்டிடங்களை நான் கட்டியாக வேண்டும். எனது சேவையின் மதிப்பையும் தரத்தையும் தாங்கள் உணர்ந்து கொள்ள முடியாமற் போனது எனது துரதிருஷ்டமாகும். இப்போது முடிவாக இதைச் சொல்கிறேன். தராசின் ஒரு தட்டிலே என் சேவையை வையுங்கள். மற்றொரு தட்டில் பதிமூன்றுயிரம் ரூபாயை வையுங்கள். தங்கட்கு எது கனமாக தோன்றுகிறதோ அதை வைத்துக் கொள்ளுங்கள்"

இக் கடிதத்தின் நகல் ஒன்றை இராஜாஜிக்கும் அனுப்பியிருந்தேன்.

என் மனங் கசந்து போயிற்று.

இரண்டு தினங்கள் கழித்து, என்னை உடனே விடுவிக்குமாறு மகாத்மா காந்திக்குத் தந்தியும் அனுப்பினேன்.

அகில இந்திய காரியதரிசியாயிருந்த ஸ்ரீ சங்கர்லால் பாங்கர் விலகிவிட்டபடியால் அவருடைய ஸ்தா

ணத்தில் ஸ்ரீ கிருஷ்ண தாஸ் ஜாஜு என்பவர் நியமிக்கப் பட்டிருந்தார்.

அவர் எனது இராஜிமை ஒப்புக்கொள்ளப்பட்ட தாகவும், எனது ஸ்தானத்தில் சென்னை எஸ். இராம நாதன் நியமிக்கப்பட்டுள்ளதாகவும். அவரிடம் நான் பொறுப்பை ஒப்புவிக்க எப்போது சௌகரியப்படுமென் பதை தெரிவிக்கும்படியும் எனக்கு 12-10-1940 தேதி யிட்ட கடிதம் எழுதியிருந்தார்.

அக்கடிதத்தில் மேலும்,

எனது பொறுப்பை ஒப்புவித்த பிறகு சில காலம் அங்கிருந்து ஸ்ரீ ராமநாதனுக்கு சர்க்கா சங்க நிர்வாக விஷயங்களைப் பற்றிய ஆலோசனை கூறும்படியாகக் கேட்டுக் கொண்டிருந்தார்.

இக் கடிதம் கிடைத்த அன்றே எந்த நிமிஷத் திலும் சார்ஜ் ஒப்புவிக்கத் தயாரென்றும், அவர் கேட் டுள்ளவாறே ராமநாதனுக்கு உதவியளிப்பதாகவும் ஸ்ரீ கிருஷ்ணதாஸ் ஜாஜுவுக்குத் தந்தி அனுப் பினேன்.

1940 அக்டோபர் 21ந்தேதி எஸ். ராமநாதனிடம் சகல பொறுப்புக்களையும் ஒப்புவித்து விட்டுப் பிரதி தினமும் காரியாலயம் செல்வதும், இராமநாதன் கேள்விகளுக்கு விளக்கம் தருவதுமாக இருந்தேன். அவரிடம் பொறுப்பை ஒப்புவித்து சர்க்கா சங்கத் தைப் பொறுத்தவரை மிகவும் தீமையானதென நான் எண்ணியபோதிலும், என்னைப் பொறுத்தவரை "அப்பாடா—ஒரு பெருஞ்சுமை இறங்கியது" எனப் பெருமூச்சு விட்டேன். அன்றிரவு நான் பெற்ற மன நிம்மதியும் நித்திரையும் அளவிட முடியாதது.

# 16

## மகாத்மாவின் கடிதம்

ராமநாதன் கதரில் நம்பிக்கையற்றவர். கதரைக் கொளுத்தியவர். கட்டை வண்டிப் பொருளாதாரர் என்று காந்தியைக் நையாண்டி செய்தவர். அவரி சர்க்கா சங்கப் பொறுப்பேற்க வந்தது ஒரு நாத்திகர் கோவில் அர்ச்சகராக வந்தது போலிருந்தது.

இதைப் பற்றி மகாத்மாவுக்கு ஒரு கடிதம் எழுத வேண்மென எனக்குத் தோன்றியது. நான் எழுதிய கடிதத்தின் நகல் என்னிடமில்லை. அதில் என்ன எழுதியிருந்தேன் என்ற ஞாபகமும் எனக்கு இப்போ தில்லை. ஆனல் அக்கடிதத்திற்கு மகாத்மா எழுதிய பதில் கடிதம் என்னிடமிருக்கிறது. அது வருமாறு:—

சேவாகிராம்
27—10—40

அன்புள்ள அய்யாமுத்து!

ஊழியர்கள் வேலையில் காட்டும் உதாசினமும், அதனல் ஏற்படும் திறமைக் குறைவும் தகுதியின்மையும் பற்றி நீங்கள் எனது கவனத்திற்குக் கொண்டு வந்ததற்காக மகிழ்ச்சியடைகிறேன்.

இவ்வளவு வருஷங்களாக நீங்கள் ஏன் அதைச் சகித்து வந்தீர்கள்? செய்யாமல் இருப்பதைவிடக் காலந்தாழ்ந்தாவது செய்வது மேலெனும் தத்துவப்படி நீங்கள் இப்போதாவது செயல்பட முன்வந்தது குறித்து மகிழ்வடைகிறேன்.

இதில் முன்னேற்றம் ஏற்படுமென்றும், தனது தொழில் தெரியாத எந்த ஊழியனும் இருக்க மாட்டானென்றும் நான் நம்புகிறேன். எல்லா ஊழியர்கட்டும் ஒரு குறைந்த பட்சத் தகுதிப் பரீட்சை இருக்க வேண்டும். அதற்காக முறைப்படி தேர்வு நடக்க வேண்டும். அகில இந்திய அடிப்படையில் ஒரு பரீட்சை வைப்பது நல்லதாக இருக்கும். ஸ்ரீ ஜாஜுஜியுடன் இதைப் பற்றி ஆலோசிக்கிறேன்.

உங்கள்
பாபு.

## இக்கடிதத்துக்கு நான் எழுதிய பதில்

அன்புள்ள பாபு,

தங்களது 27—10—40 தேதியிட்ட கடிதம் கிடைத்தது. சர்க்கா சங்க ஊழியர்கள் திறமைப் பரீட்சைக்கு உள்ளாவார்கள் என்பதறிய நான் மகிழ்வடைகிறேன்.

திறமை ஒருபுறமிருக்க ஊழியர்களுக்குக் கதரில் அசையாத நம்பிக்கை இருக்க வேண்டுமென நான் எண்ணுகிறேன். போலீஸ் சேவகன் உடுப்பு அணிவது போன்று பல

ஊழியர்கள் கதருடுத்துகிறார்கள். அவர்களது மனைவி மக்கள் எத்துணி அணிந்தாலும் அவர்கட்குக் கவலையில்லை.

போலீஸ் சேவகன் தனது உத்தியோகத்தினின்று விலகியதும் போலீஸ் உடைகளைக் களைந்தெறிவதுபோல இவ்வூழியர்களும் சர்க்கா சங்கத்தை விட்டதும் கதராடைகளைக் களைந்து விடுகிறார்கள்.

''திறமைசாலிகளான'' இத்தகைய விசுவாசமற்றவர்களைக் காட்டிலும், விசுவாசமுள்ள ஊழியர்களின் திறமைக் குறைவால் அதிக தீமை ஏற்பட்டுவிடாது. கதர் ஊழியர்களின் வேறு ஒழுக்கத்தைப் பற்றி நான் எதுவும் கூறாது விடுகிறேன்.

இராமநாதன் மீண்டும் கதர் சேவை புரிய வந்துள்ளது பற்றி நான் மகிழ்ச்சியடைகிறேன். என்னைக் காட்டிலும் ஒரு சிறந்த மனிதனுக்கு நான் என்னிடத்தைக் காலி செய்து கொடுத்திருப்பதாக எண்ணுவதுடன் கதரைப்பற்றிய சித்தாந்த தத்துவங்களை இராமநாதன் மீண்டும் ஏற்றுக் கொண்டுள்ளார் என்றும், மேலே உள்ளவர்களின் உத்திரவுக்குக் கீழ்ப்படிந்து அவர் சர்க்கா சங்கத்தில் நுழையவில்லை யென்றும் நான் நம்புகிறேன். தமிழ் நாட்டின் கதரியக்கம் அவரது தலைமையின்கீழ் மேன்மையுறும் என்றும் நம்புகிறேன்.

தங்களன்புள்ள,
அய்யாமுத்து

## "புதிரை அகற்றுங்கள்"

நான் மேலே எழுதியுள்ள கடிதத்தினூடே ஏதோ புதிர் இருப்பதாக மகாத்மாவுக்குத் தோன்றிவிட்டது. அவர் கீழ்க்கண்டவாறு எனக்கு அவர் கைப்படவே ஒரு தபால் கார்டு எழுதினார்.

சேவாக்ராம்
4—11—40

அன்புள்ள அய்யாமுத்து,

உங்கள் கடிதம் பெற்றேன். அது புதிராக இருக்கிறது. புதிரைத் திறந்தால் என்னால் அதை நன்கு புரிந்துகொள்ள முடியும். எது எப்படியாயினும், நீங்கள் உண்மையோடிருப்பீர்களென்று நான் எதிர் பார்க்கிறேன். அப்போது எல்லாம் சரியாய் இருக்கும்.

உங்கள்
பாபு.

## உண்மையை எப்படி ருசுப்பித்துக் காட்டுவது?

மேற்கண்ட கடிதத்துக்கு நான் எழுதிய பதில்

காந்திநகர்
திருப்பூர், 7—11—40

அன்புள்ள பாபு,

மதிப்புக்குரிய தங்கள் 4—11—40 தேதியிட்ட தபால் கார்டு கிடைத்தது.

எனது அநுபவத்தில் நான் கண்டறிந்த உண்மைகளையே என் முன் கடிதத்தில் எழுதியிருந்தேன்.

கதரில் நம்பிக்கையற்றிருந்த பலர் சர்க்கா சங்கத்தில் முன்பு சேவை புரிந்திருக்கின்றனர். இப்போதும் அத்தகையவர் இருக்கிறார்கள். இவர்கள் சங்கத்தை விட்டு வெளியேற்றப்பட வேண்டுமென நான் கருதுகிறேன்.

ஒரு கதர் உறுதி மொழிப் பத்திரத்தில் சகல தொண்டர்களும் கையெழுத்திடச் செய்ய வேண்டுமென நான் யோசனை கூறுகிறேன். அகிம்சா நெறிக்கும், சத்தியத்திற்கும் சர்க்காவும் கதரும் சின்னங்களாக விளங்குகின்றன என்று திடமான விசுவாசமும் நம்பிக்கையும் உடையவர்களே சர்க்கா சங்கத்தின் தொண்டர்களாயிருக்கத் தகுதி பெறுவார்கள்.

காசுக்காக உழைப்பவர்கள் நல்ல கணக்கர்களாகவும், ஜோடனையாளர்களாகவும், விளம்பர நிபுணர்களாகவும் திகழ முடியும். ஆனால், கதருக்கும் கைராட்டுக்கும் அவை பிரதிபலிக்கும் தத்துவத்திற்கும் உயிரூட்ட அவர்களால் முடியாது.

கடந்த இருபது வருடங்களாக நான் கதரில் எவ்வளவு "உண்மையானவன்" என்பதை நிரூபித்துக் காட்டியிருக்கிறேன்.

கடந்த பதினைந்தாண்டுகளாக நான் சர்க்கா சங்கத்தின் சேவையில் எனது உள்ளத்தையும், உடலையும், திறத்தையும், என் வாழ்நாளின் சிறந்த பருவத்தையும் சொந்தமாக்கியிருக்கிறேன். கதரைத் தவிர்த்து

வேறு எதிலும் என் நாட்டம் செல்லவில்லை. சர்க்கா சங்கத்துக்குப் புறம்பான எதிலும் நான் அக்கரை காட்டவில்லை.

இதைக் காட்டிலும் வேறு எவ்வகையில் எனது "உண்மையை" நான் தங்களிடம் ருசுபித்துக் காட்ட முடியும் என்பதை தாங்கள்தான் தயவு செய்து கூற வேண்டுகிறேன்.

நீங்கள் நம்பினாலும் சரி, நம்பாவிட்டாலும் சரி, நான் என்னையே கதருக்கு அர்ப்பணித்து விட்டேன்.

என்றுமுங்கள்,
அய்யாமுத்து.

## செயல்படுத்த முடியுமா?

மகாத்மா காந்தி என்னை விட்டாரில்லை. அவர் மீண்டும் எழுதினார்.

சேவா கிராமம்
வர்தா C. P.
22—11—40

எனதன்புள்ள அய்யாமுத்து,

உங்கள் கடிதம் என் முன்னால் காத்திருந்தது. இதுவரை அதைக் கவனிக்க என்னால் இயலவில்லை. உங்கள் யோசனை நல்லதாகத் தெரிகிறது. ஆனால் அதனைச் செயல்படுத்த முடியுமா?

ஸ்தாபனத்துள் கபடம் நுழைவதற்கு சாத்யம் ஏற்படாதா? முழு நம்பிக்கையுள்

ளவர்கள் மட்டும் நமக்குச் சேவை செய்ய வேண்டுமென நம்மால் எப்போதும் கூற முடியுமா?

உதாரணமாகத் தையற்காரர்கள் கதரில் நம்பிக்கையுள்ளவர்களாக இல்லா திருக்கக் கூடும். நமது கணக்கர்களும், பரிசோதகர் களும் நம்பிக்கையற்றவர்களாக இருக்கக் கூடும்.

கதரில் அசையாத நம்பிக்கையுள்ளவர் களைத்தான் வைத்துக் கொள்ள வேண்டு மென்பது நமது லட்சியமாக இருக்கலாம். அத்தகையவர்களுக்கு நாம் முன்னிடம் அளிக்கலாம்.

முழு நம்பிக்கை இல்லாதவர்களாயினும், குறிப்பிட்ட தொழிலில் 'திறமையுடையவர் கள் நமக்கு மேலான சேவை செய்கிறார்கள் என்பதை பன்முறை கண்டிருக்கிறேன்.

ஆகையால் இராமநாதனுக்குத் தேவை யான சகல உதவியும் நீங்கள் அவருக்கு அளித்து வர வேண்டுமென நான் விரும்பு கிறேன். அவர் வேலை கடினமானது. அவர் கோரும்விதத்தில் நீங்கள் அவருக்கு உதவ முடியுமானால் அவருடைய வேலை எளிதாக இருக்கும்.

உங்கள்
பாபு.

## நாத்திகன் அர்ச்சகனுகக் கூடுமா?

மகாத்மாவை நான் விடவில்லை, அவருக்கு எழுதினேன்.

காந்தி நகர்
திருப்பூர் 25-11-40

அன்புள்ள பாபு,

தங்களது மதிப்புக்குரிய 22-11-40 தேதியிட்ட கடிதம் கிடைத்தது. தாங்கள் கூறியிருக்கும் நியாயங்களை என்னுல் ஏற்றுக்கொள்ள முடியாமைக்கு நான் மிகவும் வருந்துகிறேன்.

காசுக்காக வேலை செய்யும் கணக்கனை விடக் கதரில் அன்பு செலுத்தும் கணக்கன், செலவு செய்யப்பட்டுள்ள ஒவ்வொரு செம்புக் காசும், கதரின் அபிவிருத்தியைக் கருத்திற் கொண்டு செய்யப்பட்டதா வென்று கவனிப்பான்.

அதுபோலவே காசுக்காக உழைக்கும் தையற்காரனைவிடக் கதரில் அன்பு பூண்டு உழைக்கும் தையற்காரன் தான் தைக்கும் கதர்ச்சட்டை நீண்ட நாட்கள் உழைக்க வேண்டுமென்பதைக் கருத்திற் கொண்டு, தையல்கள் பிரிந்து போய் விகாரமான தோற்றமுடன், கதர்ச்சட்டை காட்சி தராத படி ஒரு தையலுக்கு இரண்டு தையல்களும், ஒரு நூலுக்கு இரண்டு நூலுமாகத் தைத்துக் கொடுப்பான்.

எனினும், கணக்கனும், தையற்காரனும் கதரில் நம்பிக்கை இல்லாவிடினும், தங்கள்

தங்கள் தொழிலில் சாமர்த்தியசாலிகளாக இருந்தால், அதனால் நன்மையே தவிர தீமையில்லை என்ற வாதம் கணக்கன் விஷயத்திலும் தையற்காரன் விஷயத்திலும் பொருத்தமானதாக வைத்துக் கொள்வதில் எனக்கு ஆட்சேபணையில்லை.

ஆனால் கதருக்கு உயிரூட்டும் காரியதரிசி வெறும் சமர்த்தனாய் இருந்தால்மட்டும் போதுமா? ஒரு நாஸ்திகன் திறமைசாலி என்பதற்காகக் கோவில் அர்ச்சகனாக முடியுமா?

தங்கள் பணிவார்ந்த,
அய்யாமுத்து

# 17

## நான் கட்டிய வீடு—இராஜாஜி விஜயம்

1940 நவம்பர் மாதம் 10ந் தேதி கோவை ஜில்லா பல்லடத்தில் டாக்டர் T. S. S. ராஜன் தலைமையில் கோவை ஜில்லா அரசியல் மகாநாடு நடைபெற்றது.

அன்று மாலை திருப்பூர் காந்தி மைதானத்தில் எனது தலைமையின்கீழ் காங்கிரஸ் கட்சியின் சார்பில் ஒரு பொதுக்கூட்டம் நடைபெற்றது.

பல்லடம் மகாநாட்டிலிருந்து திரும்பிய டாக்டர் ராஜன், இராஜாஜி, திண்டுக்கல் அப்துல் சத்தார் ஆகிய மூவரும் அப் பொதுக் கூட்டத்தில் பேசினார்கள்.

மறுநாள் காலை இராஜாஜி அவர்கள் காந்தி நகரிலிருந்த எனது இல்லத்திற்கு வந்திருந்தார்.

என் மனைவி கோவிந்தம்மாள் 1933ம் ஆண்டு தனிப்பட்டோர் சத்தியாகிரகத்தின்போது இராஜாஜியுடன் திருச்செங்கோட்டில் கைதாகி ஆறு மாதம் கடின காவல் தண்டனை பெற்றவள்.

இராஜாஜி வருகிறார் என்ற தகவல் கிடைத்ததும், பில்டரில் எசென்ஸ் காபி தயாரித்து வைத்திருந்தாள்.

"நான் இங்கு வரும்போதுதான் காபி சாப்பிட்டு வந்தேன். ஆதலால் வேண்டாம்" என்றார் இராஜாஜி.

"அய்யோ, தங்களை நான் இனி எப்போது காணப் போகிறேனோ. இதைச் சாப்பிடுங்கள்" என்று காபி டம்ளரை நீட்டினுள் என் மனைவி.

"ஏன் அப்படிச் சொல்கிருய், இராஜாஜியும் நாமும் நாருண்டுகள் வாழ்வோம்" என்றேன் நான்.

இராஜாஜி காபியைந் பெற்றுச் சுவைத்துக் கொண்டே "நீங்கள் இந்த வீட்டைக் கட்டியிருக்கக் கூடாதெதன நான் அப்போதே நினைத்தேன். இது வீண் பொருமைக்கு இடந்தரும் என்று என் மனதிற் பட்டது. அது இப்போது மெய்யாகிவிட்டது" என்ருர்.

அவர் மேலும் என்ன சொல்லப் போகிருரென்று நானும் என் மனைவியும் அவர் முகத்தைப் பார்த்துக் கொண்டே நின்ருேம்.

சென்ற வாரம் நான் வர்தா சென்றிருந்தேன் இந்த உங்களுடைய வீட்டின் மதிப்பை அதிகரிக்கச் செய்ய வேண்டும் என்ற நோக்கத்துடன் தான், நீங்கள் காந்தி நகரில் மத்திய கதர் ஸ்டோர் கட்ட எத்தனித்த தாக யாரோ காந்தியிடம் சொல்லியிருக்கிருர்கள்... என்று இராஜாஜி சொல்லி முடித்தார்.

"இது என்ன அநியாயம். காந்தியார் தீர ஆலோசியாமல் அதை மெய்யென நம்பியதால்தான் மத்திய கோடவுனை நான் கட்டக்கூடாதெனத் தடுத்து விட்டார் என்பது இப்போது புரிகிறது. இந்தப் பிர தேசத்தில் நான் நிலம் வாங்கியபோது ஏக்கர் இரு நூறு ரூபாயாக இருந்தது. இப்போது ஆஷர் டெக்ஸ்-டைல்ஸ் நூற்பு மில் கட்டிய பிறகு, நெடுக வீடுகளும் கடைகளும் கட்டிடங்களும் தோன்றிவிட்டன. ஆத லால் காந்தி நகரில் நான் கட்ட எத்தனித்த ஒரு

கட்டிடத்தால் எந்தவித மாறுதலும் ஏற்பட்டுவிடாது" என்று கூறினேன்,

இராஜாஜியுடன் அன்று நான் ஈரோடு சென்று, அதற்கடுத்த நாள் காந்திநகர் திரும்பியதும் முதற் காரியமாக ராமநாதனுக்கு ஒரு கடிதம் எழுதி எனது வீட்டை அவருக்கு இஷ்டமான தொகைக்கு விலைக்கு வாங்கிக்கொள்ளுமாறு தெரிவித்தேன்.

அவர் தேவையில்லையென்று சொல்லிவிட்டார்.

அதன் பின்னர் எனது நண்பர் திருப்பூர் ஜூபிடர் பிக்சர்ஸ் எம். சோமசுந்திரத்தைக் கூப்பிட்டு "இந்த வீட்டை நான் 24 மணி நேரத்துக்குள் விற்றாக வேண்டும். விலையைப்பற்றி அக்கரையில்லை. யார் என்ன விலை கோரினாலும், முதலில் கேட்பவருக்கு விற்று விடவேண்டும்" என்று தெரிவித்தேன்.

அன்றிரவு சோமசுந்தரம் ஒரு ஆளுடன் வந்தார். அந்த ஆள் என் வீட்டை ஐயாயிரம் ரூபாய்க்கு வைத்துக்கொள்வதாகச் சொன்னார். நான் சரியென்று சம்மதித்தேன்.

"அய்யோ இதென்ன அநியாயம். பன்னிரண்டாயிரத்துக்குக் கட்டிய வீட்டையும் தோட்டத்தையும் திடீரென்று ஐயாயிரத்துக்குக் கொடுப்பதாகச் சொல்கிறீர்களே. உங்களுக்குப் பைத்தியமா? என்றாள் எனது ஆருயிர்த் துணைவி.

"ஆம் பைத்தியம்தான். மிகச் சரியாய்ச் சொன்னாய்! பணப் பைத்தியம் அல்ல. தன்மானப் பைத்தியம்! காந்தியுடனும் இராஜாஜியுடனும் நான் கடந்த இருபதாண்டுகளாகப் பழகியது எதற்கு? இந்தத் தன்மானப் பைத்தியம் பிடிக்கத்தான். நீ பேசாதே. சும்மா இரு" என்று அதட்டினேன்.

வீடு கேட்டவர் ஐந்நூறு ரூபாய் அட்வான்ஸ் தொகை நீட்டினர்.

"அட்வான்சும் அச்சாரமும் வேண்டாம். நான் சொன்னல் சொன்னதுதான். நாளை காலை பத்து மணிக்குச் சாபா காகிதத்துடன் வாரும்—போம்" என்று கூறிவிட்டேன்.

மறுநாள் காலை எட்டு மணிக்கு என் வீட்டின் கீழ் புறமுள்ள தோட்டத்து அம்மணி, புஷ்பாத்தாள் என்ற பெண்ணரசி, திருப்பூர் ஆஸ்பத்திரி டாக்டருடன் என் வீட்டுக்கு வந்தார்.

"அய்யா! நீங்கள் வீட்டை விற்பதாகக் கேள்விப் பட்டேன்" என்ருர் புஷ்பாத்தாள்.

"ஆம்."

"டாக்டருக்கு இந்த வீடு வேண்டுமாம். எட்டா யிரத்துக்கு வைத்துக்கொள்வதாகச் சொல்கிருர்."

"உத்தமபாளையம் ராமுவைக் கடந்த இரவு சோமு அழைத்து வந்தார். ராமு ஐயாயிரத்துக்குக் கேட் டார். சரியென்று சொல்லிவிட்டேன்."

"எக்ரிமென்ட் போட்டாய்விட்டதா?"

"இல்லை."

"அட்வான்ஸ் வாங்கினீர்களா?"

"இல்லை."

"அப்படியானல் டாக்டரிடம் எட்டாயிரம் வாங் கிக்கொண்டு கொடுப்பதில் என்ன தடை?"

"என் வாய்ச் சொல்தான் தடை! காந்தியார் இங்கே மத்திய கோடவுன் கட்டுவதற்கு அநுமதி கொடுத்துவிட்டு, அதைக் கட்டினல் இந்த வீட்டின்

மதிப்பு உயர்ந்துவிடும் என்று யாரோ சொல்லக் கேட்டு''...அதற்குமேல் என் வார்த்தை ஓடவில்லை.

புஷ்பாத்தாளும், டாக்டரும் திரும்பி எனது வாசலைக் கடக்குமுன் திருப்பூர் போட்டோகிராபர் மகாதேவும் அவருடைய தம்பி துகாராமும் ஓடிவந்து ஒரு தந்தியை என்னிடம் கொடுத்தார்கள்.

பெங்களூரிலுருந்து, துகாராமின் மாமனாரிட மிருந்து வந்திருந்த தந்தி...என் வீட்டை பதினோரு யிரத்தி ஐநூறு ரூபாய்க்கு வாங்கும்படி அத் தந்தியில் கண்டிருந்தது.

எனது வீடு கட்டிய கணக்குகளையெல்லாம் மகா தேவிடம் காட்டி, 11500 ரூபாய் செலவு செய்திருக் கிறேன். இத்தொகைக்கு வீட்டை விற்றுவிடத் தயார் என்று சில தினங்கட்கு முன் சொல்லியிருந்தேன்!

மகாதேவும் துக்காராமும் ஏமாற்றத்துடன் திரும்பிச் சென்றார்கள்.

என் வீட்டை ஐயாயிரத்துக்கும், அவ்வீட்டிலிருந்த கட்டில், மேஜை, அலமாரிகள், ரேடியோ, சித்திரங்கள் படங்கள் முதலிய சகலத்தையும் ஐந்நூறு ரூபாய்க் கும் ராமுவுக்கே கொடுத்துவிட்டு, சர்க்கா சங்கத்தி லிருந்து கிடைத்த பிராவிடண்ட் பண்டு தொகை ஆயிரத்தைந்நூறும், பெற்றுக்கொண்டு, என் துண்டை உதறித் தோளில் போட்டுக்கொண்டு, காந்தி நகரை விட்டு வெளியேறினேன்.

# 18

## சர்க்கா சங்கத்தைவிட்டு விலகியபின் மகாத்மா காந்திக்கு நானெழுதிய நான்கு கடிதங்கள்

## தாங்கள் இறப்பதால் உலகில் சாந்தி தவழுமா?"

### முதற் கடிதம்

காந்திபுரம்
கோயமுத்தூர் 6-11-1944

பேரன்பிற்குரிய பாபு,

தாங்கள் உபவாசம் இருக்கப்போவ தறிந்து மனம் குழம்புகின்றேன்.

இன்று நடைபெறும் கோர யுத்தம் பற்றியும், பெருகிடும் இரத்த வெள்ளம் பற்றியும், உலகத்தாரின் கவனத்தைக் கவரும் நோக்கத்துடன் தாங்கள் உபவாசம் தொடங்குவதாக இருக்கலாம்.

யுத்த களத்திலே எத்தனை லட்சம் பேர்கள் இறந்து போனார்கள்! யுத்தத்தின் விளைவாகப் பட்டினியால் மடிந்த மக்களின் தொகை எத்தனை! தாங்க முடியாத மனத்

துயராலும் கஷ்டங்களாலும் வேதனையுறும் ஆண் பெண் சிறுர்கள் தொகை எத்தனை!

இத்தனை கோடி மக்கள் செய்த பிராணத் தியாகம் போதாதா?

தாங்கள் உயிர்வாழ்ந்திருப்பதன் மூலம் மனித சமுதாயத்துக்குச் சிறப்பான சேவை செய்ய முடியும். சாவதால் தாங்கள் செத்தோரின் தொகையில் ஒன்று அதிகமாக்கப் போகிறீர்கள்—அவ்வளவு தானே!

அதனுல் தாங்கள் மனம் சாந்தியுறலாம். ஆனுல் உலகத்தில் சாந்தி தவழுமா?

தங்களை என்றும் நேசிக்கும்
அய்யாமுத்து

இக்கடிதம் மகாத்மாவைச் சேர்ந்ததென்பதற்கு அடையாளமாக அவரது காரியதரிசி ஸ்ரீ பியாரிலாலிடமிருந்து கீழே காணும் கடிதம் வந்தது.

சேவாகிராமம்
8-11-44

பிரியமுள்ள நண்பரே!

காந்திஜிக்குத் தாங்கள் எழுதிய கடிதம் வந்துசேர்ந்தது. அதற்காக வந்தனம்.

தங்களன்புள்ள,
பியாரிலால்

## இரண்டாவது கடிதம்

# இட்லி வாங்கச் சென்றவன் மாவரைத்தல் கூடுமா?

238-ஒப்பணக்காரத் தெரு,
கோயமுத்தூர், 24-1-46.

எனதன்புள்ள பாபு,

அகிலபாரத சர்க்கா சங்கத்தில் கதர் வாங்குபவர்கள் ஒரு ரூபாய் கதருக்கு ஒரு அணு மதிப்புள்ள நூல் கொடுக்கவேண்டும் என்று தாங்கள் தெரிவித்துள்ளீர்கள்.

தமிழ்நாடு சர்க்கா சங்கத்தால் ஆண்டொன்றுக்குச் சுமார் முப்பது லட்சம் சதுர கெஜம் கதர்தான் உற்பத்தி செய்யமுடிகிறது.

எனவே அச்சங்கம் சுமார் ஒரு லட்சம் பேர்களின் கதர்த் தேவையைத்தான் பூர்த்தி செய்ய முடிகிறது.

ஆனால் தமிழ்நாட்டிலுள்ள பத்து ஜில்லாக்களிலும் கதருடுத்துவோர்கள் சுமார் பத்து லட்சம் பேர்கள் இருக்கிறார்கள்.

எனவே கதருடுத்துவோரில் பத்து சதம் விகிதத்தினரே சர்க்கா சங்கத்தின் சேவையைப் பெறுகிறார்கள். மீதமுள்ள தொண்ணூறு சதத்தினர் இதர கதர் வியாபாரிகளையே நாடுகின்றனர்.

கதருக்குத் தற்சமயம் என்றுமில்லாத அளவு கிராக்கி ஏற்பட்டுள்ளது. அதை அநுசரித்து வியாபாரிகள் நூற்போர், நெய்வோர் கூலிகளைக் கண்ணைமூடிக் கொண்டு உயர்த்திக் கதர் உற்பத்தியைப் பெருக்கி வருகிறார்கள்,

சர்க்கா சங்கம் தன்னிடமுள்ள நூற்ப வருக்கும், அவர்கள் குடும்பத்தாருக்கும் சுய தேவைக்காக கதர் வழங்கும் திட்டத்தை அடியோடு கைநழுவ விட்டார்கள். இத்திட்டம் 1938, 1939, 1940-ம் ஆண்டுகளில் என்னால் வெற்றிகரமாக அமல் நடத்தப்பட்டதைத் தாங்கள் அறிவீர்கள்.

கைமணைகளில் பருத்தி அரைப்பதைச் சர்க்கா சங்கம் அறவே விட்டுவிட்டு, ஜின்னிங் பாக்டரிகளில் அரைபடும் பஞ்சை வாங்கி நூற்பவர்களுக்கு கொடுத்து வருகிறது.

எனவே தற்சமயம் சர்க்கா சங்கத்தால் தயாரிக்கப்படும் கதருக்கும், வியாபாரிகள் உற்பத்தி செய்யும் கதருக்கும் இடையே எத்தகைய தாரதம்மியத்தையும் பொது ஜனங்களால் காண முடியவில்லை.

தமிழ்நாடு சர்க்கா சங்கம் தன்னிடமுள்ள சாயப் பவுடர்களையும் கெமிக்கல்களையும் கள்ளச் சந்தையில் விற்று வருகிறது. தனக்குத் தேவையானவற்றையும் கள்ள மார்க்கட்டில் வாங்குகிறது

திருப்பூர் காந்தி நகரில் நான் ஒரு கட்டிடம் கட்டுவதால் நூற்போர் நீதி பாழாகுமெனத் தாங்கள் தடுத்தீர்கள். இன்று அதே இடத்தில் பல கட்டிடங்கள் கட்டப்படுவதைத் தாங்கள் எக்காரணத்தால் அநுமதித்தீர்கள் என்பது தெரியவில்லை.

தமிழ்நாடு சர்க்கா சங்கத்தின் மூலதனத்தைக் குறைந்த பட்சம் இருபத்தைந்து லட்ச

மாக அதிகரிக்க வேண்டுமென நான் கருதுகிறேன்.

உற்பத்தி செய்பவன் உண்டு உடுத்தியது போக எஞ்சியதை விற்கவேண்டும் என்ற நியதி சரியானதே.

உழுது பயிர் விளைப்போருக்கு உணவில்லாத நிலமை ஏற்படக்கூடாது.

ஆனால் உண்பவரெல்லாம் உழவேண்டும் என்ற நியதி ஒவ்வாது. அதேபோல் உடுப்போரெல்லாம் நூல் நூற்கவேண்டுமென்ற சட்டமும் குற்றமாகும். எனவே ஒரு ரூபாய்க்குக் கதர் வாங்குவோர் ஒரு அணு நூல் தரவேண்டுமென்பதும் நியாயமில்லை.

பல்வேறு துறைகளில் உழைப்பவர்களுக்கு சம்பளம் நாணய ரூபத்தில் தரப்படுகிறது. உழைப்பை நல்கியதற்கு அந்த நாணயம் தான் அடையாளம். அந்த அடையாளத்தைப் பெற்றுக் கொண்டு உழைப்பவன் கேட்கும் பொருட்களைக் கொடுக்கச் சமுதாயம் உறுதியும் பொறுப்பும் மேற்கொண்டுள்ளது. அந்நிலையில் கதருக்குப் பணம் கேட்பதுதான் நீதியாகுமே ஒழிய நூல் கேட்பது எப்படி நியாயமாகும்?

நூற்ருல்தான் கதர் கொடுப்பேன் என்று தாங்கள் சொல்வதுபோல ஓட்டல்காரனும் ஆட்டுக்கல்லில் அரைமணி நேரம் மாவு அரைத்தால்தான் இட்லி கொடுப்பேன் என்று சொன்ருல் அது எப்படியிருக்கும்?

தங்களன்புள்ள
**அய்யா முத்து**

### மூன்றாவது கடிதம்

## சமுதாய அமைப்பு மாறவேண்டும்

கோயமுத்தூர்
29-1-46

எனதன்புள்ள பாபு,

மனிதனுக்கு மனிதன் பரஸ்பரம் சேவை புரிவது கண்யமானது. ஆனால் மனிதனிடம் மனிதன் இரப்பதும், பிச்சை கொடுப்பதும் கண்யமாகத் தோன்றவில்லை.

எல்லோரும் உழைத்து உண்ணவே ஆண்டவன் இவ்வுலகினைப் படைத்திருக்கிறான்.

எல்லோரும், கல்வியும், தொழிற்பயிற்சியும், இல்லமும், உடையும், உணவும், பிற நலன்களும் பெறத்தக்க வகையில் ஜன சமுதாய அமைப்பு இருக்கவேண்டும்.

சிலர் இரந்தும், பட்டினி கிடந்தும், தெருவோரங்களிலும் வாடி, வதங்கி, வாழ வேண்டிய நிலைமையை ஜன சமுதாயம் பார்த்துக் கொண்டிருக்குமானால், அது ஆண்டவன் எண்ணத்திற்கு மாறான செயலாகும்.

மக்களில் சிலர் இரந்தே வாழும் நிலமைப் போக்கக் காங்கிரஸ் பிரகடனம் செய்யவில்லை. நிர்மாணத் திட்டங்களிலும் இடம் பெறவில்லை. காங்கிரஸ் மந்திரிகளும் இதில் கவனம் செலுத்தக் காணோம்.

மற்றெல்லா ஒழிப்புகளைக் காட்டிலும், பிச்சைக்காரர்களின் ஒழிப்புக்கு அதிக முக்யத்

துவமும் முதலிடமும் அளிப்பது சான்றோர் களின் முழு முதற் கடமையாகவே எனக்குத் தோன்றுகிறது.

இரந்தே உயிர்வாழ வேண்டின் பரந்து கெடுக உலகியற்றியான் என்ற குறள் வாசகம் தாங்கள் அறியாததல்லவே!

தங்களன்புள்ள,
அய்யாமுத்து

### நான்காவது கடிதம்

## கள்ள மார்க்கெட்டில் கதர்

238-ஒப்பணக்காரத்தெரு,
கோயமுத்தூர், 19-8-46.

அன்பார்ந்த பாபு,

மில் நூலுக்கும் மில் ஜவுளிக்கும் கட்டுப்பாடும் பங்கிடும், அதன் விளைவாகப் பற்றாக் குறையும், கள்ள மார்க்கட்டும் நிலவும் செய்திகள் தங்கள் செவிகளை எட்டியிருக்கலாம்.

ஆனால் கதரும் கள்ளமார்க்கட்டில் இடம் பெற்றுள்ள அற்புதமான செய்தியைச் தாங்கள் அறிவீர்களோ என்னவோ எனக்குத் தெரியாது.

கன்ட்ரோல் விலைப்படி பத்து ரூபாய்க்கு விற்கப்படும் மெல்லிய மில் வேஷ்டியொன்று கள்ளமார்க்கட்டில் இருபது ரூபாய்க்குத் தாராளமாக விற்கப்படுகிறது.

இதனால் பல பேர்கள் எந்த வேஷ்டி கிடைத்தாலும் வாங்கியுடுத்தத் தயாராகி விட்டார்கள். கதர் வேஷ்டி கட்டுவதில் ஒரு பெருமையும் பிரக்யாதியுமிருப்பதால், நூதனமாகக் கதருடுத்துவோர் தொகை பெரிய அளவில் பெருகிவிட்டது.

ஆனால் சர்க்கா சங்கத்தினால் இப்புதிய நிலைமைக்கு ஏற்றபடி உற்பத்தியைப் பெருக்க முடியவில்லை.

கோயமுத்தூரிலுள்ள அ. பா. ச. சங்கக் கதர் வஸ்திராலயத்துக்கு மாதம் ஐந்தே ஆயிரம் ரூபாய் மதிப்புள்ள கதர்தான் திருப்பூரிலிருந்து அனுப்பப்படுகிறது. இக்கதரும் வாரம் ஒருமுறை ஆயிரம் ரூபாய்க்கு அனுப்பப் படுகிறது. அது வந்து கடைக்குள் கட்டவிழ்க்குமுன்னே ஜனங்கள் வஸ்திராலயத்தை முற்றுகையிட்டு, அள்ளிக்கொண்டு போய் விடுகிறார்கள்.

அடுத்தநாள் கதர் வாங்க வருபவர்கள் கள்ளச் சந்தைக்குத்தான் போகவேண்டும்.

மில்நூல் நெசவு செய்யும் கைத்தறி நெசவாளர்களுக்குப் பெர்மிட் வழங்கப்பட்டுள்ளது. ஒவ்வொருவருக்கும் பிரதிமாதமும் இவ்வளவு நூல்தான் சப்ளை செய்யப்படுமென வரையறை செய்யப்பட்டுள்ளது. அவ்வாறு கொடுக்கப்படும் நூல் ஒரு நெசவாளிக்கு நாலைந்துநாள் நெசவுக்குத்தான் போதுமானதாயுள்ளது. பெரும்பாலான நெசவுக்காரர்கள் இந்தக் கோட்டா நூலைக்

கள்ளமார்க்கட்டில் நூலாகவே நல்ல விலைக்கு விற்று விடுதல் எளிதாக இருக்கிறது.

இவ்வாறு வேலையின்றித் திரியும் கைநெசவாளர்கள் கிராமம் கிராமமாக சென்று கைராட்டை நூலை சிட்டமொன்றுக்கு நான்கணுவுக்கு வாங்கிச் சேகரித்து, அதைக் கதராக நெசவு செய்து, சந்தை சாரிகளிலும், வீடு வீடாகவும் கொண்டுபோய் விற்று வருகிறார்கள்.

சர்க்கா சங்கத்தால் நிர்ணயிக்கப்பட்டுள்ள நூல் விலை சிட்டமொன்றுக்கு 0.2.9. சர்க்கா சங்கத்தில் விற்கப்படும் நான்கு முழ வேஷ்டியின் கிரயம் ரூ 4.8.0.

ஆனால் தறிகாரர்கள் சிட்டத்திற்கு நான்கணு கொடுத்து வாங்கி நான்கு முழ வேஷ்டியொன்று ஆறு ரூபாய்க்கு விற்று வருகிறார்கள்.

கதருக்கு இத்தனை மவுசும் கிராக்கியும் ஏற்பட்டுள்ளது காணப் பெருமிதம் கொள்கிறேன். எத்தனை கதர் உற்பத்தியானாலும் அத்தனையும் வாங்கியுடுத்த மக்கள் ஆவலாயிருக்கின்றனர். ஆனால் அது கதர் என்பதனால் அல்ல. இன்று துணிப்பஞ்சம் ஏற்பட்டுள்ளதால் அவர்கள் எந்தத் துணி கிடைத்தாலும் வாங்கியுடுத்துகிறார்கள். நாளை யுத்தம் நின்று, கன்ட்ரோல்கள் நீங்கி, மில்துணிகள் சட்டை தாராளமாகத் துவங்கிவிட்டால், கதர் மீது இன்றுள்ள மோகம் தணிந்துவிடும்.

எனக்கு அதிகாரமிருந்தால், மில்துணி களையும், மில் நூல்களையும் கப்பலேற்றிக் கொண்டுபோய் அந்நிய நாடுகளில் போகும் விலைக்கு விற்றுவிடச் செய்வேன்.

அப்போது கைராட்டினங்கள் கிராமக் குடிசைகளில் மட்டுமன்றி மச்சு மாளிகைகளி லும் சுழலவாரம்பித்துவிடும்.

தங்களன்புள்ள,
அய்யாமுத்து

## இந்தியாவுக்குச் சுதந்திரம் வந்தது

ஆம். 1947-ம் வருடம், ஆகஸ்டு மாதம் 14ந் தேதி இரவு பன்னிரண்டு மணிக்குக் கடந்த 150 வருடங்களாய் நம்மை ஆண்டிருந்த வெள்ளையர் அதிகார பீடத்திலிருந்து கீழே இறங்கினர்.

15ந் தேதி காலையில் சூரியன் கீழ்த்திசையில் உதய மாகுந் தருணத்தில் நமது தேசியக்கொடி டெல்லி செங்கோட்டையின் மீது பறந்தது.

கன்னியாகுமரியிலிருந்து வடக்கே இமயம்வரை மக்கள் சுதந்திரத் திருவிழாக் கொண்டாடினார்கள்.

எல்லைப்புறமாகாணம், சிந்து, பாஞ்சாலத்தில் ஒரு பகுதி கொண்ட மேற்குப் பாகிஸ்தானும், வங்கத் தின் ஒரு பகுதி கொண்ட கிழக்குப் பாகிஸ்தானும் பாரத நாட்டிலிருந்து துண்டித்து முஸ்லீம்களுக்குச் சொந்தமாக்கப் பட்டது.

எனினும் எஞ்சிய பாரதம், அதில் வசிக்கும் மற் றெல்லா மதத்தினருக்கும் மதமற்றவருக்கும் சொந்த மான தேசமாயிற்று.

அன்னூர் புளியம்பட்டி மக்கள் கோவையிலிருந்த என்னையும் என் மனைவி கோவிந்தம்மாளையும் கூட்டிச் சென்று சுதந்திரத் திருவிழாவை எங்கள் தலைமையில் கொண்டாடி எங்களைக் கௌரவித்தார்கள். அப்பிரதேசத்தில் நாங்களிருவரும் 1926 முதல் 1931 வரை ஐந்தாண்டுகள் தங்கியிருந்து பல போராட்டங்களுக்குத் தலைமை தாங்கி நடத்தியதற்கு அவ்வூர் மக்கள் எங்களுக்கு நன்றி செலுத்தினார்கள்.

அன்று காலையில் திருப்பூரில் தாலுகா கச்சேரி காம்பவுண்டில் போலீஸ் அணிவகுப்பும், சுதந்திரக் கொடியேற்றமும் நான் தலைமை தாங்க நடைபெற்றது. திருப்பூருக்கும் எனக்கும் இருபதாண்டுகள் தொடர்புண்டு. அந்நகரில் நான் எட்டு ஆண்டுகள் வசித்து, அதன் வளத்துக்கும், புகழுக்கும், பாடுபட்டுள்ளேன். தென்னிந்தியாவுக்கு விஜயம் செய்த வடநாட்டுத் தேசியத் தலைவர்கள் மகாத்மா காந்தி, வல்லபாய் படேல், பாபு இராஜேந்திரப் பிரசாத், பண்டித ஜவஹர்லால் நேரு, சேத் ஜம்னாலால் பஜாஜ் போன்ற பல தலைவர்களைத் திருப்பூரில் நான் வரவேற்று உபசரித்திருக்கிறேன்.

## அண்ணல் எங்கே

சுதந்திரத் திருவிழாவின் போது இந்தியா வெங்கும் நடைபெற்ற கோலாகலங்களில் மகாத்மா கலந்து கொள்ளவில்லை. சுதந்திரம் நமக்குச் சும்மா வரவில்லை.

அஹிம்சா நெறியைக் கடைப்பிடித்து நாம் சுதந்திரம் பெற்ற போதிலும், வகுப்பு வாதப்பேய்கள் தலைவிரித்தாடின. கிழக்கு மேற்கு வங்கங்களிலும், பீஹாரி

லும், பஞ்சாபிலும் இந்து முஸ்லீம்களின் தலைகள் உருண்டன. வீடுகள் தீக்கிரையாயின, பெண்கள் கற்பழிக்கப்பட்டனர்.

மகாத்மா அந்த ரணகளத்துக்குச் சென்றார்.

இந்துக்கள் சூறையாடப்பட்ட நௌகாலியில் கால் நடையாகச் சென்றார். கரங்குவித்து அமைதியை வேண்டினார்.

முஸ்லீம்கள் கொலையுண்ட கல்கத்தா நகரின் கொலைப் பிரதேசத்தில் சென்று தங்கினார். அங்கு பட்டினித் தவங்கிடந்தார்.

அந்நகரில் மேற்கு வங்கத்தின் மு. தலமைச்சரா யிருந்த சுரவர்த்தியெனும் முஸ்லீம் தன்னுயிருக்குப் பயந்து மாறு வேடம் புனைந்து, மகாத்மா தங்கியிருந்த வீட்டுக்குச் சென்று அடைக்கலமானார்.

இச்செய்தியறிந்த இந்து வெறியர்கள் இரண்டா யிரம் பேர்கள் நள்ளிரவில் கத்தி, வேல், கம்பு தாங்கிய வர்களாய் மகாத்மா தங்கியிருந்த இல்லத்தைச் சூழந்து கொண்டு சுரவர்த்தியைத் தங்களிடம் ஒப்பு விக்குமாறு கோஷித்தனர்.

மகாத்மா அக் கலகக் கூட்டத்தின் முன் தோன்றி னார். சுரவர்த்தியைக் காட்டிக் கொடுக்க முடியாதென உறுதி குலையாமல் கூறினார். கொலை வெறியை விட்டுக் குவலயத்தில் நல்லவர்களாய் வாழுங்கள் என்று ஆண்ட வனின் திருநாமத்தாலே வேண்டினார்.

அவர்கள் கலைந்து செல்ல மறுத்தனர். சுரவர்த்தி யின் இரத்தத்தைக் குடிப்போம் என்று கூச்சலிட்டனர்.

"முதலில் என்னைக் கொல்லுங்கள். என் பிணத் தின்மீது நடந்து சென்று சுரவர்த்தியைப் பின்னர் கொல்லுங்கள்" என்றார் மகாத்மா!

காந்தியைக் கொல்ல அவர்கள் மனந்துணிய வில்லை. காந்தியார் இன்னுஞ்சில நாள் இருந்து தொலையட்டுமென்று விட்டு விட்டுச் சென்றுர்கள்.

கிழக்கு வங்கமாகிய பாகிஸ்தானில் இந்துக்கள் பெருவாரியாகக் கொலையுண்டு, அவர்கள் சொத்துச் சுகங்களெல்லாம் சூறையாடப்பட்டு, தப்பியவர்களில் சிலர் கல்கத்தா வந்து தங்கள் சோகக் கதைகளைக்கூறிப் புலம்பியதால், அந்நகரிலிருந்த இந்துக்கள் பல்லுக்குப் பல், கண்ணுக்குக் கண், என்று பழிதீர்க்கும் வெறி கொண்டு முஸ்லீம் பகுதிகளைச் சூறையாடினர்.

நௌகாலியில் அமைதியை நிலை நாட்ட மகாத்மா சென்றிருந்த போது, முதலில் கல்கத்தாவிலும், பீஹாரிலும் முஸ்லீம்கள் வதைக்கப்படுவதைத் தடுத்து நிறுத்திவிட்டு அப்புறம் இங்கு வாருங்கள் என்று ஜின்ஞ சாகேப் முதலானேர் கூச்சலிட்டனர்.

பாஞ்சாலத்திலும் அதே நிலைதான். பாகிஸ்தான் பிரதேசத்திலுள்ள லாகூரில் இந்துக்களின் இரத்தம் ஆருய்ப் பெருகிற்று. லாகூரையடுத்ததும், பாரதப் பிரதேசத்திலுள்ளதுமான அமிர்தசரசில் முஸ்லிம்கள் வஞ்சம் தீர்க்கப்பட்டனர்.

தென்னை மரத்தில் தேள் கொட்டிற்று; பனைமரத்தில் விஷம் ஏறிற்று என்ற கதையாய், கதை கதையாய்க் கலவரங்கள் நடைபெற்றன.

## காஷ்மீரம்

தேசப்பிரிவினையைக் கோரிய காயிதே ஆஜம் முகமதலி ஜின்ஞ Pakistan is a spring board for achiev ing great things பெருஞ்சாதனைகளைச் செய்யப் பாகிஸ்தான் ஒரு விசைப்பலகையாகும் எனப் பகர்ந்தார்.

அதற்கேற்ப பாகிஸ்தான் என்ற விசைப் பலகை மீது நின்று பாகிஸ்தானியப் படைகள் காஷ்மீருக்குள் குதித்தன.

காஷ்மீர் அன்று சுதந்திர நாடாய்த் திகழ்ந்தது. காஷ்மீர் மட்டுமென்ன இந்தியாவிலிருந்த 500 சமஸ்தானதிபதிகளும் அவர்களது சமஸ்தானங்களும் சுதந்திரமாகவே இருங்களெனக் கூறிவிட்டுச் சென்றுவிட்டனர் ஆங்கிலேயர்.

பாகிஸ்தானிலோ பரத கண்டத்திலோ எதில் வேண்டுமானாலும் இணைந்து கொள்ளும் சுதந்திரம் அந்தச் சமஸ்தானாதி பதிகளுக்கிருந்தது.

மேற்குப் பாகிஸ்தானையடுத்துக் காஷ்மீர் ஜம்மு சமஸ்தானமிருந்ததால் முகமதலிஜின்னா அதனைப் பாகிஸ்தானுடன் இணைந்து கொள்ள விரும்பினார். காஷ்மீரை ஆண்டிருந்த இந்து மன்னர் அதற்கிசையவில்லை. எவ்வித மிரட்டுதலுக்கும் அம்மன்னர் பணியவில்லை, பொருளாதாரக் கட்டுப்பாடுகளுக்கும் அசையவில்லை. இறுதியில் எல்லைப்புற மலைசாதி முஸ்லீம்கள் ஆயுதபாணிகளாக்கி காஷ்மீர்மீது ஏவப்பட்டனர்.

காஷ்மீர் மன்னர் இந்தியாவின் உதவியை நாடினார். இந்தியாவுடன் இணைந்தாலன்றி உதவிக்கு வர இயலாதென அவருக்கு அறிவிக்கப்பட்டது. மன்னர் வேறு வழியின்றி இந்திய அரசுடன் இணைந்து விட்டதாகப் பத்திரத்தில் கையொப்பமிட்டு அறிவித்தார். இந்தியத் துருப்புகள் காஷ்மீருக்கு ஆகாயவிமானத்தில் விரைந்தனர். காஷ்மீரில் முன்னேறிய பாகிஸ்தான் படைகளைத் தடுத்து நிறுத்திவிட்டு, 1948 ஜனவரி மூன்றாந்தேதி அமெரிக்காவிலுள்ள ஐக்கிய நாடுகள் சபையில் காஷ்மீர் விவகாரத்தை இந்தியா தாக்கல் செய்தது.

# 55 கோடி ரூபாய்

தேசப்பிரிவினையின்போது இந்தியா பாகிஸ்தானுக்கு 55 கோடி ரூபாய் ரொக்கமாகக் கொடுக்க வேண்டுமென முடிவாகி இருந்தது.

ஆனால் பாகிஸ்தானிலிருந்து பல வகைகளில் இந்தியாவுக்கு முந்நூறு கோடி ரூபாய்களுக்குமேல் வர வேண்டியிருந்தது.

பாகிஸ்தான் தனது ஐம்பத்தைந்து கோடியைக் கேட்டது.

ஐம்பத்தைந்து கோடியைக் கழித்துக் கொண்டு தனக்குச் சேர வேண்டியதைத் தருமாறு இந்தியா சொல்லிற்று.

மகாத்மா 'இன்னு செய்தாரை ஒறுத்தல் அவர் நாண நன்னயஞ்செய்துவிடல்' என்ற குறள்வாக்கியப்படி, இந்தியாவின் பகுதியான காஷ்மீரில் பாகிஸ்தான் குண்டுமாரி பொழிந்து கொண்டிருக்குந்தருவாயில் அதற்கு ஐம்பத்தைந்துகோடி ரூபாயைத் தந்துவிடுமாறு இந்திய அரசிடம் கூறினார்.

இந்திய அரசு இணங்கவில்லை.

ஜனவரி பதிமூன்றுந்தேதி இதனிமித்தம் மகாத்மா காந்தி உபவாசம் மேற்கொண்டார். இது அவர் மேற்கொண்ட பதினைந்தாவது உபவாசமாகும்.

என்னடா சங்கடமென்று இந்தியா பாகிஸ்தானுக்கு ஐம்பந்தைந்து கோடி ரூபாயை வாரிக் கொடுத்தது.

பதினெட்டாம் தேதி பகல் பனிரண்டரைமணிக்கு மகாத்மா தமது உபவாசத்தை முடித்துக் கொண்டார்,

# 1948-ஜனவரி 30ந்தேதி

கோவை, ஒப்பணக்காரத் தெருவில், எனது கடையின் மேல் மாடியில் இருந்த ரேடியோவை மாலை சுமார் 5.45க்குச் சென்று முடுக்கினேன்.

"ஒரு துக்ககரமான சம்பவம்—மகாத்மா காந்தி அமரரானார்."

என்றது அந்த பாழாய்ப் போன ரேடியோ.

அது வேறொன்றும் சொல்லவில்லை, நிமிஷத்துக்கு நிமிஷம் அதே வாக்கியத்தை மீண்டும் மீண்டும் சொல்லிக் கொண்டே இருந்தது.

என் உள்ளம் ஸ்தம்பித்தது.

சில நிமிஷங்களுக்கப்புறம் அந்த ரேடியோ—ஆம் தில்லியிருந்து ஒலி பரப்பிய அந்தக் கருணையற்ற கொடிய ரேடியோ.

மாலை 5-30 மணிக்கு டெல்லி பிர்லா மாளிகையில் பிரார்த்தனைக் கூட்டத்திற்குச் சென்று கொண்டிருந்த மகாத்மாவை ஒரு வெறியன் சுட்டுக் கொன்றான்.

என்ற விவரத்தை அறிவித்தது.

நான் அப்படியே ஸ்தம்பித்துக் கீழே விழுந்தேன்.

ஓவென நான் அலறிய சப்தங்கேட்டு என் மனைவி பறக்கப் பறக்கப் பாய்ந்து வந்தாள்.

காந்தியை யாரோ கொன்றிட்டான் என்று சொல்லிக் கதறினேன்.

என் அன்னை இறந்தபோதும் அழாதயான் அன்று கதறிக் கதறி அழுதேன்.

உலகமெனும் கொலைக்களத்திலே, மீண்டும் ஒரு உத்தமனின் உதிரம் சிந்தப்படவேண்டிய நாள் வந்தது!

நன்றிகெட்ட இவ்வுலகிலே மற்ெருரு வீரனின் சமாதி எழுப்படவேண்டிய நாள் வந்தது!

பிரபஞ்சம் என்ற திரைச்சீலையின்மீது உலகத்தின் நன்றிகெட்ட தன்மை மீண்டும் தீட்டப்படவேண்டிய நாள் வந்தது.

உலகினரின் மூதாதையருடைய பாவச்செயல்களை மீண்டும் அவர்கள் சந்ததியார் செய்ய வேண்டிய நாள் வந்தது!

உலகில், முன்பொரு நாள், வேருேர் இடத்தில், பிறிதோர் மேடையின்மீது நடிக்கப்பட்ட அக்கொடிய நாடகம் மீண்டும் நடித்துக் காட்டப்பட வேண்டிய நாள் வந்தது.

இத்தகைய பேயாட்டத்தில் உலகினர் கொள்ளும் மகிழ்ச்சிதான் என்னே!

சத்திய சொருபிகளால், மெய்மைப்பக்தர்களால், தன்னலமற்ற தியாகிகளால், காலந்தோறும் சிந்தப் படும் குருதியால், உலகக் குழுவினர் கொழுப்படை கின்றனர் போலும்!

உலோபம், கோபம், மதமாச்சர்யம், பேராசை, அகங்காரம், அதிகார டம்பம் படைத்த மக்களால் அன்பு, அழகு, காதல், கல்வி, தயை, வாய்மை, பரோப காரம் முதலிய நற்பண்புகள் வாய்க்கப் பெற்ற மனித ரத்தினங்கள் காலந்தோறும் மாய்க்கப்படுவதும். வாட்டி வதைத்து கஷ்ட நிஷ்டுரங்களுக்கு ஆளாக்கப் படுவதும் இவ்வுலகிலே சர்வசாதாரணமாகப் போய் விட்டதல்லவா?

''காந்தி தரிசனம்''

முடிவுற்றது